ஸ்ரீ நாராயண பட்டதிரி அருளிய

# ஸ்ரீ நாராயணீயம்

## 100 தசகங்கள் கொண்ட முழுநூல்



முல்லை பிஎல். முத்தையா


பிருந்தாவனம்

323/10, கதிரவன் காலனி
அண்ணாநகர் மேற்கு
சென்னை - 600 040

முதல் பதிப்பு : டிசம்பர் - 1994


This Book is Published with the Financial Assistance of TIRUMALA TIRUPATI DEVASTHANAMS under their scheme "AID TO PUBLISH RELIGIOUS BOOKS"

விலை : ரூ. 36-00

அச்சிட்டோர் :
ஸ்ரீ வெங்கடேஸ்வரா அச்சகம்
7/40, கிழக்குச் செட்டி தெரு,
பரங்கிமலை, சென்னை-16.

**உடையார் எனப்படுவது ஊக்கம்; அஃதில்லார்**
**உடையது உடையரோ மற்று**

*(திருக்குறள் 591)*

[ஒருவர் பெற்றிருக்கிறார் என்று சொல்லத்தக்க சிறப்புடையது ஊக்கமாகும். ஊக்கம் இல்லாதவர் வேறு எதைப் பெற்றிருந்தாலும் அதை உடையவராக முடியாது]

* * *

- குருவாயூரப்பனின் பெருமையைக் கூறும் ஸ்ரீ நாராயணீயம் என்னும் புனித காவியத்தை இனிய தமிழில் உருவாக்க வேண்டும் என்ற உள்ளுணர்வு, பத்து ஆண்டுகளுக்கு முன், என் உள்ளத்தில் உதித்தது.
- குருவாயூரப்பன் திருவருளால் இப்பொழுது நிறைவேறுகிறது.
- இந்நூலை உருவாக்குவதற்குப் பன்மொழிப் புலவர் பெங்களூர் என். எஸ். மணி அவர்கள் உறுதுணையாக இருந்தார்.
- இதை வெளியிடுவதற்கு அன்பும் ஆதரவும் அளித்தவர் பேராசிரியர் டாக்டர் ந. சுப்பு ரெட்டியார் அவர்கள்.
- இந்நூல் திருமலை திருப்பதி தேவஸ்தான நிதி உதவி பெற்று வெளியிடப் பெறுகிறது.
- நூலைச் சிறப்பாக அச்சிட்டுத் தந்தவர் ஸ்ரீ வெங்கடேஸ்வரா அச்சக மேலாளர் திரு. வி. முனுசாமி அவர்கள்.
- இவர்கள் அனைவருக்கும் என்னுடைய இதயம் நிறைந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

*323/10*, கதிரவன் காலனி,
அண்ணாநகர் மேற்கு,
சென்னை - *600 040*

**முல்லை பிஎல். முத்தையா**

# ஸ்ரீ நாராயணீயத்தின் பெருமை

- 16-ஆம் நூற்றாண்டில் வாழ்ந்து வந்த, ஸ்ரீ நாராயண பட்டதிரி பாகவதத்தைச் சுருக்கி, ஆயிரத்திற்கும் மேற்பட்ட சுலோகங்களை 'ஸ்ரீ நாராயணீயம்' என்னும் பெயரில் அருளினார்.

- கனிச்சாறு பிழிந்து, கற்கண்டும் பாலும் கலந்து கொடுப்பது போல் அமைந்தது இந்த நாராயணீயம்.

- நாராயணனின் பெருமையைக் கூறுவது 'நாராயணீயம்!'

- புகழ் வாய்ந்த பாகவதம் முழுவதையும் படித்து அறிய இயலாதவர்கள், நாராயணீயத்தை எளிதாகப் படித்து இன்புறலாம்.

- பாகவதத்தில் உள்ள சரிதங்கள் அனைத்தும் இதில் உள்ளன.

- பட்டதிரி ஒவ்வொரு பகுதியையும், குருவாயூரப்பனின் முன்னிலையில் அமர்ந்து பாடியபோது, "இப்படி நடந்ததா குருவாயூரப்பா?" என்று அவர் கேட்க, அப்பெருமான், ஆம் என தலையை அசைத்தானாம். அவனுடைய பெருமையை, அவனே கேட்டு, மகிழ்ந்து தலையை அசைத்தான் என்றால், பட்டதிரியின் வாக்கில், எத்தகைய சிறப்பு இருக்க வேண்டும்!

- 'பக்தி' என்னும் பாலையும் 'ஞானம்' என்னும் கற்கண்டையும் கலந்து பாடி அருளியுள்ளார் பட்டதிரி.

- குருவாயூரப்பனிடம் பட்டதிரிக்கு உள்ள அளவற்ற பக்தியானது. ஒரு எல்லைக்குள் அடங்காதது.

- பிற தெய்வங்கள் அனைத்தும், வெவ்வேறு பொருளை தம் அடியார்களுக்கு வழங்கியுள்ளனர். ஆனால், கண்ணனோ வேறு எவரும் அருளாத முக்திப் பேற்றை வழங்கி, அருள் பாலித்துள்ளார்.

- நாராயணீயத்தின் தொடக்கத்தில், பக்தர்களின் சிறப்பையும், பெருமையையும் கண்டு மகிழலாம் இறுதியில் பக்தியின் பெருக்கை விவரிக்கின்றது.

- தமக்கு அளவற்ற பக்தியை அருளுமாறு வேண்டிக் கொள்கிறார் பட்டதிரி.

- கர்மம், பக்தி, ஞானம் ஆகிய மூன்று வகையான யோகங்களைப் பற்றிக் கூறுகிறார். ஆயினும், பக்திக்கே சிறப்பான இடத்தைத் தருகிறார்.

- சிறந்த அஷ்டாங்க யோகத்தினால் பெறும் இன்பமும், தித்திக்கும் பக்தியினால் சித்தியாகும் என்கிறார்.

- தமக்கு உண்டான நோய் குணம் பெற, பல பகுதிகளில் விண்ணப்பித்துக் கொள்கிறார்.

- அந்த நோயைத் தீர்த்துக் கொள்ளவே, இந்நூலை இயற்றினார் ஸ்ரீ நாராயண பட்டதிரி.



# உள்ளுறை


| | | பக்க எண் |
|---|---|---|
| 1. | பகவான் இயல்பு பெருமை ... | 1 |
| 2. | இனிய திருமேனி, பக்திப் பெருமை ... | 4 |
| 3. | ,, தொடர்ச்சி ... | 7 |
| 4. | அஷ்டயோகங்களை அடைய வழி ... | 9 |
| 5. | விராட புருஷர்களின் தோற்றம் ... | 12 |
| 6. | ஈரேழு லோகங்களிலும் ஆண்டவன் வடிவம் ... | 15 |
| 7. | பிரமன் தவமும் வைகுண்ட தரிசனமும் ... | 17 |
| 8. | பிரளயத்திற்குப் பின்னர் புவியைப் படைத்தல்... | 20 |
| 9. | பிரமன் தவமும் உலகத்தின் தோற்றமும் ... | 22 |
| 10. | படைப்பின் வகைகள் ... | 24 |
| 11. | முதல் அவதாரத்திற்கு முன்னோடி ... | 26 |
| 12. | வராக அவதாரம் ... | 28 |
| 13. | இரண்யாட்சனை அழித்தல் ... | 30 |
| 14. | கபிலர் அவதாரம் ... | 33 |
| 15. | கபிலர் தந்த நற்செய்தி ... | 35 |
| 16. | நர - நாராயணர் மற்றும் தட்சயக்ஞம் ... | 38 |
| 17. | துருவன் சரித்திரம் ... | 41 |
| 18. | பிரிதுவின் கதை ... | 43 |
| 19. | பிரசேதஸ் சரித்திரம் ... | 46 |
| 20. | ரிஷபதேவன் கதை ... | 48 |
| 21. | பல்வேறு கண்டங்களில் வழிபாடு ... | 50 |
| 22. | அஜமிலனின் சரிதம் ... | 53 |
| 23. | சித்ரகேதுவின் சரிதம் ... | 55 |
| 24. | பிரகலாதன் சரிதம் ... | 58 |
| 25. | நரசிம்ம அவதாரம் ... | 61 |
| 26. | கஜேந்திர மோட்சம் ... | 64 |
| 27. | பாற்கடலைக் கடைதல் ... | 66 |
| 28. | கடல் தந்த பரிசுகள் ... | 69 |
| 29. | மோகினி அவதாரம் ... | 71 |
| 30. | வாமன அவதாரம் ... | 73 |
| 31. | பலியை அழித்தல் ... | 76 |
| 32. | மச்ச அவதாரம் ... | 78 |
| 33. | அம்பரீஷன் சரிதம் ... | 80 |

34. இராமாயணம் - அனுமன் சந்திப்பு வரையில்... 83
35. இராமன் - சுக்கிரீவன் நட்பு ... 85
36. பரசுராமன் சரிதம் ... 88
37. கிருஷ்ண அவதாரத் துவக்கம் ... 91
38. கிருஷ்ண அவதாரம் ... 94
39. யோகமாயையின் தோற்றம்
கண்ணன் பிறந்த நாள் விழா ... 96
40. பூதனைக்கு முக்தி ... 98
41. பூதனை உடல் எரித்தல்; கண்ணனுக்கு
விழா எடுத்தல் ... 100
42. சகட அசுரன் வதம் ... 102
43. திருணாவர்த்த வதம் ... 104
44. பெயர் சூட்டல், சோதிடம் பார்த்தல் ... 106
45. பிள்ளை விளையாட்டு ... 108
46. விண்வெளிக் காட்சியளித்தல் ... 110
47. கல்லுரலில் கட்டிவைத்தல் ... 111
48. குபேரனுடைய மக்கள் முக்தி அடைதல் ... 113
49. பிருந்தாவனம் செல்லல் ... 116
50. கன்றாகவும், நாரையாகவும் வந்த பூதங்கள்... 117
51. ஆகாசூரன் வதம் ... 120
52. கன்றுகளை கடத்திச் செல்லல் ... 122
53. தேனுகாசுர வதம் ... 124
54. காளியன் கொடுமை ... 126
55. காளிய நர்த்தனம் ... 128
56. காளியனிடம் கருணை காட்டல் ... 130
57. பிரலம்பாசுரன் வதம் ... 132
58. கொடிய நெருப்பிலிருந்து காப்பாற்றல் ... 134
59. குழலோசை கேட்கிறது ... 136
60. கோபியர் ஆடைகள் கவர்தல் ... 138
61. பிராமணப் பெண்களுக்கு வாழ்த்துரைத்தல்... 140
62. இந்திரனுக்கு பலிகொடுப்பதைத் தடுத்தல் ... 142
63. கோவர்த்தனகிரியைக் குடையாகப் பிடித்தல் ... 145
64. கோவிந்தனாக மகுடம் புனைதல் ... 147
65. கோபியரின் ராச லீலை ... 149
66. ராச லீலை ... 151
67. கண்ணன் மறைந்தும், தோன்றியும் ... 153
விளையாடல் ... 155
68. கோபியருடன் ஒன்று சேரல் ... 157
69. ராச லீலை

| | | | |
|---|---|---|---|
| 70. | சுதர்சன முக்தி | ... | 160 |
| 71. | கண்ணன் கேசவன் ஆகிறான் | ... | 162 |
| 72. | கோகுலத்திற்கு அக்ரூரன் வருகை | ... | 164 |
| 73. | மதுரைப் பயணம் | ... | 167 |
| 74. | மதுரைக்குள் புகுதல் | ... | 169 |
| 75. | கம்சனுக்கு முக்தியளித்தல் | ... | 173 |
| 76. | கோபியருக்கு சேதி அனுப்புதல் | ... | 176 |
| 77. | ஜராசந்தன் படையெடுப்பு | ... | 179 |
| 78. | ருக்மிணியின் தவம் | ... | 183 |
| 79. | ருக்மிணி திருமணம் | ... | 185 |
| 80. | சியமந்தகமணியின் கவர்ச்சி | ... | 187 |
| 81. | நரகாசுரன் வதம் | ... | 190 |
| 82. | பாணாசுரன் வதம் | ... | 193 |
| 83. | பௌண்ட்ரகன் முக்தி | ... | 196 |
| 84. | சமந்த பஞ்சகத்திற்கு யாத்திரை | ... | 198 |
| 85. | ராஜசூய யாகம் | ... | 200 |
| 86. | குருஷ்சேத்திர யுத்தம் | ... | 204 |
| 87. | குசேலர் சரிதை | ... | 208 |
| 88. | மாண்ட குழந்தைகளை மீட்டல் | ... | 211 |
| 89. | விஷ்ணு என்ற தோற்றத்தின் தனித்தன்மை | ... | 215 |
| 90. | வேதத்தின் முடிவு நீயே | ... | 218 |
| 91. | பக்தியின் பெருமை | ... | 220 |
| 92. | கர்மம் கலந்த பக்தி | ... | 222 |
| 93. | இருபத்து நான்கு ஆசிரியர்கள் | ... | 225 |
| 94 | மெய்ஞ்ஞானத்தின் தோற்றம் | ... | 228 |
| 95. | தியான யோகம் | ... | 231 |
| 96. | இறைவன் பெருமை - ஞான யோகம் | ... | 234 |
| 97. | மார்க்கண்டேயர் கதை | ... | 237 |
| 98. | பிரமத்தை வழிபடுதல் | ... | 240 |
| 99. | வேதங்கள் துதிக்கின்றன | ... | 243 |
| 100. | தலைமுதல் பாதம் வரை வருணனை | ... | 245 |


---

# ஸ்ரீ நாராயணீயம்

## தசகம் - 1

### பகவான் இயல்பு பெருமை

பிரம்மம் என்பது மெய்ப்பொருள்; அது முழுமையானது. ஒப்பற்றது. ஆனந்தமாகவும் அறிவாகவும் உள்ளது. அறம் பொருள் இன்பம் வீடு ஆகிய நான்கினையும் அளிக்கவல்லது. உலக மாயையிலிருந்து விடுபட்டது. மக்கள் அனைவரும் கண்டு களிக்கும் வண்ணம் குருவாயூரில் எழுந்தருளியிருக்கிறது. இது நாம் பெற்ற புண்ணியம். (1)

கிடைப்பதற்கு அரிதான பொருள் எளிதில் கிடைத்துள்ளது. மனதாலும் வாக்காலும் உடலாலும் வேறொன்றை வழிபடுவது கேவலம் அல்லவா. ஆனால் பொருள்கள் அனைத்திற்கும் உயிராக விளங்குபவர் குருவாயூரில் இடம் பெற்ற தலைவராம். பிறவித் துன்பத்தைப் போக்க அவரையே உறுதி பூண்ட உள்ளத்தோடு எந்நாளும் போற்றுகின்றோம். (2)

''ஐயனே'' உன்னுடைய அழகுத் திருவுருவம் இராட்சசம் தாமஸம் ஆகிய குணங்களை விட்டு விடுபட்டு விலகி நிற்கின்றது; பஞ்ச பூதங்களும் ஐம்பொறிகளும், சத்துவ குணமும் உருவாகியது என்று வியாசர் அருளுகின்றார். தூய்மைக்குத் தூய்மை சேர்க்கும் நின்

அழகுருவம் அறிவையும் அன்பையும் அடைக்கலமாகக் கொண்டுள்ளது. செவிக்கினியது; சிந்தைக்குகந்தது; எளிதில் அடையத்தக்கது; நல்வினைப் பயனால் கண்டு களிக்கக் கூடியது. (3

என்றும் நிறைந்தது; எல்லையில்லாப் பேரின்ப அமுதத்துககு உறைவிடமாக இருப்பது; எனவே பிரம்மம் கடல் கலக்க முடியாதது. தன்னில் கலந்திருக்கும் ஜீவன் முக்தர்கள் எனும் முத்துக்களால் அணி செய்யப்படுவது; அழகு நிறைந்தது; புனிதமானது. முழுமுதல் கடவுளே சத்துவ குணத்தில் திளைத்த உன்னை மெய்ப் பொருள் அல்ல என்று உரைப்பது பொருந்தாது. உன் அவதாரங்களின் உண்மையை உணர்ந்தோர் அப்படிச் சொல்ல மாட்டார். (4

பிறப்பில்லாப் பெரியவனே; குறையாத வல்லமை படைத்தவனே: வைகுண்டத்தில் இருப்பவனே; செய்யும் தொழில் ஏதுமின்றி இருந்தாலும் கருணைதரும் கடைக் கண் பார்வையைக் காட்டுகிறாய். அதுவே உன் தொழில். பிரகிருதி உன்னிடத்தில் அடங்கியுள்ளது. அப்படி இருந்தும் மாயையால் அப்படி உன்னிடத்தில் அடங்காதது போன்ற தோற்றத்தை அளிக்கிறது. தூய்மை, போன்ற தோற்றத்தை அளிக்கிறது. தூய்மை பகிரங்கள் சத்துவ வடிவம் ஆகியவை பொருந்தியது. அதன் ஒரு பகுதியே உன்னுடைய திருவுருவம்; (

குருவாயூர்க் கண்ணா; கார்மேகம் போன்ற அழகு மேனி, காயாம் பூக்கொத்தைப் போன்று கவர்ச்சியாக இருக்கிறது. அழகே உருக்கொண்டு காட்சியளிக்கின்ற புண்ணியம் யாவும் ஒருங்கே திரண்டு நல்லவர் கண்களுக்குக் காட்சியளிப்பதைப்போல கவினுற விளங்குகிறது. சந்தேகம் இல்லாமல் மகாலட்சுமி உறவாடி விளையாடுவதற்கேற்ற இடமாக இருக்கிறது. நினை

நெஞ்சிலே இருத்துவோருக்கு அமுதமெனப் பெருகிவரும் பேரானந்த வெள்ளத்தில் மூழ்கச் செய்கிறது. ஆகவே நான் உன்னை என்றும் நினைந்து ஏததுகிறேன், (6)

மாயைக்கு அடிபணியாத மகேசா! படைப்பதால் பல உயிர்களுக்கும் பிறவித் துன்பத்தை அளிக்கின்றாய்; எனவே கொடியதென்றெண்ணினேன்; ஆனால் அந்த எண்ணம் இன்று எனக்கில்லை; இவ்வுலகில் (என்னைப்) படைக்காதிருந்தால், அறிவானந்தமான உன் இன்பத் திருமேனியைக் கண்டு கேட்டு உண்டு உணரும் பேரானந்தப் பெருங்கடலை அடையாளம் கண்டு கொண்டிருக்க முடியுமா? (7)

ஹரி! அனைவரும் அடையக்கூடிய, அளவற்ற பலன் வழங்கும் பாரிஜாத மலரே; அடியார்முன் அருட் காட்சி அளிப்பவனே! வேண்டுவோர்க்கும் வேண்டாத வர்க்கும் அறம் பொருள் இன்பம் வீடு எனும் நான்கு நலன்களைக் கொடுப்பவனே: முக்திப் பேரானந்தத்தை அளிப்பவனே; ஆனால் ஏனோ, இத்தனை உயர்ந்த வற்றைக் கொடுக்கும் உத்தமனாக நீ இருக்க, அழியக் கூடிய பொருள்களைக் கொடுக்கும் கற்பக விருட்சத்தை நாடிச் செல்லும் எங்கள் அற்பபுத்தியை என்னென்று சொல்வது? (8)

ஒப்புயர்வற்ற குணங்கள் குடிகொண்டவனே; கூட்டுக்கு உறைவிடமே; சூரன் மரபில் பிறந்தவனே; பிரம்மன் முதலான தேவர், கேட்பவர்க்கு கேட்கும் வரங்களை அளிப்பவர்கள்: ஆனால் அருளாளா; உன்னையே எங்களுக்கு நீ அளிக்கின்றாய். அஷ்ட ஐசுவரி யங்களை அளிப்பதன் மூலம் மக்கள் குலத்திற்கு தலைமை தாங்கி நிற்கின்றனர். ஆனால் இறைவனே நீ அந்த மக்கள் சமுதாயத்திற்கும் மட்டுமன்றி உனக்கும் நீயே ஒரு பெருந்தலைமை ஏற்று இருக்கிறாய். நல்வினைப் பயன்

ஜீவர்கள் உன்னில் திளைத்து இன்பம் அடைகின்றனர். நீ உன்னில் திளைத்துப் பேரானந்தம் அடைகின்றாய். அருளாளா உன்னைத் தொழுகின்றேன். (9)

ஹரி! குருவாயூர்க் கோமகனே! சங்கரன் முதலான கடவுளர்களையும் உன் தலைமையின் கீழ் நட மாடச் செய்பவனே; உலகை அடக்கி ஆட்கொண்ட சங்கரன் முதலானவர்களையும் நீ அடக்கி ஆள்கின்றாய். புனிதனே உன்னுடைய புகழைப் பற்றற்ற பெரியோர் பாடி மகிழ்ந்துள்ளனர். திருமகள் உன் திருமேனியில் இடம் பெற்றிருக்கின்றாள். அனைத்தையும் அறிபவனே பற்று என்பதில்லாதவனே; பகவான் என்ற சொல்லுக்கு இலக்கணமாகத் திகழ்பவனே; (10)

## தசகம் - 2

## இனிய திருமேனி, பக்திப் பெருமை

கதிரவனோடு போட்டியிடுகிறது உனது மகுடம் பரந்த நெற்றி பவித்திரமான திலகத்தால் பெரிதாக விளங் குகிறது. அருள் நிறைந்த கண்கள்; புன்னகை தவழும் செவ்வாய்; எழில் கொஞ்சும் நாசி; கன்னத்தில் சுடர் வீசும் மகர குண்டலங்கள்; மார்பில் கௌஸ்துப மணி மாலை; மார்பில் காட்டு மாலை, முத்து மாலை, ஸ்ரீவத்சம் திகழ்கின்றன. சிறந்த நின் உருவத்தை சிந்தையில் கொண்டு நித்தம் நித்தம் தொழுகின்றேன். (1)

நான்கு கரங்கள், தோள்கள் வளைகளும் தங்கக் காப்பு களும் அணிந்து காட்சித் தருகின்றன. விரல்களில் இரத்தின மோதிரங்கள், சங்கு சக்கரம் தாமரை ஆகியவை அந்தக் கரங்களை அலங்கரிக்கின்றன. பொன்னரை நாண் பூண்ட இடை; பீதாம்பரம் தழுவிய உடல்; தாமரை மலர்

ன்ற பாதங்கள், ஐயனே நின் அழகு மலர் வடிவம் ங்கள் அனைத்தையும் போக்கக் கூடியது. அதனை ாறு புகழ்ந்துரைப்பது? நான் அதனைப் பற்றிக் ண்டேன். (2)

மகாவிஷ்ணு! பிரபுவே மூவுலகங்களிலும் போற்றப் பொருள்கள் அனைத்தையும்விட போற்றுவதற்கு து உனது திருவுருவம். மனங்கவர் பொருள்கள் யாவி உயர்ந்தது; இனியவை யாவற்றிலும் இனியவனே. ்கள் யாவற்றிலும் உயர்ந்த அழகே; வியப்பிடைப் ருள்கள் அனைத்திலும் சிந்தைமிக்கவனே; உன் மேனி ் மகிழாதார் இவ்வுலகில் எவரும் இல்லை. (3)

அடியார்க்கு அருளாளா; தலைவா; செல்வத்திருமகள், ல்லா மனங்கவர் நின்மேனியில் பற்றுக்கொண்டவ இருக்கின்றாள். தன்னை இச்சிக்கும் அடியவரைக் இணைபிரியாது இருப்பதில்லை அதனால் உன் அழகு மனியில் அன்புற்றுப் பிரியாது உறைகின்றாள். வ அவளுக்கு நிலையில்லாதவள் என்ற அவச்சொல் ட்டுள்ளது. பாவம், அவள் என்ன செய்வாள்? (4)

திருமகள் மணாளா; உன் அழகில் உள்ளம் இழந்த மற்றவர்களிடத்தே நிலைத்து நிற்பதில்லை. அதற்குச் று பகர்கிறேன் கேட்பாயாக. சிந்தையை உன்னிடத் செலுத்தி உனது அருங்குணங்களில் அன்புபூண்டு ் பரவசம் அடையும் பக்தர்கள் அளப்பரிய ஆனந் ல் மூழ்கி உள்ளனர். உன்புகழ்பாடும் அடியவரிடம் பூண்டு நிலைத்து நிற்கிறாள் திருமகள்; இது மை. (5)

ரப்பிரம்ம வடிவாகத் திகழும் நின் அன்புருவம் கனும் அமுதத்தை அளிக்கிறது. உள்ளம் கவர்வது; தும்தோறும் மீண்டும் மீண்டும் கேட்டுக்கொண்டே க வேண்டும் என்ற ஆசையைத் தூண்டுகிறது.

ஆனந்தம் அடையச் செய்கிறது. உடல் புல்லரிக்கிறது. கண்களில், குளிர்ந்த நீர் அளவற்ற ஆனந்தத்தால் பெருக்கெடுத்து ஓடி மேனியை களைக்கிறது. (6)

இலக்குமி கேள்வனே? யோகங்களில் பக்தி யோகமே தலைசிறந்தது; கர்ம ஞான யோகங்களைக் காட்டிலும் உயர்ந்தது என்பதே வியாசர் முதலான முனிவர்களின் கருத்தாகும்' அழகே உருவான உன்னிடத்தில் அன்பு பூண்டவர்கள் செலுத்தும் பக்தி உலகத்திலுள்ள மக்கள் அனைவரும் எளிதில் அடையக்கூடியதல்லவா? (7)

தலைவனே! செய்ய வேண்டியவற்றைச் செய்ய வேண்டிய முறைப்படி பற்றின்றிச் செய்வதே கர்ம யோகத்தின் இலக்கணமாகும். நெடிதுநாள் சென்ற பின்னரே பயன் அளிக்கக் கூடியதாகும். வேத ஞானத்தால் பெறக்கூடியது. ஐம்பொறிகளாலும் அறிய முடியாதது. மனதிற்கெட்டாதது. அதனால் உன்னிடத்தில் செலுத்தும் அன்பு ஒன்றே நிரந்தரமான இன்பத்தையும் இனிமையையும் அளிக்கவல்லது. (8)

மிகவும் பாடுபட்டு உழைத்துக் களைத்த பின்னரே சிலருக்கு ஞானயோகம் அல்லது பக்தி யோகத்தின் பலன் காண்கின்றனர். அதனால் என்ன பயன்? வேறு சிலர், கட்டுப்பாடான மனத்துடன் வேதாந்த மார்க்கத்தில் முயன்று பிரம்மம் ஆகிய உன்னுடைய வடிவத்தைச் சிந்தையில் இருத்தி, பற்பல பிறவிகளுக்குப் பின்னர் முக்தியடைகின்றனர். (9)

விடிவே; உன் பக்திக் கதைகள் சுவையில் பெருகும் அமுதவெள்ளத்தில் மூழ்குவதால் உன்னிடம் கொண்ட அன்பு உடனுக்குடன் நிறைவேற்றத்தக்கதாக உள்ளது. தூயதான பிரம்ம ஞானம் எளிதில் பெறத்தக்கதாக அமைகிறது. உடனுக்குடன் பயன் தருகிறது. குருவாயூர்க்

கண்ணா! அடியேன் நின் பாதங்களில் அன்புபூண்டு இடையறாது பக்தி செய்யும் பேற்றை எனக்கு அளிக்கவேண்டும். (10)

## தசகம் - 3

## (தொடர்ச்சி)

வரதா! உன் திருநாமம் பாடி, திருவுருவத்தைத் தியானித்து ஆனந்தக் கடலில் மூழ்கி அடியவர் உன் புகழ்க் கதைகளைப் பாராயணம் செய்கின்றனர். உன்னிடத்தில் அவர்கள் காணும் இன்பம் அளவில்லாதது. வேண்டியவற்றை வேண்டியபடி அடையும் அந்தப் பக்தர்கள் பாக்கியசாலிகள் என்று நினைக்கிறேன். (1)

மகாவிஷ்ணுவே! நோயால் நலிந்த நான் உன்னை வணங்கி அடையும் ஆனந்தத்திலும் ஒரு சுயநலம் இருக்கிறது. இது துன்பம் ஆகும். ஆண்டவனே உன் பாதங்களைச் சரணடைந்து பவித்திரமான அவற்றை தியானித்து உன் நாமங்களைச் சங்கீர்த்தனம் செய்தபடி தனியே ஓரிடத்தில் இருக்கவேண்டும் என்று ஆசைப்படுகிறேன்.(2)

உலகில் மனிதராகப் பிறந்தவர்களுக்கு உன்னுடைய அருள் கிடைத்தால், கிடைக்காத பொருள் ஏதேனும் உண்டோ? என்னைப் பிடித்துள்ள துயரச் சுமையை போக்குவது உனக்கு அரிதல்ல உலகில் உன்னுடைய பக்தர்கள் எத்தனைப்பேர், துன்பமே இல்லாதவர்களாக பற்று அற்றவர்களாக ஜீவன் முக்தர்களாக இன்பநிலை அடைந்தவர்களாக இருக்கின்றனர். (3)

ஈசுவரா! நாரதர் போன்ற மகாமுனிவர்கள் புகழ் பெற்றவர்கள். தெரிந்து கொள்ள முடியாத ஞானத்தைப் பெற்றவர்கள். உன் பாத பங்கயத்தை தொழுவதால் துன்

பங்களிடமிருந்து விடுதலை பெற்றவர்கள். எப்போதும் நிறைந்த நின் சச்சிதானந்த வடிவத்தின் காட்சியிலேயே கிடைக்கும் ஈடு இணையற்ற இன்ப வெள்ளத்தில் ஆழ்ந்துள்ளனர். அதனால் அவர்கள் விரும்பியவண்ணம் வாழ்கின்றனர். அதற்குமேல் கிடைப்பதற்குரிய பேறு ஏதேனும் இருக்கிறதா இல்லை? (4)

ஆண்டவனே, அடியவன் கொண்ட பக்தி நிறைவு பெற வேண்டும். உலகத் துன்பங்கள் அனைத்தையும் அது ஒழிக்கவல்லது. அதுபற்றி என் மனதில் ஒரு சிறிதும் ஐய மில்லை. அப்படியில்லையெனில், வியாசர் மொழியும், உன் சொல்லும் வேதங்கள் உரைத்தவையும், தெருமக்கள் பேச்சைப் போன்று பொய்யாகவே போய்விடும். (5)

அருளாளா; உன்னுடைய புகழ்க்கதையைச் சுவைத்துக் கேட்பதால் உண்டாகும் பக்தி ஆரம்பத்திலிருந்து இனிக் கிறது. பக்தி வளர வளர துன்பம் குறைந்து ஒழிகிறது. இறுதியில் எல்லையற்ற பிரம்மானந்தத்தில் லயிக்கும் மெய்ஞ்ஞானத்தை அளிக்கிறது. இதனினும் விரும்பத் தக்கது இவ்வுலகில் உண்டா? (6)

துன்பத்தைப் போக்கி உன் கோயிலை நோக்கி என் கால்கள் நடக்கட்டும். கைகள் உன்னைத் தொழவேண்டும். உன் வடிவை என் கண்கள் காண வேண்டும். உன் மார்பில் தவழும் துளசியின் மணத்தை என் நாசி நுகர வேண்டும் உன் புனிதத்தை என் காதுகளில் விழுந்து கொண்டே இருக்கவேண்டும். அதனால் அதற்கேற்ற ஈடுபாடு ஏற்படும் வண்ணம் என் கை, கால், கண், மூக்கு, செவி ஆகியவற்றுக்கு அருள் புரிய வேண்டும். (7)

துன்பங்களை மறந்து ஆனந்தக் கண்ணீர் பெருக்கி, மயிர்க்கூச்செறிய உன் சச்சிதானந்த வடிவத்தில் என்றும் திளைப்பதற்காக மனக்கவலையாலும் நோயாலும் வாடிய மனதிற்கு வரமளிப்பாயாக; (8)

குருவாயூரப்பா; உன்னை அசட்டை செய்வோர்க்கும் இவ்வுலகில் இன்பம் கொடுக்கிறாய்; ஆனால் நீங்காத அன்பு பூண்ட நானோ மிகவும் துன்பப்படுகிறேன். இதனால் உனக்குப் பழிவரக்கூடாது. வரதா; கம்சனைக் கொன்ற கண்ணா; என் தொல்லை நோய் போக்கி, அடியார்க்கு அடியவனாக என்னை ஆட்கொள்ள வேண்டும். *(9)*

தேவனே; பலபல கூறிப் பயன் என்ன? எப்போது விரும்புகிறாயோ அப்போது எனக்கு அருள் கிடைக்கட்டும். அதுவரையில், அழுது புலம்பால், அறிவுக்குத்தக்கபடி உன் பாதங்களைப் பணிவேன். தோத்திரம் புரிவேன். வழி படுவேன். என் வாழ்நாள் அப்படியே கழியட்டும். *(10)*

# தசகம் - 4

## அஷ்டயோகங்களை அடைய வழி

அப்பனே; உன்னைத் தொழுவதற்கேற்ற சக்தியை என் உடலுக்கும் உள்ளத்துக்கும் அளிப்பாயாக; அஷ்டயோகத்தால் ஏற்படும் மனச்சாந்தியை நான் நிச்சயமாகப் பெறுவேன். உன் அருள் எனக்கு கிடைக்கும் என்பதும் உறுதி. *(1)*

நீராடுதல் பிரம்மசரியம் காத்தல் போன்ற நியமங்களாலும் அடியவராகிய நாங்கள் மனத்தூய்மை அடைகிறோம். பத்மாசனம் போன்றவற்றில் சுகாசனத்தில் உறுதியாக வீற்றிருக்கிறோம். *(2)*

இடைவிடாது 'ஓம்' எனும் பிரணவமந்திரத்தை ஜபித்தும் மூச்சுக் காற்றைக் கட்டுப்படுத்தியும் தூய்மை அடைகிறோம். பொறிகளின் நாட்டங்களிலிருந்து விலகி

உன்னுடைய வழிபாட்டில் அரும்பாடுபட்டு ஈடுபட்டு நிற்கிறோம். (3)

கண்ணால் காண முடியாத உன் திருவுருவத்தை அகக் கண்ணில் நிலை நிறுத்திக் காண்போம். திருவடி தியானத்தின் மூலம் பக்தியில் திளைத்து புதுமனம் பெறுகின்றோம். (4)

உனக்கி அடியவராகிய நாங்கள், தியான யோகத்தில் இடையாது ஈடுபட்டு நீண்டகாலமாகப் பயின்று வந்திருக்கிறோம். அதனால் எங்களுடைய உடலின் உள்ளும் புறமும் வெளிப்படத்தக்க மாற்றங்கள் ஏற்பட்டுள்ளன. உன் அழகு வடிவத்தை அகக் கண்ணால் காண்பது எளிதாக உள்ளது. (5)

ஆண்டவனே; உடல் உறுப்புக்கள் அனைத்தும் உடைய உன் அழகுத் திருவுருவை தியானிப்பதால் ஏற்படும் ஆனந்தத்தில் மிதக்கும் மனதை உடையவர்களாக இருக்கிறோம். அதனால் இன்பச் சுவை கூட்டும் உன் வடிவம் பிரம்மமாக எங்களுடைய மனத்தில் நிலைத்துள்ளது. (6)

லோகநாதா! அந்தப் பிரம்மத்தில் லயித்து தன்னை மறந்த நிலையைச் சமாதி என்பார்கள். அந்தச் சமாதி நிலையை நாங்கள் பெற்று விட்டோம் அதிலிருந்து விடுபட்டாலும், தாரணை போன்றவை மூலம் மீண்டும் மனதை ஒரு வழிபடுத்தி உன்னில் நிலைப்போம். (7)

அரும்பாடுபட்டு, அடிக்கடி முயற்சி செய்து அழகுத் திருமேனியான பிரம்மத்தில் திளைத்து பேரின்பத்தில் மூழ்கி இன்பம் காண்கின்றோம். நாங்கள் அடியவர், ஆட் கொள்ளப்பட்டவர்களிலே முதன்மையானவர் ஆவோம். சுகரும் நாரதரும் எங்களுக்குச் சமம். (8)

பிறப்பில்லாதவனே; தியான சமாதியின்மூலம் வெற்றியடைய விரும்புவோர் மூச்சடக்கும் முயற்சியில் ஈடுபட்டுள்ளனர். பிராண வாயுவை தன் இச்சைப்படி அடக்கிக் கொள்கிறான் மூலக்கனலை மேலே எழுப்பி ஆறு ஆதாரங்களின் வழியாகவே உச்சிக்குக் கொண்டு செல்கிறான். (9)

உடனடியாக முக்தியடைய விரும்புவோன் பூத உடலை விட்டு சூக்கும சரீரத்துடன் முக்தியடைகிறான். படிப்படியாக முக்தியடைய விரும்புபவன் பூத உடலோடு உயரக் கிளம்புகிறான். (10)

உன் அடியவர், அக்கினி, நாள், சுக்கிலபட்சம் ஆகிய வற்றிற்குரிய தேவதைகளாலும் உத்தராயணத்திற்குரிய தேவதைகளாலும் சூரியலோகத்துக்குச் செல்கிறான். மகிழ்ச்சி மிக்கவனாக துருவ நட்சத்திரத்தையும் அடைகிறான். (11)

பின்னர், மஹஸ் என்ற உலகத்தை அடைகிறான். ஆதிசேஷன் மூச்சுக் கனவால் சூடடைவதற்கு முன்னதாக, பிரம்மலோகத்தை அடைகிறான். (12)

பிரம்மலோகத்தில் அல்லது உன்னுடைய லோகத்தில் வாழ்ந்த நிலையில், பிரளயத்தின்போது வீடு பெறுகிறான். தன்னிச்சைப்படி, பிரம்மலோகத்தைவிட்டு வெளியேறி முக்தி பெற்று ஜீவன் முக்தன் ஆகிறான். (13)

விடிவே! நிலம், நீர், நெருப்பு, காற்று, ஆகாயம், மகத் மாயை ஆகிய ஏழும் பிரம்மாண்டத்தைத் திரையிட்டு மறைத்துக் கொண்டிருக்கின்றன. உன்னுடைய அடியவர் ஒவ்வொன்றினுள்ளும் அதனதன் உருவமாகவே ஊடுருவிச் செல்கின்றான். பின்னர் இன்பத்தை அனுபவித்த வண்ணமே உன்னால் தடை உண்டாக்கப்படாத உலகை அடைகிறான். (14)

லோகநாயகா! இவ்வாறு வான், வழி மார்க்கத்தில் சென்றடையும் பேறு பெற்றவன், இவ்வுலகுக்கு திரும்பி வருவதில்லை. (மீண்டும் பிறப்பதில்லை) சச்சிதானந்த வடிவே; குருவாயூரப்பா; உன் புகழ்பாடும் உன்னை நீ இரட்சிக்க வேண்டும். (15)

# தசகம் - 5

## விராட புருஷர்களின் தோற்றம்

குருவாயூரப்பா, உலகில் மகா பிரளயம் ஏற்பட்ட போது மாயை தங்களுடன் ஒன்றி மறைந்தது. மாயை இல்லாததால், அதனால் உருவாக்கப்பட்ட பிர பஞ்சம் இல்லை; வேறு ஒன்றுமே இல்லை. சச்சிதானந்த சொரூபத்துடன் தாங்கள் ஒருவரே தனித்து இருந்தீர்கள். (1)

பிரபுவே! அப்போது தங்களுடைய ஆத்மத்தில் லயித்து திருவுருவின் தியானத்தில் ஆழ்ந்து லீலாசுகத்தில் ஈடுபட்டிருந்தீர்; அந்நிலையில், காலமும் கருமமும், மூன்று குணங்களும், உயிர்க்கூட்டமும் மற்றும் செயல்கள் அனைத்தும் மறைந்து விட்டன. காரணரூபமாக உள்ளவை அனைத்தும் இல்லவே இல்லையென்று வேதங் கள் விளம்பவில்லை. அப்படி இருந்தால் வானத்து மலர் களைப் போன்ற அவை மீண்டும் உற்பத்தியாக முடியுமா? (2)

இரண்டாயிரம் கோடி ஆண்டுகள் முடிந்த பின்னர், படைக்க வேண்டுமென்று தோன்றியது. உன் பார்வை அதற்கெனப் படர்ந்தது. மாயை அசைந்தது. மூவுலங்கள் தோன்றின. அந்த மாயையிலிருந்து காலம், கருமம் உயிர் களில் ஒருங்கியுள்ள சக்தி, செயல்கள் அவற்றின் தன்மை

கள் ஆகிய அனைத்தும் தோன்றின. அவை முக்குணங் களையும் உண்டாக்கி மாயைக்குத் துணைபுரிந்தன. (3)

மாயைக்குப் பக்கத்தில் இருந்தாலும், அந்த மாயையில் அகப்படாமல் தனியே, விலகி நிற்பதால் உன்னை சாட்சி என்று அழைக்கின்றனர். அந்த மாயையினுள்ளே, பலவித வடிவங்களுடன் கூடிய உயிர்ப்பொருள் உன்னையன்றி வேறு எவரும் இல்லை. அந்த மாயை காலம், கர்மம், சுபாவம் ஆசியவைகளால் உணர்த்தப்பட்டும் உன்னால் தூண்டப்பட்டும், அறிவெனும் தத்துவத்தை உண்டாக்கி யது. அந்த அறிவின் விளக்கமே மகத்தத்துவம் என்று கூறப்படுகிறது. (4)

மகாவிஷ்ணுவே! இந்த மகத்தத்துவம், சத்துவம், இராட்சசம், தாமசம் என்ற மூன்று குணங்களின் உருவ மாக இருக்கிறது. இருந்தாலும் சத்துவ குணத்தின் வடிவி லேயே இருந்து கொண்டு நான் என்னும் அறிவை உண் டாக்குகிறது. உன்னுடைய கருணையால் தான் என்ற அகங்காரம் உண்டாகிறது. இருந்தாலும் தாமச குணம் தான் மேலோங்கியுள்ளது. உயிர்களிடையே பாகுபாட்டை உண்டாக்குகிறது. (5)

இந்த அகங்காரம் தோன்றியவுடன், மூன்று குணங் களின் வரிசைப்படி சத்துவ அகங்காரம், இராட்சச அகங் காரம், தாமச அகங்காரம் ஆகிய மூன்று தன்மைகளை அடைந்தது. பிறகு சத்துவ குணத்தை முன்வைத்து, திசை கள், காற்று, சூரியன், வருணன், அஸ்வினிகள், அக்னி, இந்திரன், அச்சுதன், மித்திரன், சந்திரன் பிரம்மதேவன், உருத்திரன், முனிவன் (அதாவது ஆன்மஞானம் பெற்ற வன்) முதலிய இந்திரியங்களில் பற்றுடைய தேவர்களைப் படைத்தது. (6)

முழுமுதல் தலைவனே! குருவாயூரில் இருப்பவனே! உன் வலிமையால், சத்துவ குணத்தின் ஆக்கத்தால், மனம்,

புத்தி, அகங்காரம் ஆகியவைகளுடன், பொருளை உணரச் செய்யும் சக்தியான சித்தம் எனும் வளர்ச்சியுடன் கூடிய சாத்விக அகங்காரத்தை உண்டாக்கியது. அதேபோல் தாமச அகங்காரத்தினால் ஆகாயத்தில் மிகவும் நுண்மைய தான சப்தம் உண்டாகியது. (7)

திருமகள் மணவாளா! தாமச அகங்காரத்தின் அம்ச மான சப்தத்திலிருந்து ஆகாயத்தையும், ஆகாயத்திலிருந்து ஸ்பரிசம் (தொடு உணர்வு), ஸ்பரிசத்திலிருந்து காற்று காற்றிலிருந்து நிறத்தையும், நிறத்திலிருந்து வெளிச்சத் தையும் வெளிச்சத்திலிருந்து சுவையையும், சுவை யிலிருந்து நீரையும், நீரிலிருந்து மணத்தையும், மணத்தி லிருந்து மண்ணையும் படைத்தனை. இப்படித் தொடர்ச்சி யாகச் சப்தத்திலிருந்து ஒன்றன்பின் ஒன்றாக உண்டாகிய அனைத்தின் சேர்க்கையால், அவற்றின் தன்மைகள் பொருந்திய பஞ்ச பூதங்களைப் படைத்திருக்கிறீர்கள். (8)

பஞ்ச பூதங்களையும், பஞ்ச இந்திரியங்களையும் அவற்றில் பற்றுக் கொண்டுள்ள தேவர்களையும் படைத் திருந்தும் அவை தனித் தனியாக இருந்து வந்தன. அதனால் அவற்றிற்கு பிரம்மாண்டத்தைப் படைக்கக் கூடிய சக்தி இல்லை. அந்த நிலையில் தேவர்கள் அனை வரும் இனிய பாடல்களைப் பாடி உன்னை வழிபட்டனர். உனது குணாதிசயங்களைப் பாடி பரவசமடைந்தனர். உடனே நீ அந்த மகத் முதலான தத்துவங்களுக்குள் புகுந்து செயலாற்றும் சக்தியை அளித்து, இவற்றை ஒன்றோ டொன்று இணையும்படி செய்தாய். அதன் பிறகு பிரம் மாண்டத்தைப் படைத்தனை. (9)

குருவாயூர்க்கண்ணா! அந்த பிரம்மாண்டம் அதற்கு முன்னர் உண்டாக்கப்பட்ட நீரில் ஆயிரம் ஆண்டுகளாக மூழ்கி இருந்தது. நீ அதனைப் பிளந்து ஈரேழு லோகங்

களிலும் ரூபமான விடார ரூபத்தைப் பூண்டீர்கள். ஆயிரம் கரங்கள், ஆயிரம் கால்கள் ஆயிரம் தலைகள் கொண்டு சகல ஜீவராசிகளின் வடிவமாகக் காட்சி அளித்தீர்கள். அத்தகைய தாங்கள். என்னை சகலவிதமான ரோகங்களிலிருந்தும் காப்பாற்ற வேண்டுகிறேன். (இந்த இடத்தில், இவ்வாறு பட்டத்ரி வேண்டிக் கொண்டவுடன் அவ்வாறே ஆகட்டும் என்று தமது தலையை அசைத்து ஆண்டவன் அவரது வேண்டுகோளுக்கு அங்கீகாரம் அளித்தார்.) (10)

## தசகம் - 6

## ஈரேழு லோகங்களிலும் ஆண்டவன் வடிவம்

இறைவனே! தேவனே! அதிசயப்படத்தக்க அழகிய உருவத்தை உடையவனே! பதினான்கு உலகங்களாக இருக்கும் நிலையை அடைந்தாய்! உனது பாதங்களைப் பாதாளம் என்றும், பாதத்தின் மேல் பகுதியை இரசாதளம் என்றும், இரண்டு கணுக்கால்களையும் மகா தளம் என்றும் அறிஞர்கள் கூறுகின்றனர். (1)

சக்கராயுதம் ஏந்திய கரத்தை உடையவனே; உன் முழங்கால்கள் தலாதளம் ஆகவும், முழங்கால் மூட்டுக்கள் சுதளமாகவும், தொடையின் கீழ்ப்பகுதி விதளமாகவும், மேல்பகுதி அதளமாகவும் உள்ளன. உன்னுடைய இடுப்பு இந்தப் பூவுலகம் ஆகவும் நாபி ஆகாசமாகவும் மார்பு சுவர்க்கமாகவும் இருக்கின்றன. (2)

உலகத்தையே உன் உருவமாக உடையவனே! ஆண்டவனே! உன்னுடைய கழுத்து மஹர்லோகமாகவும், முகம் ஜனர்லோகமாகவும், நெற்றி தபஸ்லோகமாகவும்,

தலை சத்தியலோகமாகவும் இருக்கின்றன. இப்படி உலக மாகவும் உலகத்தில் உள்ள பல்வேறு பொருள்களாகவும் உண்டாக அழகிய வடிவத்தை உடையவனே உனக்கு என் வணக்கம். (3)

உலகத்தின் மூலமும் முதலும் ஆக இருப்பவனே; ஈசுவரனே; கேசவனே; உனது ஆன்மா வெளிப்படுவதற்காகத் தலையில் உள்ள தொறை வேதங்கள் ஆகவும், தலைமுடி மேகங்களாகவும் உள்ளன. புருவம் இரண்டும் பிரம்மனுடைய வீடாகவும் கண்ணிமைகள் இரவு பகலாகவும், கண்கள் இரண்டும் கதிரவனாகவும் உள்ளன. (4)

ஆண்டவனே? கடைக்கண் பார்வையில் சகல உலகங்களும் உற்பத்தியாகின்றன. காதுகள் திக்குகள்; மூக்கு அஸ்வினி தேவர்கள்; கீழ் உதடு பேராசை; மேல் உதடு வெட்கம்; பற்கள் விண்மீன்கள்; கோரப்பல் இயமன்; (5)

ஈசனே? உன் புன்னகை மாயையாகும்; உன் மூச்சுக் காற்று; நாக்கு, நீர் சொல் பறவைகளின் கூட்டம்; இசைக் கூட்டம் சித்தர் முதலானோர்; வாய் நெருப்பு; கைகள் தேவர்கள்; மார்பகங்கள் தருமதேவைதை; (6)

தாமரைக் கண்ணா! தேவா! உன் புறமுதுகு அதர்மம்; மனம் சந்திரன், இருதயத்தாமரை, மூலப்பிரகிருதி, வயது கடல்களின் தொகுப்பு; ஆடை, காலை மாலை; ஆண்குறி பிரஜாபதி அண்டங்கள், மித்திரன். (7)

அருட்கடவே, உன் இடுப்புப்பகுதி விலங்குகளின் கூட்டம்; கால் நகங்கள் யானை ஒட்டகம், குதிரை முதலியன; நடை, காலம், தாமரை மலர் போன்ற முகத்தில் அந்தணர்கள், கைகளில் க்ஷத்திரியர், தொடைகளில் வைசியர்கள், கால்களில் சூத்திரர் ஆகியவர்களின் பிறப்பிடமாக இருக்கின்றன. (8)

சக்கரம் தரித்தவனே! ஈசனே! உன் செயல்கள் அனைத்தும் உலக வாழ்வு எனும் சக்கரம்; வல்லமை அசுரர்களின் கூட்டம்; எலும்புகள், மலைகள்; நாடிகள் ஆறுகள், மயிர்கள் மரங்கள். இத்தகையது என்று எடுத்துச் சொல்ல இயலாத உன்னுடைய அழகுடன் என்றென்றும் சிறப்பாக இருக்கட்டும். (9)

குருவாயூரப்பனே! உன்னுடைய அழகிய உடல், இப்படி உலகத்தின் வடிவமாக திகழ்கிற கர்ம வழியில் செல்பவர்களுக்கு அத்தகைய கர்மங்களின் முடிவில் தியானத்திற்கு உரியது அவ்வடிவம், என்று அறிஞர் கூறுகின்றனர். நீ அதன் உள்ளமாகவும் உயிராகவும் இருக்கின்றனை. அத்தகைய பெரியோர் உனக்கு என் வணக்கம். நோய்கள் அனைத்தையும் நீயே முன்னின்று தீர்க்க வேண்டும். (10)

## தசகம் - 7

## பிரமன் தவமும் வைகுண்ட தரிசனமும்

பதினான்கு உலகங்களின் வடிவமாகத் தோன்றிய தேவனே! மீண்டும் அந்தப் பதினான்கு உலகங்களுக்கும் மேலே உள்ள சத்திய லோகத்தின் பிரமனாகத் தோன்றினாய். இராட்சச குணத்தின் மாறுபாட்டால் உண்டாகும் பலவகை படைப்புகளில் நாட்டம் உள்ளவன் இரண்யகர்ப்பன் ஆவான். பூமி, சுவர்க்கம், பாதாளம் ஆகிய மூன்று உலகங்களுக்கும் உயிராக இருப்பவன். உன்னை அந்த இரண்யகர்ப்பன் என்று ஞானிகள் கூறுவர். (1)

லோகநாதா! அந்தப் பிரமன் உலகைப் படைக்க நினைத்தான். அதுபற்றி நன்றாக ஆராய்ந்தான், தண்டின் வழியாக கீழே இறங்கி வந்தான். ஆனால், அப்போதும்

மனங்கவர் உன் திருமேனி அழகை அவனால் காணமுடிய வில்லை. (2)

பின்னர், தாமரைத்தண்டில் உள்ள வழிகள் யாவற்றி லும் புகுந்து தேடினான். நூறு ஆண்டுகள் அப்படித் தேடி யும் அவனால் ஒன்றையும் கண்டுபிடிக்க முடியவில்லை. உடனே திரும்பி வந்து, தாமரைமலரில் அமர்ந்தபடி, மனதை நடுநிலைப்படுத்தி, உன் அருளைப் பெறுவதற்கான தவத்தில் ஈடுபட்டான். (3)

மலரில் பிறந்த பிரமன், அப்படி தேவர்களுக்கு உரிய நூறு ஆண்டுகள் தவம் செய்தான். அதனால் உண்டான அறிவால் தூய்மைப் பெற்றான். அதுவரை காணாத, அதிசயிக்கத்தக்க உன்னுடைய அழகு வடிவத்தை ஆதிசேட னின்மீது கண்டான்; மனம் மகிழ்ச்சி கொண்டான். (4)

மகுடம் தரித்த மேனியில், வளை, முத்து மாலை, தோள்வளை, மணிமேகலை அணி செய்கின்றன. இடையில் பீதாம்பரம் காயாம்பூவின் ஒளியைப் பரப்புகிறது மார்பில் கௌஸ்துபமணிமாலை. பிரமன் காணக்கிடைத்த அந்தத் திருமேனியை அடியவனும் தியானிக்கிறேன். (5)

தலைவனே, ஹரியே, வேதங்கள விவரிக்கும் மேன்மை கள் பெற்றவனே, திருமகளின் கணவனே! என் நல்வினைப் பயனால் என் கண்களில் காட்சி தருகின்றாய். 'உலகங்களை உருவாக்குவதற்குத் தேவைப்படும் அறிவையும் திறமையை யும் எனக்குக் கொடுக்க வேண்டும்' என்று பிரமன் என்னை வேண்டிக் கொண்டான். அத்தகைய பெருமையும் அரிய குணங்களும் இருப்பிடமாக இருப்பவனே! என்னையும் நீ காத்தருள வேண்டும். (6)

பிரமனைப் பார்த்து, 'அழிவற்ற மூன்று உலகங்களை யும் படைப்பதற்கான திறமை அடைவாய்! என் அருள் பெற்று மீண்டும் தவம் செய்வாய். என் மூலம் அனைத்தை யும் செய்து முடிப்பதற்கேற்ற பக்தி உண்டாகும்' என்று கூறி மகிழ்ச்சி உண்டாக்கினாய். (7)

பின்னர், பிரமன் தேவர்க்குரிய நூறு ஆண்டுகள் தவம் புரிந்தான். முன்பு இருந்ததைவிட அதிகமான தபோ பலமும் ஞானமும் அடைந்தான். பிரமன் நீரில் காற்றில் அசையும் தாமரையைக் கண்டவன், உனது சக்தியால் அந்தக் காற்றையும் நீரையும் உண்டான். தேவன் பார்த்தான். குருவாயூரப்பா, அத்தகைய தங்களது அழகு வடிவத்தை நானும் காண்பதற்கான ஒளியைக் காட்டுவீராக (8)

நீக்கமற நிறைந்துள்ள குருவாயூரப்பா, கார்மேகம், காயாம்பூபோல் பிரகாசிக்கும் உன் திருமேனி; திக்குகளை மறைக்கக்கூடிய ஒளிபொருந்தியை மந்தகாசமான வதனம்; சங்கு, சக்கரம், கதை, தாமரை ஆகியவற்றை தாங்கியுள்ள அழகுக் கரங்கள்; பிரமதேவனுக்கு அளவற்ற மகிழ்ச்சியை அளித்த அந்த உருவகம் என்னுடைய தீரா வினையை நீக்க வேண்டும். (9)

கமலத்தில் குடியிருக்கும் பிரமதேவன், தங்கள் வடிவத்தைக் கண்டு, உணர்ச்சியுடன் அளப்பரிய மகிழ்ச்சியில் தங்களது பாதாரவிந்தங்களில் விழுந்து வணங்கித் தொழுது பேரன்புடன் தனது கடமையைச் செய்தான். என்னுடைய விருப்பத்தை உணர்ந்து, த்வைதம், அத்வைதம் எனும் தங்கள் சொரூபமான அந்த மெய்ஞ்ஞானத்தை எனக்கு அளிக்க வேண்டும் என்று வேண்டினான். அத்தகைய தங்களை நான் பூஜிக்கிறேன். (10)

சிவந்த பாதங்களில் பணிந்த பிரமதேவனைத் தங்களது கரத்தால் தீண்டி 'உனக்கு ஞானம் தோன்றப் போகிறது. எத்தகைய பந்தமும் இன்றிப் படைப்புத் தொழிலைப் புரிவாயாக' என்று கூறி, மகிழ்ச்சியடையச் செய்து, அவனுடைய மனத்தில் ஒளிந்திருந்து படைப்புத் தொழிலில் ஈடுபடுமாறு தூண்டினீர். அத்தகைய ஆண்டவனே, உடல் நலம் பெறச் செய்ய வேண்டும் (11)

# தசகம் - 8

## பிரளயத்திற்குப் பின்னர் புவியைப் படைத்தல்

இவ்வாறு மகாபிரளயத்தின் முடிவில் பிரம கற்பம் தோன்றியது. பிரமன் அதிலிருந்து வந்தான். வேதங்களை உன்னிடமிருந்து பெற்றான். பின்னர், முன் போலவே படைப்புத் தொழிலைப் புரிந்தான். (1)

அவன் நான்காயிரம் யுகங்களான இரவுகளையும் பகல்களையும் போக்கினான். தான் படைத்த உலகங்களுடன் உன்னிடத்தில் ஐக்கியமானான். அதனால் பிரமனுடைய இரவைக் கற்றறிந்தோர் நைமித்திகப் பிரளயம் என்று அழைக்கின்றனர் (2)

என்னைப்போல உள்ளவர்களுடைய காலைக் கருமங்களைப் போன்ற படைப்பை உன் அருளால் செய்கிறான். பிரம கற்பத்தில் தோன்றி நீண்ட காலம் வாழ்கின்றவர்களின் படைப்பு அன்று உறங்கி விழிப்பதற்குச் சமமாக இருக்கிறது. (3)

பிரமனின் பாதி ஆயுள் ஐம்பது ஆண்டுகளாகும். அது ஆயிரம் கோடி காலமாகும். அதனைக் கடந்து விட்டான் என்பது தெளிவாகத் தெரிகின்றது. பெரியோனே! அவனுடைய கடைசி இரவிலும், மறுநாள் துவக்கத்திலும் உனது லீலைகள் நடைபெற்றன. அவற்றைப் பற்றிக் கூறுவேன், (4)

தாமரை மலரில் உதித்தவன் பிரமன். அவன் பகல் முடிந்ததும் உறங்குவதற்காக உன்னிடத்தில் நடுங்கினான். மூன்று உலகங்களும் உன்னுடைய வயிற்றில் அடங்கின. இந்த உலகம் கடலாக மாறியது. (5)

அதனால் உலகில் தண்ணீர் மட்டுமே மிச்சமாக இருந்தது. ஆனந்த வடிவம் படைத்த நீ, பாம்பணை மீது

பள்ளிகொண்டாய், அறிதுயில் கொண்டிருந்தது உன் உருவம். (6)

உன்னிடத்தில் சக்திகள் அனைத்தும் சங்கமமாகி இருக்கின்றன. உயிர்கள் அனைத்தும் அங்கே ஒய்வு பெறுகின்றன. காலமெனும் சக்தியைப் பார்த்து, 'பிரளயத்தின் முடிவில் என்னைத் தூக்கத்திலிருந்து எழுப்பு' என்று உத்தரவிட்டாய், அன்னவனே, ஆதிசேஷன்மீது பிரளயத்தின் ஆரம்பத்தில் உறங்கினாய். (7)

லோக நாயகா! ஈடு இணை சொல்ல முடியாதவனே, நான்காயிரம் யுகங்கள் உன்னுடைய உறக்கம் நீடித்தது. அதன்பின், காலமெனும் சக்தி உன்னைத் துயிலிலிருந்து விழிக்கும்படி செய்ததல்லவா? (8)

பிரளயத்தின்போது நீர்மீது பள்ளி கொண்டவனே! கண்விழித்தவுடன் உலகங்கள் அனைத்தும் உன்னிடத்தில் அடக்கமாகி இருக்கக் கண்டாய். உன்னுள்ளே நுண்ணிய வடிவில் இருந்த அந்த உலகங்கள்மீது உன் அருள் பார்வை படர்ந்தது. (9)

இறைவா, உனது நாபிக் கமலத்திலிருந்து அதற்குப் பிறகு ஒரு அழகிய தாமரை மலர் தோன்றியது. அது உன்னிடத்தில் ஐக்கியமான பொருள்களின் நுண்மையான வடிவமாகும். (10)

உன் அழகிய உடலிலிருந்து வெளிவந்த அந்தப் பூவின் மொக்கு, நீருக்குள்ளே இருந்து வளர்ந்து நீருக்குமேல் வந்தது. தன்னுடைய வெளிச்சத்தால் நான்கு புறங்களிலும் சூழ்ந்திருந்த இருளை அழித்தது. (11)

உன்னிடத்தில் தோன்றிய அந்தத் தாமரை, வியக்கத் தக்க வகையில் தன் சிவந்த இதழ்களை விரித்தது. அதிலிருந்து பத்மஜன் எனப்படும் பிரமதேவன் உதித்தான். அவனுக்கு இயற்கையாகவே வேதங்கள் அனைத்தும் தெரியும். (12)

பரமாத்மா! மகாவிஷ்ணு! குருவாயூரப்பா, எல்லையற்ற புகழ்மிக்க நீ பத்மகற்பத்தில் பிரமனைப் படைத்தாய். என்னை அண்டியுள்ள நோய்களை நீதான் தவிர்க்க வேண்டும். (13)

# தசகம் - 9

## பிரமன் தவமும் உலகத்தின் தோற்றமும்

நாபிக் கமலத்திலிருந்து கிளம்பிய தாமரையில் வீற்றிருந்த பிரமன், அந்த மலர் எங்கிருந்து வந்தது என்பது பற்றி யோசித்தான். ஆனால் அதனை அறிவதற்கு முடியவில்லை. அதனை எப்படியாவது தெரிந்து கொள்ள வேண்டும் என்ற ஆவலால் உந்தப்பட்டு எட்டுத் திசைகளிலும் தனது முகத்தைத் திருப்பிப் பார்த்தான். அப்பொழுது பங்கய மலர் போன்ற எட்டுக் கண்களையுடைய நான்கு முகங்களைப் பெற்றான். (1)

பெரிய கடலில் அசைந்தாடிய அந்தத் தாமரை மட்டுமே அவனுக்குத் தெரிந்தது. அந்த மலர் தோன்றிய உனது அழகுருவத்தை அவனால் காண முடியவில்லை. பிறகு, துணையொன்றும் இல்லாமல் இந்தத் தாமரையில் இருக்கும் நான் யார்? இந்த மலர் எங்கே, எப்படித் தோன்றியது என்று யோசனை செய்தான். (2)

அறிவாளியான பிரமன், இந்தத் தாமரை பிறப்பதற்குரிய இடம் ஒன்று இருக்கவேண்டும் என்ற முடிவுக்கு வந்தான். பிறகு தனது யோக சக்தியால், அந்தத் தாமரைத் தண்டின் வழியாக கீழே இறங்கினான். ஆனால், உள்ளத்தை மிகவும் கவரக்கூடிய உன் திருமேனியைக் காணவில்லை. (3)

பிறகு தாமரைத் தண்டின் தொளைகளின் வழியாக சென்று தேடினான். நூறு ஆண்டுகள் தேடியும் காணவே

இல்லை. திரும்பி வந்து தாமரை மலரில் இருந்துகொண்டு மனதை ஒரே நிலையில் நிறுத்தி, உன் அருளைப் பெற விருப்பி தவ வலிமை பெற்றான். (4)

தாமரை மலரிலிருந்து தோன்றிய பிரமன் நூறு ஆண்டுகள் தவம் செய்தான். அதனால் அவன் தூயவன் ஆனான். ஆனால் ஆதிசேடனின் உடலின் ஒரு பகுதியில் முன்பு காணாததும் வியப்புக்கு உரியதுமான உன் தோற்றத்தை அகக் கண்ணால் கண்டு பெரிதும் உள்ளம் மகிழ்ந்தான். (5)

உன் தோற்றம் கிரீடத்தாலும் மகுடத்தாலும் விளங்கியது. வளை, முத்துமாலை, தோள்வளை, மணிமேகலை ஆகியவற்றை அணிந்திருக்கின்றது. அழகான பீதாம் பரத்தை உடுத்தியுள்ளது. காயாம்பூவைப்போல் ஒளி வீசுகிறது. கழுத்தில் கௌஸ்துப்பணியை அணிந்திருக் கிறது. இவ்வாறு நீ பிரமனுக்கு காட்சி அளித்த உன் திருமேனியை நான் தியானிக்கின்றேன். (6)

தலைவனே! வேதங்கள் காட்டிய எல்லையற்ற பெருமைகளை உடையவனே! திருமகளின் தலைவனே! என் நல் வினையால் என் கண்களில் இருக்கின்றாய். பிரமன் ''எனக்கு விரைவில் உலகங்களைப் படைப்பதில் செயல் திறமை வாய்ந்த அறிவை அளிக்க வேண்டும் என புகழ்ந்த பல சிறந்த குணங்களை உடையவன் நீ! அத்தகைய நீயே என்னைக் காத்தருள வேண்டும். (7)

'பிரமன் அழிவற்ற மூன்று உலகங்களையும் படைப் பதில் திறமை பெறுவாய் என் அருளைப் பெறுவாய். மீண்டும் தவத்தை மேற்கொள்வாய். என்னிடத்தில் அனைத்தையும் நிறைவேற்றிக் கொடுத்ததற்கு உரிய மிகுதி யான பக்தியும் உண்டாகுக' என்று நீ பிரமனை மகிழ்வித்தாய். (8)

பிறகு பிரமன், நூறு ஆண்டுகள் நிறைவுற தவத்தை மேற்கொண்டான். முன்பு உள்ளதைக் காட்டிலும் மிகவும்

தவவலிமையையும் அறிவாற்றலையும் பெற்றான். பிரளய காலத்தில் நீரில் உள்ள தாமரை மலர் காற்றில் அசைந்து ஆடுவதைக் கண்டான். பிறகு உன் வலிமையின் மிகுதியால் அந்தக் காற்றையும் நீரையும் பருகினான். *(9)*

குருவாயூரப்பா, தாமரை மலரில் எழுந்தருளிய பிரமன், உன் அருளால் மூவுலகையும் படைத்தான். பின்னர் உயிர்களை உண்டாக்கினான் அத்தகைய அருள் மிக்கவனே, என்மீது உனது கடைக்கண் பார்வையைச் செலுத்தி இரட்சிக்க வேண்டுகிறேன். *(10)*

# தசகம் - 10

## படைப்பின் வகைகள்

வைகுண்ட வாசா, உன் அருளால் பிரமன் அதிக சக்தி பெற்றான். பூமியில் மலை, மரம், செடி, கொடிகளையும், மிருகங்களையும், மனிதர்களையும், தேவகணங்களையும், உயிர்கள் குடிஇருப்பதற்கான உடல்களையும் படைத்தான். *(1)*

அவன் மனமயக்கம், அகங்காரம், தான் எனும் மமகாரம், ஆசை, கோபம், பயம் ஆகிய ஐந்து வகையான அஞ்ஞானச் செயல்களை உண்டாக்கினான். தாமஸ குணம் மிக்க பொருள்களைப் படைத்தான். அதனால் வருத்தம் அடைந்தான். அறியாமல் செய்தவற்றைப் போக்க, உன் திருவடிகளின் தியானத்தில் ஆழ்ந்தான். *(2)*

சனகன், சனந்தன், சனாதனன், சனத்குமாரன் ஆகியவர்களைப் படைத்தான். படைப்புத் தொழில் புரியுமாறு அவர்களுக்கு ஆணையிட்டான். ஆனால் உன்னைச் சரணடைவதில் நாட்டமுற்ற அந்த நால்வரும் பிரமனுடைய பேச்சைக் கேட்கவில்லை. *(3)*

அதனால் பிரமனுக்குக் கடுங்கோபம் உண்டாகியது. அதனை வெளிப்படுத்தாமல், உள்ளேயே அடக்கிக் கொண்டான். அப்போது அவனுடைய புருவங்களில் மத்தியிலிருந்து சிவன் தோன்றினான். 'எனக்குப் பெயர் சூட்டு, அமைய இடம் அளிக்க வேண்டும் என்று பிரமனிடம் வேண்டி, உருத்திரன் என்ற பெயர் பெற்றான். (4)

உன்னுடைய கட்டளைப்படி, பிரமதேவன் உருத்திரனுக்குப் பதினோரு பெயர்களையும் பற்பல உருவங்களையும் அளித்தான். விரும்பிய மனைவியரையும் வசிப்பதற்கான இடங்களையும் கொடுத்தான். பிறகு உயிர்களைப் படைக்குமாறு அன்போடு உருத்திரனைக் கேட்டுக் கொண்டான். (5)

உருத்திரன் தனது கணங்களைப் படைத்தான். அவை பார்ப்பதற்குப் பயங்கரமான வடிவங்களோடு மூன்று உலகங்களிலும் நிறைந்தன. பிரமனே அவற்றைப் பார்த்து அச்சப்பட்டான். 'வேண்டாத உயிர்களைப் படைக்காதே, உலக நலம் கருதி தவம் செய்' என்று உருத்திரனுக்குக் கூறினான். (6)

அதனால் உருத்திரன் தவம் செய்யலானான். பிரமன் தனது படைப்பில் ஈடுபட்டான். அவனுடைய உடலில் இருந்து மரீசி, அத்திரி, அங்கிரஸ், கிரது, புலஉறன், புலஸ்தியன், பிருகு, வசிஷ்டர், தட்சன், உன் பாதத்தைச் சரண் புகுந்த நாரதன் தோன்றினர். (7)

பிறகு பிரமன், தருமதேவர் முதலியவர்களையும் கர்த்தமனையும் படைத்தான். சரஸ்வதியைப் படைக்கவும், மோகம் அவனைப் பற்றிக் கொண்டது. சனகன், தட்சன் முதலானோர் தங்கள் தந்தை பிரமதேவனுக்கு அறிவுரை கூறினர். அதனால் அவளைப் பற்றிய அஞ்ஞானம் விலகியது. (8)

நான்கு முகங்களை உடைய பிரமன் தன் முகவட்டத்திலிருந்து வேதங்களையும் புராணங்களையும், வித்தைகளையும் படைத்து, தன் மக்களிடம் அடைக்கலம் புகுந்தான். ஆயினும் படைப்பின் வளர்ச்சியை அடையாமல்; உன் திருவடித் தாமரை மலர்களில் அடைக்கலம் புகுந்தான். (9)

# தசகம் - 11

## முதல் அவதாரத்திற்கு முன்னோடி

குருவாயூரில் கோலோச்சும் தெய்வமே! படைப்புத் தொழில் வளர்ந்ததும் உயிரினங்கள் பெருகியதும், சனகர் முதலான நான்கு முனிவர்களும் தங்களுக்கு உரிய தமது மரியாதைகளைச் செலுத்துவதற்காக வைகுண்டத்திற்கு வந்துச் சேர்ந்தார்கள். (1)

பல்வேறு நிலையங்களைத் தாண்டி ஒப்புவமையில்லாத ஆன்மீக விடுதலைக்குரிய பூந்தோட்டத்தில் வழிபடவும் அதனைச் சூழ்ந்துள்ள எண்ணற்ற ஏரிகளையும், மணி மண்டபங்களையும் கடந்து அந்த மகிரிஷிகள் உள்ள இருப்பிடத்தை அடைந்தனர். (2)

உன்னைத் தரிசிப்பதற்காக ஆவலுடன் உள்ளே நுழைந்த அந்த மகிரிஷிகளை ஜயன் விஜயன் இரண்டு துவார பாலகர்களும் தடுத்து நிறுத்தினர். முனிவர்களின் உள்ளத்தில் கோபம் பொங்கி எழுந்தது. ஆண்டவனே, ஒவ்வொன்றும் உன் சித்தப்படிதானே நடைபெறுகின்றது. (3)

வைகுந்தவாசிகளுக்கு அடுக்காத செயல்புரியும் கொடுமைக்காரர்களே! நீங்கள் அசுரர்களாக மாறி அழியக் கடவீர்களாக!'' என்று அந்த முனிவர்களால் சபிக்கப்பட்ட அந்தக் காவல்காரர்கள் இருவரும் நெடுஞ்சாண் கிடை

யாக அந்த மாமுனிவரின் பாதங்களில் வீழ்ந்து, ஐயன்மீர் அசுர உரு எடுத்த போதும் ஆண்டவனின் பக்தி நெறி களை விட்டு அகலாதிருக்கும் வரம் அருள்க என்று வேண்டிக் கொண்டனர். (4)

நடந்தது என்ன என்பதை அறிந்த தாங்களும் மகா லட்சுமி புடைசூழ தங்கள் கருடனின் தோள்மீது கை வைத்தபடி வைகுண்டத்தின் வாசலுக்கு வந்து நின்றீர். உமது அழகிய திருவுருவத்தைப் பார்த்து அந்த முனிவர்கள் அளவில்லா ஆனந்தம் அடைந்தனர். (5)

உன் புகழைப் பாடி பரவசமுற்ற அந்த முனிபுங்கவர் களைச் சமாதானப்படுத்தியவாறு அவர்களால் சபிக்கப் பட்ட உமது இரண்டு காவலர்களையும் பார்த்து என்னைத் தவிர வேறு கதியில்லை உங்களுக்கு என்று அறிவீர்கள்- மூன்று முறை பிறவியெடுத்து இறுதியில் என்னை வந்தடைவீர் என்று உரைத்தீர். (6)

அதன்பின்னர் உமது காவலாட்களை, திதி என்பாளுக்கும் அவரது கணவரான காசியப முனிவருக்கும் மக்களாக அரக்கர் வடிவில் பிறந்தனர். சூரியன் மேற் றிசையில் சாயும் சந்தியா காலத்தில் தடைசெய்யப்பட்ட நேரத்தில் அந்தப் பிறப்புக்குரிய புணர்ச்சி நடைபெற்ற தால், அவ்விருவரும் அகில உலகங்களையும் அழிக்கக்கூடிய கொடூரம் படைத்தவர்களாகப் புதியதாகத் தோன்றியுள்ள எமன்களைப் போல இருந்தனர். (7)

இரண்யகசிபு, இரண்யாட்சன் என்ற பெயர் கொண்டு கொடூரப் புகழ் பெற்றனர். தமது சக்தியால் தாமே கவரப் பட்டு, உம்மைத் தலைவராக ஏற்றுக் கொண்டுள்ள புவனங்கள் அனைத்தும் தமது கொடுமையால் ஆட்டிப் படைத்தனர். (8)

அவ்விருவரில், பெரியவனும் பலவானுமான இரண்ய கசிபு, போர்த்தாகம் கொண்டு உலகங்களைத் தாக்கத்

தலைப்பட்டான். தன்னை எதிர்த்து நிற்கக் கூடியதகைய உலகங்கள் எவற்றிலும் எவரும் இல்லை என்ற அகங்காரம் அவனை ஆக்கிரமிக்க, கதை ஏந்திய கையுடன் எக்காளமிட்டபடி உலகத்தைத் தாக்கிக் கொண்டு போய் நீருக்கடியில் கொண்டுபோய் சிறை வைத்தான். (9)

வருண தேவனிடம் இருந்து தன்னைச் சந்திக்க வல்லமை படைத்தவர் உன்னையல்லால் வேறொருவருமில்லை என்று அறிந்தவுடன் நாயகனாகிய தங்களைத் தேடி அலைந்தான். குருவாயூரப்பா! பக்தி ஒன்று மட்டுமே வெளிப்படுத்தக் கூடிய கருணைக் கடலே; என்னைத் தொடரும் பிணி நீக்குவதற்கு மனம் கிருபை செய்ய வேண்டுகிறேன். (10)

## தசகம் - 12

### விராக அவதாரம்

படைப்புத் தொழிலில் ஈடுபட்டிருந்த சுயம்புவான மனுவானவர், அதற்குரிய காலம் வரும் முன்னரே, பூமி கடலுக்குள் மூழ்குவதைக் கண்டார். மாரீசி போன்ற மா முனிவர்கள் புடைசூழ, உன்னைத் தொழுத உவகை திரம்பிய உள்ளத்தோடு வீற்றிருக்கும் பிரமனைக் காண சத்தியலோகம் வந்து பணிந்தார். (1)

உயிரினங்களைப் படைத்துப் பெருக்கும் பணியில் நான் ஈடுபட்டுள்ளபோது நீருக்கடியிலே பூமி ஆழ்த்தப் பட்டு விட்டது. தாமரையில் தோன்றியவரே; படைப்பினங்களுக்கு வாழும் இடம் தேவை என்று வேண்டினார். மனுவின் அந்த வார்த்தைகளைக் கேட்ட பிரமன், சங்கடத்திலிருந்து விடுபடுவதற்கான வழியைத் தேடி தங்களைப் பற்றிய தியானத்தில் ஆழ்ந்தார். (2)

இறைவனே! ஆரம்பத்திலேயே நீரெல்லாம் உறிஞ்சிக் குடித்துவிட்டேன். இருப்பினும் பூலோகம் தண்ணீரில் அமிழ்ந்து விட்டது. நான் இப்போது என்ன செய்வேன்? என்று வேண்டி, நின் பாதங்களைப் பிரமன் சரணடைந்த போது, அவரது நாசித்துவாரங்களிலிருந்து, வராகக் குட்டியில் வடிவில் தாங்கள் வெளிவந்தீர். (3)

பிறந்தபொழுது கட்டைவிரல் பருமனாக இருந்தவர், விரைவில் வளர்ந்து யானையின் வடிவத்தைப் பெற்றீர். மேகக்கூட்டங்களைக் கடந்து வளர்ச்சியுற்று செல்வதைக் கண்டு பிரமன் வியந்து போற்றினார். (4)

வராக முடிவில் என் நாசியிலிருந்து புறப்பட்டு வெளி வந்திருப்பது என்ன? அளக்க முடியாத பெருமைகளை யுடைய அவராக இருக்குமோ? இறைவனின் அருட் சக்தி மிகுந்த திருவிளையாடல்களிலே இதுவும் ஒன்றா? மலையைப்போல் உயர்ந்து வளர்ந்த நீர், மீண்டும் மீண்டும் பயங்கரமாக முழக்கமிட்டீர்! (5)

தங்கள் முழக்கத்தைக் கேட்ட, ஜனலோகம், தப லோகம், சத்தியலோகம் ஆகியவற்றில் வாழும் மாமுனிவர் கள் அனைவரும் தங்களைத் தோத்தரித்துப் பாடத் துவங்கினர். புகழ்மாலை சூட்டியதைக் கேட்டு மகிழ்ச்சி யடைந்த மகாபுருஷரே, தங்களது பெரிய வராக வடிவத் தில் நீருக்குள் பாய்ந்தீர்கள். (6)

உடலைத் தழுவிய நீண்ட நீல நிற உரோமங்கள் சிலிர்த்து நிற்க, வளைந்த கொம்புள்ள மூக்கு கீழ்நோக்கி சரிய, பாசுரம் பாடும் பக்தர்களுக்கு பிரமனருள் காட்டும் கண்களுடன் நீருக்குள் பாய்ந்தவுடன் தெறித்த நீர்த் திவலைகள் வானத்தைத் தொட்டன. (7)

பொங்கியெழும் அலைகள், சீற்றமுற்ற முதலைக் கூட்டங்கள். சுழலும திமிலங்கள், நீருக்குள்ளே இருந்து வெளிக்கிளம்பின. பாதாளவாசிகள் பயப்படும் வண்ணம்

பயங்கரமாக முழக்கம் செய்துகொண்டு உன் பிரியத்துக்குரிய பூமியைக் காப்பதற்காக நீருக்குள் பாய்ந்த போது நிகழ்ந்த உத்பாதங்களே அவையாம். (8)

ஆண்டவனே! கொடிய அசுரனால், இரசதள லோகத்தின் ஒரு மூலையில் கொடிய அரக்கனால் ஒளித்து வைக்கப்பட்டிருந்த பூமியைக் கண்ணுற்றீர். வராக வடிவில் இருந்த ஐயனே, அதற்கேற்றாற்போல் உமது வளைந்த தந்தத்தால் பூமிதேவியைத் தூக்கி, எதிர்க்க வந்த அரக்கர்களை துச்சமெனெ வெறுத்தாய். (9)

இறைவனே! விளையாட்டாக வராக அவதாரம் எடுத்தவனே! பெருங்கடலின் ஆழத்திலிருந்து சிறு கோரைப்புல்லி அகழ்ந்தெடுத்துக்கொண்டு வருவது போல, உமது வளைந்த கொம்பில் பூவுலகத்தைத் தாங்கி பயங்கர வடிவத்துடன் வெளிவந்த அருட்கடவே! இந்தக் கொடியவனின் வினை நீங்கிச் சுகம் அடைய அருள் புரிய மாட்டாயா? (10)

# தசகம் - 13

## இரண்யாட்சனை அழித்தல்

உமது நோக்கங்களை ஈடேற்றுவதற்காக அடிக்கடி தூது செல்பவரும் உமது அடியவரும் ஆகிய நாரத முனிவர், தமது முழங்காலை மட்டுமே எட்டக் கூடிய ஆர்த்தெழும் அலைகடலில் தங்களைத் தேடிக் கொண்டிருந்த அசுரன் இரண்யாட்சனை சந்தித்து, அவனது பெருமைகளை உயர்த்தியும் உங்களைத் தாழ்த்தியும் பேச ஆரம்பித்தார். (1)

வல்லமை வாய்ந்தவனே! உன்னையும் மீறி உனக்குச் சொந்தமான பூமியை அந்த மகாவிஷ்ணு எப்படிக்

கவர்ந்து செல்ல முடியும்? என்று நாரதர் கேட்டவுடன் அந்த அசுரன் வெகுண்டெழுந்து, "அந்த விஷ்ணு எங்கே இருக்கிறார். எங்கே? இங்கே? என்று ஆர்ப்பரித்தான். அவர் காட்டிய வழியைப் பின்பற்றி, பூமியைத் தாங்கியவாறு கடலுக்குள்ளே இருந்து தாங்கள் வெளிக் கிளம்பும் இடம் நோக்கி விரைந்து வந்தான். (2)

"சூ! ஈதென்ன காட்டு மிருகம்" என்று அந்த அசுரன் பேசிய கேலி மொழியைப் பற்றிக் கவலைப்படாது, தங்கள் மீது வாரி இறைத்த அவதூறுகளையும் பொருட்படுத்தாது, அசுரனைக் கண்டு அஞ்சி நடுங்கிய பூமியைத் தாங்கிய கொம்பிலிருந்து விடுவித்து கடலில் நிலைநிறுத்தி விட்டு, அந்த அரக்கனோடு போரிடுவதற்குத் தயாரானார். (3)

கதை ஏந்திய கையுடன் அந்த அரக்கன் போருக்கு வந்ததால் தாங்களும் தங்கள் கரத்தில் கதை ஏந்திப் போர் புரிய முன்வந்தீர். அது உமக்குப் பிள்ளை விளையாட்டு. பயங்கரமான கதைகள் இரண்டும் மோதியதால் ஏற்பட்ட ஒலி, விண்ணை எட்ட, அந்த யுத்தத்தை வேடிக்கை பார்க்க விண்ணவர் யாவரும் கூடினர். அப்போது பொழுது சாய்வதற்கு முன்னர், அரக்கர்களைக் கொல்ல வேண்டும் என்று பிரமன் உரக்கக் கூவினார். (4)

சொல்வதற்கு விந்தையாக இருக்கிறது. அந்தச் சண்டையின் ஒரு கட்டத்தில் அரக்கன் அடித்த அடி, ஆண்டவரே, உமது கையில் தாங்கியிருந்த கதையைப் பூமியில் வீழ்த்தியது. உடனே புன்னகை பூத்த முகத்துடன் அசுரர் குலத்தைக் கருவறுப்பதற்கென்றே உம்மிடம் உள்ள சுதர்சன சக்கரத்தை உமது கரத்தில் வரவழைத்த போது, கண்ட காட்சி என்னே! கோலாகலம்! (5)

மரணதேவனைப் போல் தோற்றமளித்த அந்தக் கொடிய அரக்கன், உம்மைத் தாக்குவதற்கு வீசிய திரி

சூலம், உமது சுதர்சனச் சக்கரத்தால் பொடிப் பொடியாக்கியது. மாயைக்கு இடம் தராத மாயவனே, தன் கரத்தாலும் வேறு மாய்கையாலும் பலவிதமாகத் தங்களைத் தாக்கத் துவங்கினான். பல்வேறு தந்திரத் தாக்குதல்கள் நடத்தினான். (6)

ஆனால் அசுரன் தோற்றுவித்த மாயை யாவும் உமது சுதர்சனச் சக்கரத்தின் முன்னே துகளாகின. பலம் கொண்ட கரங்களால், பின்னர் அவன் உங்களை மூர்க்கத் தனமாக தாக்கத் தலைப்பட்டான். அதனால் அவனது காதுக்கடிப்பாகத்தில் காலால் எட்டி உதைத்தீர். (7)

காலால் பயங்கரமாகத் தாக்கப்பட்ட பயங்கர அரக்கன் வாயிலிருந்து இரத்தம் பீறிட்டு வழிய கீழே வீழ்ந்தான். அவனது வீழ்ச்சியைக் கண்ட முனிவர் அனைவரும் நின் புகழ்ப்பாடிப் போற்றினர். உள்ளத்தில் உவகை பொங்கியெழ வேள்விகளின் முழு உருவான உன்னை அவர்கள் பாடிய வாழ்த்துக்கள் எத்தனை! எத்தனை! (8)

முழு முதற் கடவுளே! வேண்டிய வரம் அளிக்கும் வித்தகனே! வேதங்களின் சந்தமாக உமது தோல் இருக்க குச புற்களைப் போல உடலில் ரோமங்கள் இருக்க, வேள்வித்தீக்குப் பயன்படும் நெய்ப்பானையைப் போல நில விழிகள் காட்சித் தர, நான்கு வகை யக்ஞ புருஷர்களைப் போல உனது நான்கு கால்களும் தோற்றமளிக்க அர்ப்பணத்திற்கும் பயன்படும் கரண்டியைப் போல உன் முகம் மலர்ந்திருக்க, சோமபானம் தாங்கிய பாண்டத்தைப் போல் உன் நா விழுக்க, ஆர்த்தியப் பொருள்கள் அனைத்தும் வைத்திருக்கின்ற சட்டியைப் போல் உன் வயிறு காட்சிதர, பலிக்கு மீந்த பண்டங்களை வைத்திருக்கும் சாமச பாத்திரம் போல் காதுகள் விளங்க, சோம பானமாக நின் விந்து இருக்க உபாசனத்துக்குரிய பொருட்களாக உன் கருத்து காட்சி தர, அப்பனே யக்ஞத்தின் (யாகத்தின்) மொத்த உருவமாகக் காட்சி தந்தனை.' (9)

குருவாயூர்க் கோவிலில் குடி இருக்கும் கொற்றவனே, மாமுனிவர்களின் தோத்திரங்களால் மனம் மகிழ்பவனே! ஆத்மயோக ஆனந்தத்தில் திளைத்து நீ வசிக்கும் இடமான வைகுண்டத்திற்கு உன் அவதார மகிமை அறிந்து போய்ச் சேர்ந்தவனே! அடியனை அல்லல்படுத்தும் இந்தக் கொடிய நோயிலிருந்து என்னைக் காப்பாற்றமாட்டாயா? (10)

# தசகம் - 14

## கபிலர் அவதாரம்

பிரமாவின் புத்திரரான மறு சுவயம்பு தம்முடைய மன்வந்தரகாலம் முடியும் வரையில் எத்தகைய எதிர்ப்புமில்லாமல் அமைதியாக உன்னை நினைத்து உன் புகழ் பாடி அமைதியில் ஆழ்ந்திருந்தார். (1)

சுவயம்புவின் ஆட்சியில் பிரமனின் நிழலில் தோன்றிய பிரஜாபதி கர்தமா உன்னதமான எழிலான நின்னைத் தொழுது பிரமனால் உபதேசிக்கப்பட்டப்படி இனப்பெருக்கத்தில் பத்தாயிரம் ஆண்டுகள் கழித்திருந்தார். (2)

எங்கும் நிறைந்தவரே! நீலவண்ண மேகத்தின் நிறங் கொண்டவரே, புன்முறுவல் பூத்தவதனம்; தாமரை ஏந்திய கரம்; கருட வாகனத்தில் ஏறிக் கர்தமர் முன்னால் காட்சி தந்தீர். (3)

பக்திப் பெருக்கால் உன் புகழ்பாடிப் பரவசப்பட்ட கர்தமரின் கண்பார்வையிலிருந்து மறைவதற்கு முன்னால், அவருக்கு தேவ ஆகுதி என்னும் மனு சுவயம்புவின் மகளை மனைவியாகப் பெறுவாய் என்று ஆசீர்வதித்தாய்; அவள் மூலம் ஒன்பது பெண் குழந்தைகள் பிறக்கும் என்றும் கபிலர் என்ற பெயரில் நீரே அவருடைய பத்தாவது புத்திரராகப் பிறப்பீர் என்றும் இறுதியில் அவர் உம்மை வந்தடைவார் என்றும், அருள் பாலித்தீர். (4)

தங்கள் கட்டளைப்படி நாரதர் கூறிய அறிவுரையின் படி, மனுசுவயம்பு தமது மனைவி சதரூபவதியுடனும் தமது கறபு நிறை மகள் தேவஆகுதியுடனும் அவரது வருகைக்காகக் காத்திருந்த பிரஜாபதி கர்தமரை அணுகினார். (5)

மனுவிடமிருந்து தேவஆகுதி என்ற மாதர்குல மாணிக்கத்தைத் தமது மனைவியாகப் பெற்ற கர்தமர் உமது பக்தியிலேயே பரவசம் அடைந்து வந்தாலும் தேவ ஆகுதியின் அயராத சேவையால், அவளிடத்தும் மிகவும் அன்பு பூண்டு வந்தார். (6)

உம்மீது கொண்ட பக்தியால் பெற்ற சக்தியால், தம்மீது மாறாத காதல் கொண்ட மனையாளுக்கு விண்ணில் செல்லக்கூடிய விமானம் ஒன்றை உருவாக்கி னார். அதில் அழகிய சேடியர் பலர் நிறைந்திருந்தனர். அழகிய வடிவெடுத்துக்கொண்டு அவரும் அந்த விமானத்தி லேறி விண்ணுலகங்களைத் தாண்டி தேவர்கள் பூந்தோட் டங்களில் தேவ ஆகுதியுடன் காதல் புரிந்து வந்தார். (7)

இவ்வாறு நூறு ஆண்டுகளைக் கழித்தபின்னர், ஒன்பது புத்திரிகளைப் பெற்றெடுத்த பின்னர், சந்நியாச வாழ்வை மேற்கொண்டு தமது இறுதி நாட்களை கானகத்தில் கழிக்க வேண்டும் என்று விரும்பினார். இருப்பினும் தமது மனைவியின் விருப்பப்படி, அவர்களது மகனாகத் தாங்கள் பிறப்பெடுக்கும் நாளை ஆவலுடன் எதிர்பார்த்து இல்வாழ்க்கையில் ஈடுபட்டிருந்தார். (8)

கணவரின் உபதேசப்படி, தங்கள் மீது பக்தி பூண்டு தொழுது வருவதில் தேவஆகுதி தன் நாட்களைக் கழித் தாள். உயர்ந்த ஆத்ம ஞானம் பெறுவது எப்படி என்று உலகுக்கு உபதேசிப்பதற்காக அவளுடைய மகன் கபிலராக தாங்கள் அருள் பூண்டு அவதாரம் செய்தீர். (9)

குருவாயூரப்பா! கபிலராகப் பிறந்த நீர் தங்கள் தந்தை கானகம் சென்ற பின்னர் சமயம் தத்துவத்தின் சாறெடுத்துத் தாய்க்கு வழங்கினீர். என்னைப் பிணித்திருக்கும் பிணியிலிருந்து என்னைக் காப்பாற்ற வேண்டுகிறேன். *(10)*

# தசகம் - 15

## கபிலர் தந்த நற்செய்தி

பொறி வாயில்களால் அறியப்படும் பொருட்களின் மேல் ஆசை கொண்ட மனம், அடிமைத் தளையில் வீழ்ந்து அல்லல்படுகிறது. அந்தப் பொருட்கள் அனைத்தும் அழியக்கூடிய பிரகிருதியின் குணங்கள் என்பதை அவை அறிவதில் அந்தப் பற்றுக்களிலிருந்து விடுபெறும்போது அந்த மனம் அழிவற்ற தன்மையைப் பெறக்கூடியதாக அமைகிறது. இறைவனிடத்தில் இடையறாத பக்தி பூண்டால், புலன் ஆசையிலிருந்து விடுதலை பிறக்கிறது. புண்ணிய சீலர்களின் நட்பும் இறைவனிடத்தில் நேசமும் பூண்டு ஒழுகுவதுதான் உலகில் மனிதர்கள் அடைய வேண்டியது ஒன்றாகும். கபில அவதாரத்தில் தோன்றிய நீர், உமது தாய் தேவஆகுதிக்கு இவ்வாறு உபதேசம் செய்தீர். *(1)*

பிரகிருதி, மகாதத்வம், தான் எனும் அகங்காரம் பஞ்ச தன் மாத்திரைகள், பஞ்ச பூதங்கள், அந்தக்கரணம், பத்து இந்திரியங்கள் (ஐந்து கர்ம இந்திரியங்கள், ஐந்து ஜனேந்திரியங்கள்) மற்றும் புருஷன் ஆக இவை இருபத்தி ஐந்து வகைப்படும். அவற்றின் தனித்தன்மைகளைப் புருஷன் உணரும்போது பிரகிருதியின் கட்டுப்பாட்டிலிருந்து அவனுக்கு விடுதலை பிறக்கிறது! என்றும் உமது கபில அவதாரத்தில் தேவஆகுதிக்கு உபதேசித்தீர். *(2)*

புருஷனுக்குப் பிரகிருதியுடன் கொண்ட தொடர்பால், தனக்கு ஆன்மீகத் தனித்தன்மையில் இருந்து பாசப்படுவதில்லை. அப்படியிருந்தால் அவனும் பிரகிருதியில்

ஒன்றாகி விடுவான். மற்றும் அதன் சேர்க்கையால் பாதிக்கப்படுவான். எனினும் என்னிடத்தில் அன்பு பூண்டு மெய்ஞ்ஞானத்தில் ஆழ்ந்த சிந்தனைக் கொண்டு இருக்கும் புருஷன் பிரகிருதியின் பிடிப்பிலிருந்து விடுபடுகிறான் என்றும் கபில அவதாரத்தில் தேவ ஆகுதிக்கு உபதேசித்து அருளினீர். (3)

புலன்களை அடக்குவதன் மூலம் மனம் பரிசுத்தம் அடைகிறது. தியான நிலையில் அமர்ந்திருப்பதற்கு தேர்ச்சி பெற்ற பின்னர், கருட வாகனத்தில் எழுந்தருளி யிருக்கும் எனது திருவுருவை இடைவிடாது தியானம் செய்யவேண்டும். தாமரை மரத்தைப்போல நீலமேக ச்யாமள வர்ணமுடைய வதனத்தையும் பல்வேறு ஆயுதங் களைத் தாங்கி நிற்கும் அலங்கார ரூபத்தை அனுதினமும் தியானம் செய்ய வேண்டும் என்று தேவ ஆகுதிக்கு அருள் புரிந்தீர். (4)

என்னுடைய குண நலன்களை, சிறப்புக்களை விளை யாடல்களை (லீலைகளை) பற்றிக் கேட்பதிலும், புகழ்ந்து பாடுவதிலும் தொடர்ந்து ஈடுபட்டு நீண்ட நாள் பயிற்சி பெறும் பக்தன் பர-பக்தி (பக்தியின் உச்சக்கட்டம்) நிலையை அடைகிறான். அந்நிலையில் புறத்தூண்டுதல் ஏதுமின்றி மனம் தன்னிச்சையாகப் பெருகித் தடைகள் எதனையும் கடந்து கங்கை கடலை நோக்கிப் பிரவகிப் பதைப்போல் பிறப்பு இறப்பு எனும் சம்சார பந்தத்தில் இருந்து அத்தகைய பக்தியின் மூலம் விடுதலை கிட்டுகிறது என்று தேவ ஆகுதிக்கு கபிலர் அவதாரத்தில் அருளீனீர். (5)

தங்களுடைய குடும்பங்களுக்காகவும், நாரிமணிகளின் நல்லுறவை நாடுவதற்காகவும், தத்தம் குழந்தைகளைக் காக்கவும், தம் வாழ்நாள் முழுவதையும் அநியாயமாகவும் கொடூரமாகப் பிறரைச் சுரண்டியும் செல்வம் சேர்ப்பதி லேயே மனிதன் கழிக்கிறான். என்னிடத்துப் பக்தி ஏதும்

ிறி, உலகத்தின் மீது அவர்கள் கொண்டுள்ள பற்றும் நடத்தையும் அவர்களை நரகத்தில் கொண்டு போய்ச் க்கிறது என்று தேவஆகுதிக்கு அவதாரத்தில் ரத்தனை. (6)

திரும்பத் திரும்பப் பிறப்பதற்காக மங்கையின் ப்பையைத் தேடித் தேடி உழன்று ஜீவன் பல சங்கடங் ளச் சந்திக்கிறது. கருப்பையில் இருக்கும்போது கடந்த த்தைப் பற்றிய நினைவு இருக்கிறது. ஆனால் பிறப் நிமித்தம் உண்டாகும் துன்பங்களால் அந்நினைவு ந்து விடுகிறது. குழந்தைப் பருவத்திலும் பிள்ளைப் வத்திலும் பல்வகையான தடைகளைத் தாண்டிச் செல்ல ண்டி இருக்கிறது. இளம்பருவத்தில் மீண்டும் புலன் சையால் கவரப்படுகிறான் என்று கபிலர் அவதாரத்தில் வஆகுதிக்கு உரைத்தனை. (7)

ஒழுக்கசீலமான இல்லறத்தான், பித்துருக்களுக்கும் வர்களுக்கும் பிரியமான அர்க்கியங்களை அளிப்பதன் ம், தென்திசையில் சுவர்க்கத்தை நோக்கிப் பயணமாகி ன். தனது நற்செயல்களின் பலனை ருசித்துவிட்டு டும் மனித வாழ்க்கைக்குத் திரும்புகிறான். விருப்பு றுப்பின்றிக் கடமை ஆற்றுபவர்கள், அவற்றை எனக்கு ப்பணிக்கிறவர்கள், ஒளிபொருந்திய வடபுலம்நோக்கில் ணபட்டு ஜீவன்முக்தி அடைகின்றனர் என்று தேவஆகு த கபிலர் அவதாரத்தில் கூறினீர். (8)

ஆண்டவனே! இவ்வாறு ஆத்மாவின் மெய்ப்பாட்டு லயைப் பற்றி தேவஆகுதியின் மனதில் உறுதிப்படுத் ர். உமது உபதேசத்தின் மூலம் நல்லாசிகளின் மூலமும் பேற்றைப் பெற்ற தேவஆகுதி உன்னைப் போற்றி துதி ட, முனிவர்கள் புடைசூழ அவ்விடத்தை விட்டு ன்றீர். பக்தியோகத்தில் ஈடுபட்ட தேவஆகுதி முக்தி டந்தாள். மனிதகுலம் தழைப்பதற்காக வடகிழக்கு லயில் தாங்கள் வாழ்ந்து வந்தீர். (9)

சர்வ வல்லமை பொருந்தியவரே! அத்தகைய உபதேசத்திற்கு அவசியம் என்ன? தங்கள் மேல் கொண்ட பக்தியே, அச்சங்கள் அனைத்தும் போக்குவதற்கும் எண்ணியயாவற்றையும் எய்துவதற்கும் போதுமானதென்று விளம்பியிருக்கிறீர்கள். எந்தன் குருவாயூரப்பா என்னைப் பிணித்துள்ள நோய்களை அகற்றி, எந்நாளும் உன்னிடத்தில் அன்பு பூண்டு வாழ அருள் பாலிப்பாயாக! (10)

# தசகம் - 16

## நர - நாராயணர் மற்றும் தட்ச யக்ஞும்

பிரமனுடைய மகன் தட்சன். அவன் மனு சுவயம்புவின் மகளான ப்ரசூதியை மணந்து கொண்டான். அவள் மூலம் அவனுக்குப் பதினாறு பெண் மக்கள் பிறந்தனர். அவர்களில் பதிமூன்று பேரை தருமதேவதைக்கும் மற்றவர்களில் சுவாதா என்பவளை பித்திரிக்கும், சுவாஉறா என்பவளை அக்னிக்கும், சதி என்பவளை சிவனுக்கும் மணமுடித்துக் கொடுத்தான். சிவனும் உன்னுடைய அம்சம் அல்லவா?(1)

முன்னே சொல்லப்பட்ட பதிமூன்று பேரில், தருமதேவனின் மனைவியான மூர்த்தி இரட்டைக் குழந்தைகளாக கீர்த்தி வாய்ந்த நாராயணனாக உன்னையும் நான் எனப்படும் உனது இரட்டைச் சகோதரனையும் ஈன்றெடுத்தாள். உன் பிறவி கண்டு தேவர் உலகம் எல்லையற்ற மகிழ்ச்சி அடைந்தது. இசைக்கருவிகளுடன் புகழ் பாடி அம்மகிழ்ச்சியை வெளிப்படுத்தினர். பூமாரி பெய்தனர், தோத்திரப் பாடல் பலப் பாடினர். (2)

அப்போது அரக்கன் ஒருவன் இருந்தான். அவன் உடம்பை ஆயிரம் கவசங்கள் மறைத்திருந்தன. அக்கவசம் ஒவ்வொன்றையும் உடைக்க விரும்பும் அவனுடைய எதிரி, ஒவ்வொன்றுக்கும் ஒவ்வொரு ஆயிரம் ஆண்டுகள் தவம்

இருக்க வேண்டும் மற்றும் அவனோடு அதே காலத்திற்குப் போராட வேண்டும். அதனால் நாராயணனான நீயும் உன்னைவிட்டு இணைபிரியாத சகோதரன் நானும் அத்தகைய தவங்களை மேற்கொண்டு அவனோடு போர் புரிந்தீர். அவ்வளவு காலம் சண்டையிட்ட பின்னர், அரக்கன் உடம்பில் ஒரேஒரு கவசம் மட்டும் எஞ்சியிருந்தது அதனால் பிள்ளை விளையாட்டைப் போல் அதனையும் உடைத்து அவனை அழித்தீர். (3)

உமது சகோதரன் நரன் உடன் அப்போது பத்ரி காசிரமத்தில் தங்கியிருந்தீர். முக்திக்கு வழிகாட்டும் ஆன்மயோகப் போதனைகளை அங்கே கேட்டு வந்தீர். தேவர்களின் முதல்வனான சகரன் என்பான் தங்களுடைய பெருமையையும் ஆன்மீக சக்தியையும் கண்டு பொறாமை கொண்டு, காமனைத் தனது தெய்வ மங்கையர் சூழ வந்து உன்னை மயக்கி உமது பிரம்மசரிய விரதத்தை முறியடிக்க வேண்டும் என்று ஆணையிட்டான். (4)

காமனும் வசந்தம், மலையமாருதம், தேவமங்கையரின் கொஞ்சு மொழிக்காதல் பார்வை எனும் அம்புகள் ஆகியவற்றுடன் வந்து உம்மைத் தாக்கத் தலைப்பட்டான். ஆனால் அந்தத் தாக்குதல் எதனாலும் பாதிக்கப்படாமல் நிலை குலையாதிருந்தது கண்டு பதறினான் அப்படி அச்சப்பட்ட அவனுக்குமஅவனோடு வந்த துணைவர்க்கும் நீ உரைத்தது என்ன தெரியுமா? (5)

மன்மதனே! வசந்தமே! தேவமங்கையரே அஞ்சாதீர்! என் மனதை ஒருமுகப்படுத்தியதின் விளைவாக நான் உற்பத்தி செய்துள்ளது என்ன என்று பாருங்கள் என்று கூறியவாறு உன்னைச் சூழ்ந்து உன்னை வியந்து உனக்குத் தோத்திரம் பாடிய அவர்களுக்கு, உன்னால் உருவாக்கப்பட்ட அழகு நலம் அனைத்தும் பெற்ற மங்கையரைக் காட்டினீர். (6)

அதன்பின்னர், தங்கள் கவர்ச்சிகளைக் காட்டி உன்னைக் கவர வந்த மன்மதனும் மற்றவர்களும், உனது பணிப்பெண்களின் வாசனையாலேயே கவரப்பட்டு மனம் மயங்கினர். அடக்கத்தோடு உம்மால் உருவாக்கப்பட்ட ஊர்வசியைத் தமது கூட்டத்தில் சேர்த்துக் கொண்டனர். அவருடைய அழகோ, தேவமங்கையர் அனைவரையும் வெட்கித் தலைகுனிய வைக்கக்கூடியதாக இருந்தது. (7)

தங்களது சாதனைகளைப் பற்றிக் கேள்விப்பட்ட மற்றும் ஊர்வசியை நேரில் கண்ட சகரன் தங்களது பெருமைகளை அறிந்து அதிர்ச்சி அடைந்தான். தனது சிந்தனையற்ற செயலுக்காக வெட்கப்பட்டான். நாராயணனாக தாங்கள் எடுத்த அவதாரத்தைவிடப் பெரியதும் பெருமைக்குரியதும், மனங்கவர்வதும், மனம் மகிழ்ச்சி ஊட்டுவதும் ஆகிய வேறு ஒரு அவதாரம் இருக்கின்றதென்றால், அது தங்களது கிருஷ்ணவதாரம் மட்டுமே ஆகும். (8)

பிரமன் அளித்த அதிகமான சலுகைகளால், சித்தம் தடுமாறித் தன் அகங்காரத்தாலும் மற்றும் ரஜோகுணத்தின் மற்றைய அதீத குணங்களாலும் தட்சன் குருடாகிப் போனான். அவனுக்கு அந்தோ? தங்களிடத்தில் கூட மரியாதை இல்லாமல் போய்விட்டது. அவன் மனம் அமைதியை இழந்து தவித்தது. அதனால் அவன் உமது மற்றொரு ரூபமான சிவனிடத்தில் தன் எதிர்ப்பைக் காட்டத் தலைப்பட்டான். அவன் நடத்திய பெரியதொரு யாகத்தில், சிவனிடத்தில் தனக்குள்ள அந்த வெறுப்பை சிவனுக்கு மணம் செய்து கொடுத்துள்ள தன் மகள் சதியை அவமானப்படுத்துவதன் மூலம் வெளிப்படுத்தினான். (9)

இந்த நிந்தனையால் சீற்றமுற்ற சிவன், தட்ச யக்ஞத்தை அழித்து,அவனுடைய சிரசையும் துண்டித்தார். பிறகு தேவர்களின் வேண்டுதலுக்கு இணங்கி அவனை

உயிர்ப்பித்தார். தனது யாகத்தை நலமுற முடித்து அமைதி அடைய தட்சனுக்கு அருள் புரிந்தவரே, என்னையும் காப்பாற்றுங்கள். (10)

# தசகம் - 17

## துருவன் சரித்திரம்

மனுவின் மகனாகிய அரசன் உத்தானபாதனுக்கு இரண்டு மனைவியர். அவனுக்கு மிகவும் நெருக்கமான ஒருத்தியின் பெயர் சுருசி. அவளால் அலட்சியப்படுத்தப் பட்ட மற்றவளின் பெயர் சுநிதி. அரசனால் கைவிடப் பட்ட சுநிதி தங்களிடம் அடைக்கலம் புகுந்தாள். (1)

அரசனின் மடியில், சுருசியின் மகன் உத்தமன் அமர்ந் திருப்பதைப் பார்த்த சுநிதியின் மகன் துருவன் தானும் அங்கே ஏறி அமர முற்பட்டான். பொறாமை கொண்ட சுருசியால், அவன்மீது அவச்சொற்கள் தூற்றப்பட்டன. அந்தப் பொறாமை எனும் தீய குணத்தை நின் அன்பர் ஆனவரன்றி மற்றவரால் துறக்க இயலுமோ? (2)

மனைவிக்கு அடங்கிய தன் தந்தையாக அரசரின் முன்னிலையிலேயே அவதூறு செய்யப்பட்டான் துருவன். அப்போது அரசனை உனது மாயை (பெண்ணுருவில்) ஆட்டிப் படைத்துக் கொண்டு இருந்தது. துருவன் தன் தாய் சுநிதியைச் சென்றடைந்தான். பண்டை வினைப் பயனை முறியடிக்க வேண்டுமென்றால், பரமன் உன் னுடைய பாத கமலங்களைச் சரணடைய வேண்டும் என்று சுநிதி துருவனுக்கு அறிவுரை கூறினாள். (3)

ஐந்தே வயதான துருவன், தாயின் சொற்களைக் கேட்டு, உன்னைத் தொழவேண்டும் என்ற ஒரே நோக்கத்துடன் நகரத்தை விட்டுப் புறப்பட்டான் வழியில் நாரத முனிவரைச் சந்திக்கும் வாய்ப்புக்கிட்டியது. உமது புனித நாமத்தை அவர்மூலம் உபதேசிக்கப் பெற்ற

துருவன், வழிபாட்டுக்குரிய நியமங்களையும் அறிந்து கொண்டு மது வனத்துக்கு சென்று உம்மைத் தியானிப்ப தற்குரிய கடுமையான விரதங்களை மேற்கொண்டான். (4)

அதற்குள் தன் செய்கை குறித்து வருந்திய அரசனை நாரத முனிவர் சமாதானப்படுத்தினார். இதற்குள் தன்னுடைய விரதங்களையும் நியமங்களையும் மிகவும் கடுமையாக்கிக் கொண்டு, ஐந்து மாதங்கள் துருவன் கடும் தவம் புரிந்தான். (5)

அவனது தவத்தின் கடுமையால் புறப்பட்ட சக்தி உயிரினங்கள் அனைத்தின் உயிர்மூச்சையே தடுக்கக்கூடிய தாக அமைந்திருந்தது. அதனால் அதற்குப் பரிகாரம் தேடி தேவர்கள் அனைவரும் தங்களிடம் வேண்டி நின்றனர். கருணை கொண்ட நீரும் உமது கருட வாகனத்தில் அந்தச் சிறுவன் முன்னர் தோன்றினீர். அவனது மனம் தன்னை மறந்து உமது சச்சிதானந்த ரூபத்தில் திளைத் திருந்தது. (6)

தங்களைக் கண்டவுடன் அவன் மனம் ஆனந்த வெள்ளத்தில் மூழ்கியது. தன் கண்களைக் கூசச் செய்யும் தங்களது தேககாந்தியில் அவன் இதயம் பூரித்தது. உந்தன் புகழ்பாடத் துருவன் ஆசைப்பட்டான். அதனை அறிந்த தாங்களும் ஒலிகளுக்கு வித்தான சப்த பிரமங்களுக்கும் உறைவிடமான தங்களது சங்கால் அவன் கன்னத்தில் செல்லமாக தட்டினீர். (7)

அப்படித் தொடப்பட்டதால் பவித்திரம் அடைந்த துருவனும், வாய் திறந்து பாடத் துவங்கினான் அவன் எதனை நாடி அருந்தவம் புரிந்தான் என்பதை அறிந்த நீரும், பன்னெடுங்காலம் அரசாண்டு அதற்குப்பின் யாராலும் அடைய முடியாத உயர்ந்த பதவிக்கு சென்றவர் மீண்டும் திரும்பி வரமுடியாத அத்தகைய உன்னத பதவியை அடைவாயாக என்று அருள் பாலித்தீர்! (8)

அவனை வாழ்த்தி மறைந்தவுடன் அந்த நாட்டு மக்கள் மனம் மகிழ, நாட்டுக்குத் திரும்பினான். உமது அருளால் தன் எண்ணங்கள் யாவும் ஈடேற்றப்பட்ட துருவன், தனது தந்தை வானப்பிரஸ்தம் மேற்கொண்ட பின்னர் ஆட்சிப் பொறுப்பை ஏற்று பல்லாண்டுகள் ஆண்டான். (9)

அவனுடைய சகோதரர் உத்தமனைப் போரில் ஒரு யட்சன் வீழ்த்தியதுபோது அவன்மீது போர் தொடுத்துச் சென்ற துருவன், பின்னர் மனுவின் ஆலோசனைப்படி, யுத்தத்தை நிறுத்திக் கொண்டான், அதனால் மகிழ்வுற்ற யட்சன் தலைவனும் செல்வத்துக்கு அதிபதியுமான குபேரன் பல்வகை வரங்களையும் அளிக்க முன் வந்தான். ஆனால் தங்கள் மீது கொண்டுள்ள பக்தி மேலும் உறுதிப் படவேண்டும் என்ற வரத்தைத் தவிர வேறு வரம் எதனையும் அவன் ஏற்கவில்லை. (10)

இறுதியில், தங்களது தூதுவர்கள் கொண்டு வந்த விண்ணுலக விமானத்தில் ஏறி, துருவன் தன் தாயுடன், துருவலோகம் என்றழைக்கப்படும் இடத்தைச் சேர்ந்தான். இன்றளவும் அவன் நீங்காது துருவ நட்சத்திரமாகத் திகழ்ந்து கொண்டிருக்கிறான். பக்தர்களுக்குப் பாது காப்பளிக்கின்ற பரம்பொருளே, என்னுடைய நோயைத் தீர்த்து அருள்வாயாக! (11)

## தசகம் - 18

## பிரிதுவின் கதை

துருவன் பரம்பரையில் உதித்த ஒரு புகழ்பெற்ற அரசன் அங்கன். அவனுக்கு வேனன் என்றொரு மகன் இருந்தான். மகனின் தீய நடத்தைகளைப் பொறாத

தந்தை, கன்னியமான காவலன் கானகம் சென்று தவ வாழ்க்கையை யேற்கொண்டான். தனது நாட்டு மக்களின் எதிர்காலத்திற்கும் நல்வாழ்விற்கும் நீயே கதி என்று உன்னிடத்தில் தன் நம்பிக்கைகள் அனைத்தையும் வைத்து வாழ்ந்தான். (1)

வேனன் இயற்கையாகவே தீய குணம் படைத்தவனாக இருந்தாலும், அவனது அகோன்னதமான ஆற்றலைக் கண்ட மக்கள், அவனை ஆட்சி பீடத்தில் அமர்த்தினர். தன்னைப் பற்றியே மற்றவர்களிடம் தற்பெருமை பாராட்டி வந்தான். தனது நாடு முழுவதிலும் உம்மை வணங்கக்கூடாது என்று தடை விதித்திருந்தான். (2)

நன்னடத்தைப் பற்றி அறிவுறுத்த வேண்டுமென்று முனிவர்கள் அனைவரும் அவனைச் சென்றடைந்து கேட்டனர். அப்போது தங்களை மிகவும் நிந்தனை புரிந்து, தன்னைத் தவிர இவ்வுலகில் வேறு அரசன் எவரும் கிடையாது என்று சூளுரைத்தான். அதனால் கோபம் கொண்ட முனிவர்கள் அவனைச் சபித்தனர். அந்தச் சாபத்தின் நெருப்பில் துடிக்கும் விட்டில் பூச்சியின் நிலையை வேனன் அடைந்தான். (3)

அரசன் இல்லாத நாடு, கொடுங்கோலர்களின் வேட்டைக் காடாகியது. அதனால் அச்சமுற்ற முனிவர்கள் தன் தாய் சுமிதையால் பாதுகாக்கப்பட்டு வைக்கப் பட்டிருந்த வேனன் உடலை அடைந்தனர். அவனுடைய தொடைகளை கடைந்து அவனது உடலைப் பாவமற்றதாக்கினர். பின்னர் அவனது கைகளைக் கடைந்தபோது, பிரிது மன்னராக நீங்கள் தோன்றினீர். (4)

அப்படித் தோன்றிய தங்களை, கீர்த்தி வாய்ந்த பிரிதுவின் அவதாரமாக அந்த முனிவர் கூறினர். கந்தர் வரும் கின்னரரும் தங்களது எதிர்கால வெற்றிகள் பற்றிப் பண்ணிசைத்தனர். வேனனுடைய கொடுமை தாங்காது

தன்னுடைய கருப்பொருட்களை எல்லாம் தனக்குள் ஈர்த்துக்கொண்ட பூமி, உம்மால் வில் கொண்டு தாக்கப் பட்டு, தம்முள்ளே அடக்கியிருந்த வளங்களை எல்லாம் வெளியே கொண்டு வர வேண்டியிருந்தது. (5)

பின்னர், தேவர்களையும் மற்றவர்களையும் அவர் களது தலைவர்களை கன்றாகக் கருதி பூமியின் வளங்களை அழகிய பாண்டங்களில் சேகரிக்குமாறு ஆணையிட்டீர். பூமி சுரபி என்ற தேவலோகப் பசுவின் வடிவில் இருந்தாள். (6)

பிரிதுவாக அவதரித்த முன்னவனே! நீங்கள் உங்களையே (விஷ்ணுவையே) போற்றி யாகம் பல புரிந்தீர். நூறாவது முறையாக அசுவமேதயாகம் புரிந்த போது தனக்கு நிகராக நூறு அசுவமேத யாகங்கள் புரியும் எவர்மீதும் கொண்டுள்ள இயற்கையான பொறாமை யால், காட்டுமிராண்டி வடிவெடுத்து வந்து தங்களது பலிக்காகக் கட்டப்பட்டிருந்த அசுவமேதயாகக் குதிரை யைக் கவர்ந்து செல்ல முயற்சி செய்தான். அந்த முயற்சி தங்கள் மகன் விஜிதஸ்வனால் முறியடிக்கப்பட்டது. (7)

தேவர்கள் தலைவனான இந்திரன், மீண்டும் மீண்டும் யாகக் குதிரையை திருடிச் செல்ல முயற்சிகள் செய்வதைக் கண்ட முனிவர்கள் இந்திரனையே வேள்வித் தீயில் அர்ப்பணிக்க விரும்பினர். ஆனால் பிரமனால் அப்படிச் செய்யாது தடுக்கப்பட்டனர். வேள்வி முடிந்ததும், பிரிதுவின் வடிவில் இருந்த உம்முன்னர் நீரே விஷ்ணுவின் வடிவத்திலும் தோன்றினீர். (8)

ஆண்டவனே! பிரிது சக்கரவர்த்தியின் வடிவத்திலும், பக்தியொன்றையே விஷ்ணுவிடம் இருந்து பெறத்தக்க வரமாகப் பெற்றிருக்கிறீர். சத்ரா எனும் பெரிய சோம யாகத்தை நூறு நாட்களுக்கு செய்வதில் ஈடுபட்டிருந்தீர். கங்கை நதிக்கரையில் அந்த யாகம் நடைபெற்றது.

அப்போது ஆன்மீக நலம் பற்றி அங்கே முனிவர்களிடம் உரையாற்றிக் கொண்டிருந்தபோது, சனகர், சநந்தர், சனாதனர் மற்றும் சனத்குமாரர் ஆகிய நான்கு முனிவர்களின் கூட்டத்தை உங்கள்முன் கண்டீர். (9)

சனகரால் பிரம்மஞானம் பற்றி உபதேசிக்கப் பெற்ற நீர், கானகத்தில் வசிக்கும் சன்னியாச வாழ்க்கையை மேற்கொண்டீர் மற்றும் நீரே பிரமம் என்பதைப் பற்றிய தெளிவு பெற்றீர். பிரிதுவென அவதாரம் எடுத்துள்ள குருவாயூரப்பா! என் பிணி நீங்க அருள் புரிவாயாக! (10)

# தசகம் - 19

## பிரசேதஸ் சரித்திரம்

பிரசேனபதிஹிஸ் என்பான் பிரிதுவின் கொள்ளுப் பேரன். உலக நலன் பேணத்தக்க அனைத்தையும் புரியத் தக்க ஆற்றல் பெற்றவன். அவன மனைவி சதத்துருதை என்ற இளம் பெண் ஆவாள். தங்களுடைய திருவருளால் அவளுக்கும் பிரசேதஸ் என்ற குழுப்பெயர் தாங்கிய பத்து புதல்வர்கள் பிறந்தனர். (1)

இனங்களைப் பெருக்க வேண்டும் என்று தங்கள் தந்தையார் உத்தரவிட்டபடி, உம்மைத் தொழுவதன் முக்கியத்துவத்தை உணர்ந்திருந்த அந்தப் பத்துச் சகோதரர்களும் தவவிரதம் பல புரிவதற்காக மேற்குக் கடற்கரையைச் சென்றடைந்தனர். அங்கே அழகிய ஏரி ஒன்றைக் கண்டனர். (2)

அந்த ஏரி, சிவபெருமானுக்கு உகந்தது ஒன்றாகும். அவரே உமது அடியார்களில் மிகவும் பெரியவர் ஆவார். தங்களுடைய அடியார்களைத் தரிசிக்கும் ஆவலுடன்

சிவபெருமான், பிரசேதஸ் சகோதரர்களின் முன்னர்த் தோன்றி, உன்னைப் பற்றிய புகழ் மாலை ஒன்றைத் தந்தார். (3)

அந்தப் புகழ் மாலையைப் பாடிப் பூஜித்த அந்த அடியவர்கள், தங்களைக் குறித்து ஆயிரம் ஆண்டுகள் தண்ணீரில் தவம் புரிந்து வந்தனர், வெகுவிரைவில் பலன் பெற்ற துருவனைப் போலன்றி தங்களை அறிவதற்காக அவ்வளவு நீண்டகாலம் அவர்கள் அருந்தவம் இயற்றினர். (4)

யக்ஞங்களையும் மற்ற பக்திப் பணிகளையும் குரோதத்துடன் கண்டித்து வந்த அவர்களது முன்னோர் வேனனுடைய பாவக்கறையைப் போக்கிப் புனிதப்படுத்துவதற்கு அவர்களுடைய கடுமையான தவம் பயன்பட்டது. அவர்களுடைய தந்தை பிரசீனவர்ஹிஸ் நாரதரின் உபதேசத்தால், ஆத்மஞானம் பெற்றுத் தங்களை அடைந்தான். (5)

பின்னர், தங்களது அளவற்ற கருணையால் பிரசேதஸ் முன் காட்சி தந்தீர். கருட வாகனத்தில் எட்டுக்கரங்களிலும் திவ்விய ஆயுதத்தைத் தாங்கி காட்சித் தந்தீர். (6)

வேண்டப்படாவிடினும், அவர்கள் மேல் கொண்ட கருணையால், அவர்களுக்கு அநேக வரங்களை அளித்தீர். உங்களைப் பற்றி நினைப்பதே இவ்வுலகுக்குப் பெரும் நன்மை உண்டாகும். உருத்திரனால் உபதேசிக்கப்பட்ட பாமாலை அதனைக் கூறுகின்ற மக்கள் அனைவரின் விருப்பங்களையும் ஈடேற்றும் என்று உரைத்தீர். (7)

"தருக்களின் மகளான கமலோசனை என்பவளை மனைவியாகப் பெற்று, பத்து இலட்சம் ஆண்டுகளுக்கு அளவோடு இன்பசாகரத்தில் மூழ்கித் திளைப்பீர்களாக! உங்களுக்குத் தட்சன் என்ற மகன் பிறப்பான். அதன் பின்னர் நீங்கள் எம்மை வந்தடைவீர்களாக!" என்று

உரைத்தீர். அவர்கள்மீது கொண்ட மகிழ்ச்சியால் பிரசேதஸை மனமுவந்து ஆசீர்வதித்தீர். (8)

அதன்பிறகு, பிரசேதஸ் நாட்டின் அடர்த்தியான மரங்களால் மக்களுக்கு ஏற்பட்ட துன்பம் கண்டு கோபித்து அவற்றை எரிக்கத் தலைப்பட்டனர். ஆனால் பிரமதேவனால் அப்படிச் செய்வதனின்றும் தடுத்து நிறுத்தப்பட்டனர். அந்த மரங்கள் தமது மகளாகிய கமலலோசனையை அவர்களுக்கு மணம் முடித்துக் கொடுத்தன. பின்னர் உம்மால் சொல்லப்பட்ட அத் தகைய ஆண்டுகள் வரை அவர்கள் இன்பத்தில் திளைத்து வாழ்ந்தனர். (9)

தட்சன் என்ற மகனை ஈன்றெடுத்தும் பல்வேறு யாகங்களைப் புரிந்த பின்னும், ஆத்மஞானம் பற்றி நாரதரால் அறிவுறுத்தப்பட்டபின் பிரசேதஸ் முக்தி அடைந்தனர். பக்தர்களை இரட்சிக்கும் குருவாயூர் அப்பனே! என்னை இந்தக் கொடிய நோயிலிருந்து காப்பாற்று! (10)

## தசகம் - 20

## ரிஷப தேவரின் கதை

பிரியவரதன் என்ற அரசனுக்கு அக்னிதரன் என்ற மகன் இருந்தான். அவனிடமிருந்து நாபி என்பான் பிறந்தான். உன்னைத் தொழுது கடையேறுவதற்காக ஒரு யாகம் புரியும்போது, வேண்டியவர்க்கு வேண்டிய வரங்களை அளிக்கும் உம்மைத் தரிசிக்கும் பேறு பெற்றான். (1)

வானமே வடிவாகக் கொண்ட இறைவனே! மாமுனி வர்களால வாழ்த்தப்பட்டும் அரசனால் உம்மைப்போல் ஒரு மகன் தனக்கு பிறக்க வேண்டும் என்று வேண்டப்

பட்டும் அப்படியே அவனுக்கு மகனாக பிறப்பேன் என்று உறுதிக்கூறி வேள்வித் தீயில் மறைந்து விட்டீர். (2)

பின்னர், நபிக்கும் அவரது மனைவி மேருதேவிக்கும் மகனாக, ரிஷபதேவர் என்ற பெயரில் அவதாரம் செய்தீர். வேறெங்கும் காணமுடியாத உமது அனந்த கல்யாண குணங்களால் அகில உலகங்களையும் மகிழ்ச்சிக் கடலில் ஆழ்த்தினீர். (3)

மூவுலகுக்கும் முதல்வரான உம்மிடம் ஆட்சிப் பொறுப்பை ஒப்படைத்துவிட்டு நபி தனது மனைவி மேருதேவியுடன் வானப்பிரஸ்தம் மேற்கொண்டு கானகம் சென்றான். தங்களை வணங்கி எல்லையில்லா ஆனந்த நிலையை அடைந்தான். (4)

தங்களது (ரிஷபதேவரின்) மேன்மையால் உலகம் செழித்து விளங்குவதைக் கண்டு பொறாமை கொண்ட இந்திரன், அஜநாவம் என்ற கண்டத்தின் மீது மழை பொழியாமல் தடுத்து நிறுத்தினான். அதனால் தாங்கள் தமது யோக சக்தியால் அளப்பரிய மழையை அந்தப் பிரதேசத்தில் பொழியச் செய்தீர். (5)

அவ்வாறு தோல்வியடைந்த இந்திரன், அழகிய ஜயந்தி என்பாளைத் தங்களுக்கு மனைவியாகத் தாரை வார்த்தான். ஆத்ம யோகத்திலேயே எப்போதும் தாங்கள் லயித்திருந்தாலும், அவள் மூலம் நூறு புதல்வர்கள் பிறப்பதற்கு அருள் பாலித்தீர். (6)

அவர்களில் மூத்தவன்தான் அரசன் பரதன். மற்றவர்களில் ஒன்பது பேர் புகழ்பெற்ற தவசீலர்களாக மாறினர். மற்ற ஒன்பது பேர் பரதனுடைய நாட்டின் ஒன்பது பகுதிகளை ஆண்டு வந்தனர். தங்கள் தபோ வலிமையால் மற்ற எண்பது பேரும் பிராமணர்களாக பரிணமித்தனர். (7)

துறவின் மூலமும் தூய பக்தியின் மூலமும் முக்திக்கு வழி என்ன என்பது பற்றித் தாங்களும் மற்ற முனிவர்களுடன் அவர்களுக்கு உபதேசம் செய்தீர். பின்னர் பரமஹம்சரின் வாழ்க்கையைக் கடைப்பிடித்து, பல்வேறு இடங்களில், முட்டாளாகவும், பைத்தியக்காரனைப் போலவும், பிசாசாகவும் தோன்றி மறைந்து வந்தீர். (8)

ஆத்மாவின் மிக உயர்ந்த ஆத்துமாவைப் பெற்ற நீர், தங்களுடைய சுத்த ஆனந்தத்திலேயே திளைத்திருந்தாலும், உலகம் முற்றும் சுற்றித் திரிந்து மற்றவர்கள் அலட்சியப்படுத்தினாலும் அவதூறு செய்தாலும் புறக்கணித்தாலும் அவற்றைப்பற்றிக் கவலைப்படாது மற்றவர்களுக்கு உபதேசித்து வரத்தலைப்பட்டீர். (9)

மலைப்பாம்பு, பசு, மான், காகம் ஆகியவற்றின் வாழ்க்கை முறைகளைக் கண்டறிந்த வண்ணம் அலைந்து திரிந்த உங்கள் உடல் குடகு மலையில் ஏற்பட்ட தீ விபத்தில் அழிந்தது. குருவாயூரப்பா! என்னைக் காப்பாற்றிக் கடைத்தேற்ற வேண்டுகிறேன். (10)

## தசகம் - 21

## பல்வேறு கண்டங்களில் வழிபாடு

பூமியின் மையத்தில் இளாவிருதம் என்ற பிரதேசம் இருக்கிறது. அதில் பெண்கள் மட்டுமே வசித்து வருகின்றனர். கௌரி என்பாள் அவர்களுடைய தலைவி அங்கே சங்கர்ஷணா என்ற வடிவத்தில் இறைவனே நீங்கள் இருக்கிறீர்கள் உங்களை அர்த்தநாரீசுவராக இருக்கும் சிவன் வாழ்த்தித் துதிக்கின்றார். (1)

பிரளயத்தின் முடிவில் இழக்கப்பட்ட வேதங்களை மீட்ட ஹயக்ரீவ (குதிரைத் தலையுடன் கூடிய உடல்)

வடிவில் உள்ள தங்களைத் தியானிக்கிறேன் புகழ் வாய்ந்த மகரிஷிகள் உங்களை இளாவிருதாவுக்கு கிழக்கேயுள்ள பத்ரஸ்வா என்ற பகுதியில் போற்றி துதிக்கின்றனர். (2)

இளாவிருதாவுக்கு தெற்கே ஹரிவர்ஷம் என்ற பிரதேசம் இருக்கிறது அங்கே வெண்மை நிறம் கொண்ட அமைதியானதும் அளவில்லாத பலம் பொருந்தியதும் ஆகிய நரசிம்மர் வடிவத்தில் உங்களைத் தியானிக்கிறேன். ஞானத்தின் உச்ச கட்டத்தை அளிப்பவராக, பிரகலாதன் போன்ற மற்ற அடியவர்கள் எப்போதும் புடைசூழ வீற்றிருக்கக் காண்கின்றேன். (3)

இளாவிருதாவுக்கு மேற்குப் பக்கத்தில் கேதுமலை என்ற பிரதேசம் இருக்கிறது. அங்கே காமதேவன் என்ற வடிவில் தங்களது துணைவியார் லட்சுமியை மகிழ்விப்பதற்காக வீற்றிருக்கிறீர் புன்முறுவல் பூத்த முகமும், பிரகாசமான உடலும், லட்சுமி மற்றும் பிரஜாபதியின் மக்கள் அங்கே தொழப்படும் உங்களைத் துதிக்கின்றேன். (4)

இளாவிருதாவுக்கு வடக்கில் ரம்யதா என்ற பிரதேசம் உள்ளது. அங்கு வசித்து வரும் தூய மனம் படைத்த மக்கள் வணங்குவதற்காக இறைவனே நீர் மீன் (மச்ச) வடிவில் எழுந்தருளியிருக்கிறீர். அந்தப் பிரதேசத்தின் தலைவரான வைவஸ்த மனுவால் வழிபாடு செய்யப்படும் அருள்வடிவம் பெற்றவரே உம்மைத் துதிக்கின்றேன். (5)

மெய்ஞ்ஞான ஒளிவிளக்கே! மந்தரமலையைத்தன் முதுகில் தாங்கிய ஆமை வடிவில் தங்களை ஆராதிக்கிறேன். அவ்வடிவில் ரம்யதாவுக்கு வடக்கில் உள்ள ஹிரண்மயா என்ற பிரதேசத்தில் வாழ்கின்ற மக்களும் பித்ரிஸ்களின் தலைவரான ஆர்யமாவும் உன்னை அடிபணிந்து தொழுகின்றனர். (6)

யக்ஞ—வராக ரூபத்தில் உங்களைத் தொழுகின்றேன். வானுயர்ந்த வடிவத்து கொம்பு விண்ணைச் சாடுகிறது.

உத்தரகுரு என்ற பிரதேசத்தில் அந்தத் திருவுருவம் காணப் பட்டு பூமிதேவியால் மந்திர உச்சாடனங்களுடனும் போற்றிப் புகழ்மாலைகளுடனும் தொழப்பட்டு வருகிறது. (7)

மகாவிஷ்ணுவே! என்னைப் பாதுகாத்து அருள் புரிய வேண்டுகிறேன். இளாவிருதாவுக்குத் தெற்கில் உள்ள கிம்புருஷவர்ஷத்தில் அருகில் இருக்கும் சீதையால் அக மகிழச் செய்யும் இராமர் வடிவத்தில் காட்சி தருகின்றாய். அசைக்கமுடியாத பக்தியோடு அங்கே அனுமன் உனைத் தொழுது நிற்கும் காட்சியே அருமையானதாகும். (8)

சாங்கியம் மற்றும் யோகம் ஆகியவற்றின் மெய்ப் பாடுகள் அடங்கிய பாடல்களைப் பாதகண்டத்தின் தலை சிறந்த மக்களும் நாரதர் போற்றித் துதிக்கும் நார — நாராயண வடிவத்தில் தோன்றியுள்ள உன்னிடத்தில் பாதுகாப்பை நாடி நயந்து வந்திருக்கின்றேன். உலகம் முடிவடையும் வரையில் பரதவர்ஷத்தில் குடியிருந்து வரக் கூடிய உன்னைப் போற்றுகின்றேன். (9)

ஆண்டவனே! அடியார்கள் உம்மை பிலக்ஷத்தில் கதிரவனாகவும், கல்மலையில் சந்திரனாகவும், குசத்தின் அக்னியாகவும் கிரௌஞ்சத்தில் நீராகவும், சகத்தில் காற்றாகவும், புஷ்கரத்தில் பிரமமாகவும் வணங்கி வருகின்றனர். (10)

பாற்கடலில் உரையும் பரம்பொருளே; மூன்று சந்திய - காலங்களிலும் (விடியல், நடுப்பகல், மாலை) சிசுமாரா எனும் மச்சமாகத் தியானிக்கப்பட வேண்டிய உன்னை, தொழுகின்றேன். உன் உடலில் கோள்களும் துருவ நட்சத்திரம் போன்ற விண்மீன்களும் பொறிக்கப் பட்டுள்ளன. என்னுடைய துயரங்களைப் போக்குவாயாக; (11)

ஆயிரம் தலைகொண்டு பாதாளத்தில் உறையும் ஆதிசேஷன் எனும் பெரிய பாம்பாக உம்மை போற்றுகின்றேன். நீல உடையும் காதில் ஆடும் ஒரு குண்டலத்துடன், ஏர் தாங்கிக் கர்ப்ப கன்னியர் தொழுது வருகின்றனர். குருவாயூரப்பா; என்னுடைய பிணி நீக்கி அருள் காட்டுவாயாக! (12)

# தசகம்- 22

## ஆஜமிலனியின் சரிதம்

தெய்வமே! பிராமணனாகிய இல்லறத்தோன் ஒருவன் இருந்தான். சமயக் கடமைகளை வழுவாது புரிந்து வந்தான். தந்தை கட்டளையிட்டப்படி ஆகுதிக்குத் தேவையான சுள்ளிகளை பொறுக்குவதற்காகக் கானகம் சென்றான். குடிப்பழக்கமும், குணக்கேடுகளும் உடைய அடக்கமில்லாத ஒழுக்கங்கெட்ட பெண் ஒருத்தியை அங்கே சந்தித்தான். (1)

தன்னடக்கம் மிக்க மனிதனாக அவன் இருந்தாலும், அந்தப் பெண்ணின் மோக வலையில் வீழ்ந்தான். அவளுடைய கூட்டு மயக்கத்தில் திளைத்தான். தன் சமயக்கடமைகளைத் துறந்தான். பாவத்தில் மூழ்கிச் செயல்பட்டான். வயது முதிர்ந்த நிலையில் தங்கள் நாமமான நாராயணன் என்ற பெயர் தரித்த தன் மகன்மீது அளவற்ற பற்று வைத்திருந்தான். (2)

மரணத் தறுவாயில், கொடூரம் வாய்ந்த மூன்று யம கிங்கரர்கள் அவன் முன் தோன்றியதும் அச்சத்தால் தன் மகனை நாராயணா என்று கூவி அழைத்தான். அந்த நினைவே அவனுக்குச் சிலகாலம் பழமையில் பூண்டிருந்த பக்தியின் விளைவாகத் தோன்றியதாகும். (3)

அதனால் தங்களது திவ்விய நாமத்தின் மகிமையால், தீய நடத்தையுள்ள அவன் முன்னால் பொன்னிற ஆடைகளும் நான்கு கரங்களும் உடைய தங்களுடைய தூதுவர்கள் தோன்றினர்.
(4)

பாசக்கயிற்றால் கட்டப்பட்டு யமகிங்கரர்களால் இழுப்பட்ட அவனை விடுவிக்குமாறு கட்டளையிட்டு, பலாத்காரமாக அவனை விடுவித்தனர். அப்படி தங்களது தூதுவர்களால் தடை செய்யப்பட்ட யமகிங்கரர்கள், அவர்களிடம் அஜாமிலனுடைய பாவக் கதைகள் பலவற்றைப் பற்றிக் கூறினர்.
(5)

''கற்றவர்களைப்போல் நடிக்கும் கயவர்களே; பாவத்திற்கேற்ற பரிகாரம் செய்யப்பட்டிருக்கும்போது செய்த பாவங்களுக்காக அவனை எப்படித் தண்டிக்க முடியும்? பாவத்திற்கேற்ற பரிகாரம் என்ன என்று உங்களுக்கு தெரியாதா'' என்று அவர்களைப் பார்த்துத் தங்களுடைய தூதுவர்கள் கேட்டனர்.
(6)

''சுருதிகளிலும் ஸ்மிருதிகளிலும் சொல்லப்பட்டுள்ள நியமங்களைக் கடைப்பிடிப்பதால் செய்த பாவங்களுக்கு பரிகாரம் தேடமுடியும். ஆனால் அவை அந்தப் பாவம் செய்யும் தன்மையைப் போக்க மாட்டா. ஆனால் முழுமுதற்பொருளான ஆண்டவனைப் பணிந்தால் அவ்விரண்டிலிருந்தும் விடுபடமுடியும் என்று தங்கள் திருத்தூதர் உரைத்தனர்.
(7)

''ஆயிரம் கோடி ஆண்டுகளாக அவன் பாவத்தில் மூழ்கி இருந்தாலும், அச்சத்தால் ஆக்கிரமிக்கப்பட்ட ஹரி என்ற நாமத்தை உச்சரித்தவுடனேயே அவனுக்கு அந்தப் பாவங்களிலிருந்து விடுதலை கிடைக்கிறது'' என்று தூதர்கள் கூறினர்
(8)

''அறியாமையில் அந்த ஆண்டவன் நாமத்தை உச்சரித்தாலும் பாவங்கள் எரிந்தொழியும் அதனுடைய

சக்தி அத்தன்மையது. (அவற்றைப் பற்றிய அறிவு அல்லது அறியாமை இருப்பினும் இல்லாவிடினும்) நெருப்பு விறகினை எரிக்கிறது; மருந்து வியாதியைக் குணப்படுத்து கிறது'' என்று தங்கள் தூதுவர்கள் கூறினர். (9)

அப்படி அறிவுறுத்தப்பட்டவுடன், யமகிங்கரர்கள் மறைந்தனர். தங்கள் தூதுவரும் சென்று விட்டனர். எனினும் அந்த நினைவிலேயே தங்களைத் தொழுதபடி அஜமிலன் தன் வாழ்நாளைக் கழித்தான். பிறகு தங்கள் திருத்தூதர்கள் அவனை விண்ணுலகத்திற்கு அழைத்துச் சென்றனர். (10)

தனது தூதர்கள் அளித்த விவரங்களை கேட்ட எமனும் தங்களது அடியவர்களை நெருங்கக்கூடாது என்று கட்டளையிட்டான். அத்தகைய புகழ்பெற்ற குருவாயூரப்பனே! என்னைக் காப்பாற்றிக் கருணை காட்டு! (11)

## தசகம் - 23

### சித்ரகேதுவின் சரிதம்

பிரபுவே! இதற்கு முன் சொல்லப்பட்ட தட்சன் என்பவனைத் தவிர, பிரசேதஸ் என்பவனுடைய மகனாக தட்சன் என்பவன் இருந்தான். அரக்கர் குலம் தழைக்க வேண்டும் என்ற ஆசையால் உந்தப்பட்டு, அவன் நின்னை தொழுதேத்தி வந்தான். அவன் முன் எட்டுக் கரங் களுடன் தோற்றம் அளித்தீர். அவன் கேட்ட வரங்களை எல்லாம் அளித்தீர். அத்துடன் அக்னி என்பாளை அவனுக்கு மனைவியாகவும் அளித்தீர். (1)

அவனுக்கு பதினோராயிரம் புதல்வர்கள் இருந்தனர். அவர்கள் அனைவரும் நாரத முனிவர் உபதேசித்தபடி நின்னிடத்தில் பக்தியுடன் வாழ்ந்து வந்தனர். இல்லறத்

தானுக்குரிய கடமைகளை ஏற்று வாழும்படி தட்சன் கூறியதை அவர்கள் ஏற்கவில்லை. அதனால் கோபம் அடைந்த தட்சன் நாரதமுனிவருக்குச் சாபம் கொடுத்தான். வசிப்பதற்கு என ஒரு குறிப்பிட்ட இடமின்றி நாடோடியாக அலைந்து திரிவீராக என்பதே அச்சாபம். ஆனால் மகாபக்தராகிய நாரதர் அதனைப்பற்றிக் கவலைப்படாமல் அதனை ஆசீர்வாதமாகவே ஏற்றுக் கொண்டார். (2)

பின்னர் தன் அறுபது பெண் மக்கள் மூலமாகத் தட்சன் தன் குலத்தைப் பெருக்க முற்பட்டான். அவனுடைய பெண்களுள் ஒருத்தியின் மகன் பெயர் துவஷ்டா. அவனுக்கு விஸ்வரூபன் என்றொரு மகன் இருந்தான். தங்களைப் போற்றிப் பாட்டிசைத்து இந்திரனுடைய பாதுகாப்பிற்காக நாராயண கவசத்தை அவனுக்குப் பெற்றுத் தந்தான். அதன் மூலம் அசுரர்களை வெற்றிக் கொள்ளும்படி செய்தான் விஸ்வரூபன். ஐயனே! உமது சக்தியால் வெல்ல முடியாதது இவ்வுலகில் எதுவும் உண்டோ? (3)

முன்னொருகாலத்தில், சித்ரகேது என்பவன் சூரசேனர்களின் அரசனாக இருந்தான். அவன் ஆங்கிரச முனிவரின் ஆசியால்தான் விரும்பியபடி ஒரு ஆண் மகவைப் பெற்றான். ஆனால் அந்தக் குழந்தையை அரசனின் மற்ற மனைவியர் கொன்று விட்டனர். அதனால் தங்கள் மாயையில் சிக்கிய மன்னன் மயக்கம் அடைந்தான். (4)

இரக்கம் மிகுந்த நாரதரும் குழந்தை பிறக்க அருள் புரிந்த ஆங்கிரச முனிவரும் துக்கத்தில் மூழ்கித் தவித்த மன்னனிடம் சென்று மாண்ட மகனின் ஆத்மாவை அவனிடம் காண்பித்தனர். அந்த ஆத்மா, “நான் எவருடைய மகன் என்று தெரியுமா? எனக்கு கணக்கற்ற பிறவிகளில் எத்தனையோ பெற்றோர்கள் இருந்துள்ளனர்” என்று கூறியது. இச்சொற்கள் அறியாமை

வலையில் கட்டுண்ட அரசனின் மனமயக்கத்தைத் தெளிவு படுத்தியது. பின்னர் அவனுக்கு நின்னடிக்கு பக்தி பூண்டு தொழுவதற்குரிய வழிவகைகள் ஆங்கிரச முனிவரால் உபதேசிக்கப்பட்டது. (5)

ஆதிசேஷன் வடிவில் தங்களுக்குரிய மந்திரத்தையும், தோத்திரப் பாடலையும் பற்றிய உபதேசத்தைச் சித்ரகேது நாரதமுனிவரிடம் பெற்றான். தங்களைத் தியானித்து விரதம் அனுஷ்டித்து ஏழு நாட்களுக்குள் வித்தியாதரர்களின் தலைவனாகும் பேறு பெற்றான். ஆனால் அந்தப் பதவியால் திருப்தியடையாமல் தொடர்ந்து உம்மைத் தொழுதேத்தி வந்தான். (6)

நீரும்அவன்முன்னே ஆதிசேஷன் வடிவத்தில் காட்சி அளித்தீர். ஆயிரம் தலைகளும், வெண்தாமரை போன்ற உடலும் கூடிநின்ற சித்தர்கள் கூட்டம் நின் புகழ்பாடும் நிலையில் அந்தத் தோற்றம் அமைந்திருந்தது. அவனுடைய பக்தியை மெச்சி, அவனை ஆசீர்வதித்து மறைவதற்கு முன்னர் 'நான் என்பது என்ன' என்று அறிவதற்குரிய வழிகாட்டி நின்றீர். (7)

பின்னர், பெரும்பக்தனனான சித்ரகேது, பக்திக் கடலில் மூழ்கித் திளைத்து, இலட்சக்கணக்கான ஆண்டுகள், வித்தியாதரப் பெண்கள் கூட்டத்துடன், புலனாள எதுவுமின்றி தங்கள் புகழையும் பெருமைகளையும் பாடித் திரிந்தான். (8)

புலனாசைகள், அனைத்திலிருந்தும் அவனை அறவே விடுபடச் செய்வதற்காக, கைலாச மலைக்குச் செல்லுமாறு அவனுக்கு ஆணையிட்டீர். அங்கே காமனைத் தகனம் செய்த சிவபெருமான் ஞானிகள் புடைசூழத் தமது மடியில் அமர்ந்துள்ள உமாதேவியாரைப் பற்றி எள்ளளவு சிந்தனையுமின்றி பற்றற்று வீற்றிருப்பதைக் கண்டான். அவனைப்பார்த்து சித்ரகேது கேலிபுரிந்தான். உமாதேவி அவனைச் சபித்தார். (9)

தன்னைப் பற்றிய ஞானம் அவனுக்கிருந்ததால் அவன் அந்தச் சாபத்தைப் பற்றிக் கவலைப்படவில்லை. அந்தச் சாபத்திலிருந்து விடுபடுவதற்கான பிராயசித்தத்தைத் தேடி அவன் அலையவில்லை. அவன் விருத்தாசுரனைப் போல் வடிவெடுத்து இந்திரனுடன் சண்டைக்குச் சென்றான். அப்படித் தன் எதிரியுடன் போரில் ஈடுபட்டிருக்கும்பொழுது அந்த எதிரிக்கு ஞானம் பற்றியும் தெய்வ பக்தியின் மேம்பாட்டைப் பற்றியும் பாடம் சொன்னான். இந்திரனால் கொல்லப்பட்ட பின்னர் தங்களை வந்தடைந்தான். *(10)*

அரக்கர்களின் தாயான திதி, இந்திரனை வெல்லக் கூடிய மகன் ஒருவன் தனக்குப் பிறக்க வேண்டும் என்று வேண்டி நின்றாள். மருதுகள் அவளுக்குப் பிறந்தாலும், அவர்கள் இந்திரனுடைய நெருங்கிய நண்பர்களாகி விட்டனர். ஓ! குருவாயூரப்பா! என்னைக் காப்பாற்றி அருள் புரிய வேண்டுகின்றேன். *(11)*

## தசகம் - 24

### பிரகலாதன் சரிதம்

இறைவனே! மதுவைக் கொன்றவனே! வராக அவதாரம் எடுத்து இரண்யாட்சனைக் கொன்றபோது, துயரத்தால் பீடிக்கப்பட்ட அவனுடைய சகோதரன் இரண்யகசிபு, அரக்கர் மத்தியில் மிகுந்த சீற்றத்துடன் தங்களை அழித்து விடுவேன் என்று சபதம் செய்தான். *(1)*

அகோர தவங்கள் புரிந்து பிரமனைத் தன் முன்னர் தோன்றி வரம்பல தரும்படி செய்தான். அதன்படி, கடவுளராலும், மனிதராலும், விலங்குகளாலும் கொல்லப்பட முடியாத வரத்தை வேண்டிப் பெற்றான். வரத்தால் ஏற்பட்ட செருக்கு தங்களைத் தலைவராகக் கொண்ட

இந்த உலகை அழிக்க வேண்டும் என்ற நோக்கத்துடன் இந்திரனை வென்று தேவருலகத்தைக் கைப்பற்றினான் (2)

தங்களை அழிக்க வேண்டும் என்பதற்காக தாங்கள் வாசம் செய்யும் வைகுண்டத்திற்கே வந்தான். ஆனால் தாங்கள் அவனுடைய கண்ணில் படாத தோற்றத்தில் அவனுடைய மனத்திற்குள்ளேயே ஒளிந்து கொண்டீர். உரக்கக் கூச்சலிட்டு, அனைத்து உலகங்களிலும் உங்களைத் தேடிச் சென்றான். எங்கு தேடியும் கிடைக்காததால் பயந்து ஓடி விட்டதாகச் கருதினான். வெற்றி பெற்று விட்ட களிப்பில் தன் வீடு திரும்பினான். (3)

அவனுக்கு பிரகலாதன் என்ற மகன் பிறந்தான். தாயின் கருப்பையிலிருக்கும் போதே நாரத முனிவரிடம் இருந்து தெய்வ பக்தியைப் பற்றி அறிந்திருந்தான். வரங்கள் பல அளிக்கும் வல்லாள! பிறப்பில் அரக்கனாக வயதில் குழந்தையாக இருந்த பிரகலாதன் தங்களிடத்தில் மிகவும் அதிகமாக பக்தி கொண்டிருந்தான். தங்கள் மீது பக்திக் கொண்டவர்க்கு எல்லாம் ஒரு உதாரணமாக காட்சி அளித்தான். (4)

தங்களிடத்தில் அன்பு கொண்ட அடையாளங்களைக் கண்ட இரண்யகசிபு, அரக்கர்களின் கேலிக்கிடம் ஆனான். அதனால் தக்கஆசிரியர் மூலம் பிரகலாதன் மனத்திலிருந்து பக்தியை அறவே போக்குவதற்கு ஏற்பாடுகள் செய்தான். ஆனால் அந்த ஆசிரியர் கூறியவை எதுவும் ஏற்கத்தக்கன வல்ல என்று அவற்றை ஒன்றன்பின் ஒன்றாக உதறித் தள்ளிவிட்டுப் பிரகலாதன் வற்றாத பக்தியுடன் வாழ்ந்து வந்தான். (5)

ஒருமுறை தான் கற்றுக் கொண்டவைகளிலே மிகவும் உன்னதமானது எது என்ற கேட்கப்பட்டபோது, தங்களிடத்திலே கொண்டுள்ள பக்தியோகம்தான் உயர்ந்தது

என்று அச்சிறுவன் கூறினான். அதனால் அதிர்ச்சியடைந்த இரண்யகசிபு, அந்த ஆசிரியர்கள் மீது தன் கோபத்தைக் காட்டினான். ஆனால் பக்தி அவன் உள்ளத்திலே மாற்ற முடியாமல் வேர்விட்ட ஒன்று என்று ஆசிரியர்கள் கூறி விடவே தங்களுடைய பக்தர்களில் சிறந்தவனான பிரகலாதனை அழிப்பதற்கான திட்டங்களை உருவாக்கினான். (6)

எங்கும் நிறைந்த இறைவனே! சூலத்தால் குத்தப் பட்டும், யானைகளால் இடறப்பட்டும், பெரிய நாகங்களால் கடியுண்டும் பட்டினி போட்டும், விஷம்கொடுத்தும் மலைகளின் உச்சியிலிருந்து கீழே வீசி எறியப்பட்டும், சிறுவன் பிரகலாதனுக்கு எத்தகைய துன்பமும் ஏற்பட வில்லை. ஏனென்றால், அவனுடைய சித்தம் தங்கள் இடத்திலேயே லயித்து இருந்தது. (7)

அச்சமடைந்தான். கொடூர மனம் படைத்த இரண்ய கசிபு, ஆசிரியர்களின் ஆலோசனைப்படி அவனை வருண பாசத்தால் கட்டி ஆசிரியர் வீட்டிலேயே சிறை வைத்தான். ஆனால் ஆசிரியர் இல்லாத போது அந்த வீட்டில் உள்ள அசுர குலச் சிறுவர்களுக்கு நாராயண நாமத்தின் பெருமையைப் பிரகலாதன் எடுத்துரைத்தான். (8)

நாராயண நாமத்தைச் சிறுவர்கள் அனைவரும் பாடித் துதிப்பதைக் கேள்வி பட்ட இரண்யகசிபு, அடக்க முடியாத கோபத்துடன் பிரகலாதனைப் பார்த்துக் கூச்ச லிட்டான். "துரோகிகளில் கெடு கெட்டவனே! என்னுடைய அதிகாரத்திற்கு எதிராக உன்னைத் தூண்டி விட்டு துணை நிற்கிறவர் யார்? என்று பிரகலாதனைக் கேட்டான். ஞானத்தால் விளைந்த துணிச்சலுடன், பிரகலாதன், "நாராயணனனே எனக்கு நல்ல துணை; நல்ல காப்பு; அகில உலகங்களையும் காப்பவன் அவனல்லவா; மூவுலகங்களையும் இரண்யகசிபு ஆகிய உன்னையும் தோற்றுவித்தவன் அவனல்லவா" என்று பதில் உரைத்தான். (9)

பொய்யனே! அவன் எங்கே இருக்கிறான்? உலகங்களுக்கு உயிர்நாடி என்று உன்னால் சொல்லப்படும் அந்த ஹரி எங்கே இருக்கிறான்? என்று தன் மகனுக்கு சவால் விட்டபடி, பக்கத்தில் இருந்த ஒரு தூணைத் தன் வாளால் தாக்கினான். மகாவிஷ்ணுவே! அப்போது என்ன நடந்தது என்பதை என்னால் விவரிக்க முடியாது. அது என் சக்திக்கு அப்பாற்பட்டது, என்றும் கருணை நிறைந்தவரே! யாவும் ஆகி நின்றவரே! உலகங்களின் இயக்கத்திற்கு அடிப்படைக் காரணமாக உள்ள ஆண்டவரே! குருவாயூரில் கொலு வீற்றிருக்கும் கோவிந்தா; என்னைக் குணப்படுத்து அங்கமெல்லாம் தேய்ந்த என்னை முழு உருவமாக்கிக் காட்டமாட்டாயா? (10)

# தசகம் - 25

## நரசிம்ம அவதாரம்

வாளால் இரண்யகசிபு அந்தத் தூணைத் தாக்கினான். உடனே பயங்கரமான ஒரு சத்தம் எழுந்தது. அந்த ஒளி அவன் காதுகளை துளைத்துக்கொண்டு அண்டபகிரண்டங்களையும் கிடுகிடுவென்று நடுங்கச் செய்வதாகவும் இருந்தது. இதுவரை எவரும் கேட்டிராத அந்த ஒலியைக் கேட்டவுடன் அரக்கர் தலைவன் உள்ளத்தில் அச்சம் மேலோங்கும் அதிர்ச்சியை அடைந்தான். சத்திய லோகத்தில் வீற்றிருந்த பிரமனே சற்று நேரம் ஆடிப் போய்விட்டார். (1)

ஆண்டவனே! உணர்ச்சி கொப்பளிக்க அந்த அரக்கன் திரும்பிப் பார்த்து விழித்தான். அந்தத் தூணைப் பிளந்து கொண்டு மனிதனும் அல்ல, விலங்கும் அல்ல; என்ற ஒரு வடிவத்தில் தாங்கள் தோற்றம் அளித்தீர். அப்படி வந்தது என்ன என்பதைப் பற்றி ஆலோசித்து அவன முடிவு செய்வதற்கு முன்னதாக, அந்த உருவம்

மிகப் பயங்கரமான ரூபம் கொண்டு சிங்கத்தின் பிடரியோடு கூடி ஓங்கி உயர்ந்து வளர்ந்தது. (2)

உருட்டி விழிக்கும் தீப்பொறி பறக்கும் கண்கள்; தங்கம்போல் தகத்தகாயக் காட்சி தந்தன. காற்றில் பரந்து விரிந்து சிலிர்த்து நின்ற பிடரி; பெரிய இருட் குகையைப் போலப் பிளந்த வாய்; வாளைப்போல் சுழன்று வந்த நாக்கு; வெளியே வந்தபோது இருபுறமும் காட்சி தந்த கோரைப் பற்கள், வாழ்க நின் நரசிம்ம அவதாரம். (3)

குட்டையான ஆனால் உறுதியான கழுத்தின் மீது தோன்றிய பயங்கர முகம் சுருங்கி கன்ன கதுப்புகள் மடிந்து பார்க்கப் பயங்கரமாக காட்சி தந்தன. நூற்றுக் கணக்கான கரங்களிலிருந்து கூர் நகங்கள் வெளிக் கிளம்பி வந்தன. என்ன பிரகாசம் என்ன பயங்கரம்; வானத்தி லிருந்து விழும் இடி முழக்கம் போலக் குரல் எழும்பியது. குரல் கேட்ட பகைவர் அஞ்சி ஓடினர். போற்றி நின் நரசிம்ம உருவத்திற்கே! (4)

'ஆம். அவன்தான் விஷ்ணுவாக இருக்கவேண்டும். இப்போதே கொல்லுவேன் என்று மிகப் பெரிய கதாயுதத்தை எடுத்துக்கொண்டு அரக்கர் தலைவன் தங்களை நோக்கிப் பாய்ந்தான். ஆனால் நாடிகூட நகர ஒட்டாமல் உமது பருத்த கரங்களால் தடுத்து நிறுத்தப்பட்டான். உமது பிடியிலிருந்து திமிறிக்கொண்டு, தன் வாளைச் சுழற்றி தாக்க முனைந்தான், உலகங்கள் ஏழையும் ஒரே நொடியில் விழுங்கத் தக்க உக்கிரத்தோடு இருந்தீர். (5)

உம்மை நெருங்கி வந்த கொடியவனைக் கரத்தால் இறுகப்பற்றி வாசல்படியில் உமது மடியின் மீது வாரிப் படுக்க வைத்துக் கொண்டு, அவனது மார்பைக் கூர் நகங்களால் பிளந்தீர். உலகங்களை கிடுகிடுக்க வைக்கும் சிம்மத்தின் கர்ஜனையோடு அரக்கன் உடலிலிருந்து பொங்கி வந்த குருதியை எக்காளமிட்டபடி உறிஞ்சிக் குடிக்கத் தலைப்பட்டீர். (6)

மாண்ட அசுரனை வீசி எறிந்துவிட்டு, இரத்தத்தில் நீராடி எழுந்த பெரிதாக வளர்ந்த உடலோடு குதித்து எழுந்து அங்கே இருந்த மற்ற அசுரர்களையும் விழுங்கத் தலைபட்டீர். அதனால் உலகங்கள் சுழன்றன; கடல்கள் கொந்தளித்தன். தங்கள் பிடரியால் தாக்கப்பட்டு விண்மீன் கள் சிதறின. கோள்கள் நிலை தடுமாறின. பயங்கரமான பிரளயமே தோன்றிவிட்டது அண்ணலே! (7)

தங்களை நெருங்குவதற்கு எவருக்குத் துணிச்சல் இருந் தது? கூட்டத்தின் நடுவே அமர்ந்தபடி, இடி முழக்கத்தின் மேல் இடிமுழக்கம் பொங்கியெழும் கோபத்துடன் செய்த உம்முடைய உடலை நிணமும் சதைத்துண்டங்களும் மூடி யிருந்தன. கழுத்தில் மாலையாக குடல்கள் தொங்கின. உம்மைக் கண்டு அஞ்சி நடுங்கிய அனைவரும் தூரத்தே ஓடி ஒதுங்கி நின்றனர், சிவன், பிரமன், இந்திரன் முதலா னோர் தோற்றித் துதிபாடினர். அவர்கள் கூட வெகுதூரத் தில் நின்று கொண்டு இருந்தனர். (8)

தங்களுடைய கோபம் இன்னமும் அடங்கவில்லை என்பதை அறிந்த பிரமன் அங்கே அச்சமின்றி நின்று கொண்டிருந்த பிரகலாதனை தங்கள் அடிபணிந்து வணங் கும்படி கூறினான். அதனால் சீற்றம் தணிந்த சிங்கப்பெரு மானே, 'அமைதிகொண்டதற்கு அடையாளமாக தங்கள் கரங்களை அச்சிறுவன் தலைமேல் வைத்து ஆசி கூறினீர். உடனே வாய் திறந்து உம்மைத் தோத்திரம்பாட அவனுக்கு அவன் கேட்காமலேயே உலகுக்கு நயம் பயக்கும் நல்வரம் அளித்தீர். (9)

ஐயனே? எத்தகைய கொடிய பயங்கரமான நாடகம் ஆடினை? நிருஸிம்ஹதபணி உபநிஷத்தில் கண்டுள்ளபடி எத்தகைய தூய்மையான மனம் படைத்தவர் நீர். குருவா யூரில் கோலோச்சும் கோமகனே! பிரகலாதனுக்கு அருள் புரிந்தவனே! யாவற்றிற்கும் மேலோனாகிய நீர், ஒப்புவமை காண முடியாதவரே; எனக்குற்ற பிணி நீக்கி பேரருள் காட்டி காப்பாற்றுவாயாக. (10)

# தசகம் - 26

## கஜேந்திர மோட்சம்

பாண்டிய நாட்டரசன் இந்திரத்யும்னன் அடியவரில் பெரிய அடியான். மலய மலையில் முன்பொருமுறை தங்களுக்கு வழிபாடு நடத்திக்கொண்டிருந்தான். அந்நேரத்தில் அகத்தியர் அங்கே வந்தார். அதிதிக்கு உரிய மரியாதை அரசன் அளிப்பான் என்று கருதிவந்தவரை அரசன் ஏறெடுத்தும் பார்க்கவில்லை. ஏனெனில் அவன் மனம் முழுமையாகத் தங்களது வழிபாட்டில் ஒன்றியிருந்தது. (1)

அதனால் கோபம் அடைந்த அகத்திய முனிவர் திரும்பிச் செல்லும்போது, ''உனது அகங்காரத்திற்கும் மமதைக்கும் தண்டனையாக யானையாகக் கடவது'' என்று அவனைச் சபித்தார். அதன்படி அரசன், கம்பீரம் மிகுந்த யானை அரசன் வடிவெடுத்தான். அப்போதும் அவன் சிந்தனையை விட்டு நீங்கள் அகலவில்லை. (2)

பாற்கடலின் மத்தியிலே உள்ள திரிகூட மலையில் இந்திரத்யும்னன் யானையாக மாறி பெண் யானைகளுடன் விளையாடிக் கொண்டிருந்தான். அவன் அனைவரையும் தன் உடல் பலத்தால் வெல்லக்கூடியவனாக விளங்கினான். எங்கே இருந்தாலும் எப்படி இருந்தாலும் உமது அடியவர் பெருமையே பெருமை? (3)

தனது சுயபலத்தாலும் தான் வசித்து வந்த பகுதியின் ஆன்மீக சக்தியாலும். யானை அரசனுக்கு வாழ்வில் எள் அளவு துன்பம் கூட ஏற்படவில்லை. ஒருநாள், கதிரவன் வெப்பத்தில், மலைச் சரிவுகளில் அலைந்து களைப்படைந்தவன். பக்கத்தில் இருந்த ஏரியில் தன் கூட்டத்துடன் சேர்ந்து விளையாடி வெப்பம் தணிந்தான். ஒருவேளை உயிர்களில் உறையும் உம்முடைய தூண்டுதலால் அப்படிச் செய்தானோ? (4)

அதோ ஏரியில், தேவாள மகரிஷியால் சபிக்கப்பட்ட கந்தர்வள்(ஹூஹூ) முதலையின் வடிவத்தில் வசித்து வந்தாள். அவள் அந்த யானையின் காலைத் தன் வாயால் கவ்விக்கொண்டாள். உண்மையில், உமது அடியார்கள் இறுதியில் எல்லையில்லாத இன்பமும் காண்பதற்காகவே அவர்களுக்கு கடுமையான துன்பங்களை ஆரம்பத்தில் அளித்துச் சோதனை நடத்துகிறீர். (5)

தங்களை நித்தம் தொழுது வருவதால் ஏற்பட்ட பெருமையும் கீர்த்தியும் பெற்றுள்ள யானை அரசன் உலகிலுள்ள மற்ற விலங்குகளோடு போராடி ஆயிரம் ஆண்டுகளாக வெல்ல முடியாதவனாக விளங்கி வந்தான். அவனை மீட்டு இரட்சிப்பதற்குரிய காலம் நெருங்கிய போது, தங்களது பாதார விந்தங்களையன்றி வேறு நினைவு ஏதும் இல்லாது இருந்தான். நீர்தானே அவனை அந்த முதலை தாக்கும்படி செய்தவர்? (6)

முழுமுதல் பெம்மானே? அவனுக்குள்ளே நீங்காது இருந்து வந்த பக்தியும், துன்பத்தின் உச்சக்கட்டத்தில் தோன்றிய ஞானமும் தனது துதிக்கையால் பறிக்கப்பட்ட வெண்தாமரை மலர்களால் உம்மை அரிச்சிக்கும்படி செய்தன. ஒப்புவமை இல்லாத ஆத்ம ஞானம் பற்றிய அகவல் ஒன்றையும் பாடினான். அது அவனுடைய பூர்வ புண்ணியத்தால் வெளிப்பட்ட ஞானத்தின் விளைவாகும். (7)

பிரகிருதியின் குணங்களால் பாதிக்கப்படாத உத்தமனை, உயர்ந்தோனைப் பற்றி அவன் பாடிய அகவலைக் கேட்கும் பிரமன் சிவன் முதலான கடவுளர் அவனுடைய உதவிக்கு வரவில்லை. ஏனெனில் தங்களைக் குறித்துப் பாடப்பட்டதல்ல என்று அவர்கள் அறிவார்கள். உயிர்கள் யாவற்றையும் உறைவிடமாகக் கொண்ட ஒரு பெரும் தனித்தன்மை வாய்ந்த உத்தமனாகிய நீவிர் தமது கருடவாகனத்தில் ஏறி விரைந்து வந்தீர். (8)

தங்களது சக்ராயுதத்தால் அந்த முதலையை வெட்டிச் சாய்த்து விட்டு, அந்தக் கஜேந்திரனைத் தமது தாமரைக் கரங்களால் இழுத்துக் கொண்டு வந்து கரை சேர்த்தீர் உடனே அவ்விருவரும் தத்தம் சாபங்களிலிருந்து விடுவிக்கப் பட்டனர் முதலை கந்தர்வரூபம் பெற்றது. யானை உம்மைப்போலவே ஒளிப்பொருந்திய சாரூப்யவடிவம் பெற்று உன்னடி சேர்ந்தது. (9)

''இங்கு நடந்தவற்றை எடுத்துக்கூறி உன்னையும் எம்மையும் விடியற்காலையில் புகழ்ந்து கூறுபவர்கள் முக்தி அடைவர், 'மகாவிஷ்ணுவே! குருவாயூர் வாழும் கோபாலா இவ்வாறு உரைத்த நீர் விடுதலை பெற்ற அரசனும் வைகுந்தம் அடைந்தீர். அத்தகைய தன்மை படைத்த தாங்கள்தான் என்னைக் காப்பாற்றி அருள் புரிய வேண்டும். (10)

## தசகம் - 27

### பாற்கடலைக் கடைதல்

தெய்வலோக மங்கையரால் தனக்கு அளிக்கப்பட்ட ஒரு அழகிய மலர் மாலையை முன்னொரு சமயம் துருவாச முனிவர் இந்திரனுக்குக் கொடுத்தார். ஆனால் அந்த மாலை, அவனுடைய யானையின் காலால் மிதிபட்டு நாச மானது. அதனால் கடுங்கோபம் கொண்ட துருவாசர், இந்திரனுக்குச் சாபம் கொடுத்தார். தங்களுடைய வாழ்த் துக்களைப் பெற்றவர்களைத் தவிர வேறு எவரிடம் மன்னித்தருளும் குணம் இருக்கிறது? (1)

என்றும் இளையோனாகக் காட்சி தந்த இந்திரன், அந்த சாபத்தால் தன் இளமையை இழந்து விரைவில் முதுமை அடைந்தான். அவனும் அவனைப் பின்பற்றிய

தேவர்களும் தங்கள் சக்திகளை இழந்தனர்; அசுரர்களால் முறியடிக்கப்பட்டனர். முக்தி அருளும் முழுமுதற் பொருளே; சிவனும் மற்ற கடவுளர்களும் பிரமனுடன் சேர்ந்து உம்மைச் சரண் அடைந்தனர். (2)

வரம் அருளும் வள்ளலே; நீண்ட நேரம் தங்களது புகழ்ப் பரணி பாடிய பின்னர், அவர்கள் முன்னால் அலங்கார வடிவினனாக கம்பீரமாகக் காட்சிதந்து, "தேவர்களே அசுரர்களுள் சமரசம் செய்து கொண்டு பாற்கடலைக் கடைந்து அமுதத்தை வெளியே கொண்டுவர முயற்சி செய்யுங்கள் என்று கட்டளையிட்டார். (3)

அதன்பின்னர் அசுரர்களுடன் தேவர்கள் நட்புப் பூண்டனர். பிறகு மிகுந்த செருக்கோடு, பாற்கடலைக் கடைவதற்கு மந்திர மலையை மத்தாகக் கொண்டு வந்தனர் வழியில் அந்த மலை அவர்களுடைய கரங்களில் இருந்து நழுவி விழுந்து விட்டது. அதனால் கருட வாகனத்தில் வீற்றிருந்த நீங்கள் சிவகனியைப்போல தூக்கி எடுத்தீர் மற்றும் அதனை மத்தாகப் பயன்படுத்துவதற்காகப் பாற்கடலில் கொண்டு வந்து வைத்தீர். (4)

வாசுகி என்ற நாகத்தைக் கடைவதற்கான கயிறாக்கி, தேவர்களும் அசுரர்களும் சேர்ந்து பாற்கடலைக் கடையத் துவங்கினர். கடைவதற்கு முன்பு, வாசுகியின் தலைப் பக்கத்தை பிடித்துக் கொள்ளும்படி அசுரர்களைத் தூண்டிவிட்டீர். (5)

மந்தரமலை பாற்கடலை ஆழமாகச் சென்று கடைந்தது ஆனால் அதனுடைய எடையின் காரணமாகக் கடலின் ஆழத்தில் அமிழத் துவங்கியது. அதனால் தேவர்கள் அடைந்த துயரத்தை போக்குவதற்காக தாங்கள் ஆமையின் வடிவெடுத்து அந்த மலையின் அடிப்பாகத்தை அதன், கடினமான முதுகால் தாங்கி உயரச் செய்தீர். அதனால் கடலைச் சுலபமாகக் கடைய முடிந்தது. (6)

எங்கும் நிறைந்தவரே! ஒரு லட்சம் யோஜனைகள் அகலமும் இடியைவிடக் கடினமும் கொண்ட முதுகால், கடலில் அமிழ்ந்து போகாமல் மலையைத் தாங்கி உயர்த்திய தன்மையை என்னவென்று சொல்லுவது? (7)

அப்படி அந்த மலை உங்களால் உயரே தூக்கப் பட்டதும் அனைவரும் மிகுந்த உற்சாகத்துடனும் பலத் துடனும் கடையத் தலைப்பட்டனர். அந்தச் சமயத்தில் தேவர்கள் அசுரர்கள் ஆகியவர்களுக்குள்ளும் வாசுகி யிடத்திலும் புகுந்து அவர்களது களைப்பை நீக்கினீர். உற்சாகம் ஊட்டினீர். (8)

மத்தாகப் பயன்படுத்தப்பட்ட மலை, வேகமாகச் சுழற்றப்பட்டதன் விளைவாக, உயரே வந்தது. அப் பொழுது அதனைத் தங்களது தாமரைக் கரத்தால் அழுத்தி சமநிலைப் படுத்தி விட்டீர். இதனைக் கண்டும் வியப்பும் மகிழ்ச்சியும் கொண்ட சிவன், பிரமன் முதலான கடவுளர் வானத்திலிருந்து பூமாரி பொழிந்து புகழ் மாலை சூட்டினர். (9)

தலைப்பக்கத்தைக் கொண்டிருந்த அசுரர்கள், பாம்பின் நச்சுக்காற்றால் பாதிக்கப்பட்டனர். தேவர்கள் கூட ஓரளவு பாதிக்கப்பட்டனர். கருணை பூண்ட நீருண்ட மேகங்களை வரவழைத்து மழை பொழியச் செய்தீர். தேவர்கள் மீது மட்டும் பொழிந்த மழையால் குளிர்ச்சி அடைந்தனர். அசுரர்களுக்கு மழை ஏதும் இல்லை. (10)

நீண்ட நேரமாக கடலைக் கடைந்தும், கடலின் அடியாழத்திலிருந்து நீரில் வாழும் ஜந்துக்கள் வெளிக் கிளம்ப வந்தனவேயன்றி வேறு பலன் எதுவும் கிட்ட வில்லை. குருவாயூரப்பா! களைப்படைந்தவர்களுக்குப் பதிலாக நேரே அந்தப் பாம்பின் இருமுனைகளையும்

உமது செந்தாமரைக் கரங்களால் பற்றிக் கொண்டு கடைய முற்பட்டீர். அத்தகைய நீர், என்னுடைய வினைகளைப் போக்கி காப்பாற்ற வேண்டுகிறேன். (11)

# தசகம் - 28

## கடல் தந்த பரிசுகள்

கடலில் இருந்து முதன்முதலாகக் காலகூடம் என்ற கொடிய விஷம் வெளிப்பட்டது. தங்களை மகிழ்விப்ப தற்காகவும் உங்களைக் காப்பதற்காகவும், சிவன் அந்த விஷத்தை உண்டார். தேவர்கள் போற்றி பல கூறி மகிழ்வித்தனர். (1)

தேவர்களும் அசுரர்களும் தொடர்ந்து கடலைக் கடைந்ததால், தெய்வீகப் பசுவான சுரபி [காமதேனு என்றும் அழைக்கப்பட்ட] வெளிவந்தது. உயர்ந்தவரே, உத்தமரே அந்தப் பசுவை மகரிஷிக்குக் கொடுத்து விட்டீர்கள். தனித்தன்மை பொருந்த வெள்ளை குதிரையும், வெள்ளை யானையும் கல்பதரு எனும் தெய்வீக மரமும், அப்சரஸ் என்று அழைக்கப்படும் தெய்வமாதர்களும் தோன்றினர். அவைகளை தேவர்களுக்கு கொடுத்து விட்டீர். (2)

உலகங்களின் இரட்சகனே; கவர்ச்சியான தாமரையில் மகாலட்சுமி தோன்றுகிறார். அவர் தங்களது சேவையே சிறந்தது எனக் கருதுபவர். பரிசுத்தமான அவர் உருவத்தைப் பார்த்த அனைவரும் பேச்சிழந்து செயலற்று நின்றுவிட்டனர். (3)

இதயத்தைத் தங்களுக்கு அர்ப்பணித்து விட்ட அந்தத் தெய்வத்திற்கு, மாணிக்கத்தாலான சிம்மாசனத்தை இந்திரன் கொடுத்தான். ரிஷிகள், புனித நீராட்டி புனித

திரவியங்களைச் சேர்த்து வேதபாராயணம் செய்து, அவருக்கு அஞ்சலி செலுத்தினர். (4)

அவர்மீது ஊற்றப்பட்ட (அபிஷேகம் செய்யப்பட்ட) புனித நீரையொட்டி, அவரது கொடி போன்ற உடல்மீது தங்கள் பார்வை படர்ந்தது. பட்டுப் பீதாம்பரம் அணி வித்து, பலவகை நவமணி ஆரங்களைச் சூட்டிக் கடவுளர் அவரை அலங்கரித்தனர். (5)

வண்டுகள் மொய்க்கும் மணமாலை கையில் ஏந்தி, அவர் தங்களை நோக்கி மெல்ல நடை பயின்றார். பருத்த கொங்கையின் பாரத்தால் நடை தடுமாற காலில் அணிந் திருந்த சிலம்பு கலீர் என்று ஒலி செய்ய, அம்மா! அவர் அழகு அவர் முகத்து நாணச் செம்மையிலே விகசித்தது. (6)

சிவன், பிரமன் உட்பட மற்ற எல்லாக் கடவுளரும் பெருமை படைத்திருந்தாலும் ஏதேனும் ஒரு குறை பாடின்றி இல்லை என்பதை நன்குணர்ந்த அம்மங்கை எல்லா வகையிலும் நிறைவு நலன்களும் பெற்ற தங் களுடைய கழுத்தில் அந்த மலர் மாலையை மணமாலை யாகச் சூட்டினார். (7)

புலனங்களின் தாயான மகாலட்சுமி, தங்களைத் தவிர வேறு எவரிடத்திலும் நாட்டம் இல்லாதவர் ஆதலால், தாங்கள் தங்கள் மார்பை அவர் வசிப்பதற்கு உகந்த இடமாக அளித்திருக்கிறீர்கள் அங்கிருந்து அவர் தப் கருணைக் கடைக்கண் பார்வையை வீசி, உலகம் எங்கிலுப் வளங்களைக கூட்டுவாராக! (8)

அடுத்துப் பீறிட்டுக் கிளம்பியது, மனமயக்கத்தையுப் உணர்ச்சிகளைத் தூண்டி உல்லாசத்தை அளிக்கக்கூடிய மது. பாவங்களின் புகலிடம் அதுதான். அதனை மிகவுப் மரியாதையுடன் அசுரர்களுக்கு அளித்தீர்கள். (9)

அடுத்து புதிய நீர்மேகம் போன்ற வனப்புடன் கையில் அமுதக் கலசத்துடன் தன்வந்திரி என்ற வடிவத்தில் வெளி வந்தீர் குருவாயூரப்பா, என்னுடைய பிணிகள் அனைத் தையும் போக்கி அருள் புரிந்து காப்பாற்ற வேண்டுகிறேன். (10)

## தசகம் - 29

### மோகினி அவதாரம்

தன்வந்திரி வடிவத்தில் கையில் அமுதகலசத்துடன் நீங்கள் வெளியே வந்ததும் அசுரர்கள் அந்தக் கலசத்தைத் தங்களிடமிருந்து பறித்துக் கொண்டனர். தேவர்கள் நிராதரவாக நின்றனர். அவர்களுக்கு ஆறுதல் கூறி, அந்த இடத்திலிருந்து மறைந்து விட்டீர். தங்களது மாயையால், அசுரர்களிடையே அமுதத்தைப் பங்கு போட்டு கொள் வதைப் பற்றிய சச்சரவு ஏற்பட்டது. (1)

அந்த நேரத்தில், மிகவும் அழகிய மங்கை ஒருத்தியின் வடிவில் அங்கே தோன்றினீர். நீல வண்ணம்; நெஞ் சினிக்கும் இளவயது; கொங்கைகளைத் தாங்க முடியாது வளையும் கொடி உடல்; உடனே அசுரர்கள் அமுதம் பற்றிய சண்டையை நிறுத்திவிட்டுத் தங்கள் அதீத வனப்பால் கவரப்பட்டு, கொங்கைகள் மீது நாட்டத்தைச் செலுத்தி தங்களை நெருங்கினார்கள். (2)

மான் விழி மங்கையே! யார் நீ? இந்த அமுதத்தை எங்களுக்குப் பிரித்துக் கொடுப்பாயா என்று அசுரர்கள் வேண்டிக்கொண்டனர். அவர்கள் நெஞ்சில் காமவெறி தலைதூக்கி இருந்தது. "பொதுமகளான என்னை எப்படி நம்ப முடியும்? என்று கேட்டீர். இருப்பினும் தங்கள் கண் வீச்சாலும் ஒய்யாரப் பேச்சுக்களாலும் அவர்கள் மனதில் போதையையும் நம்பிக்கையையும் ஊட்டினீர்கள். (3)

அசுரர்கள் தங்களிடம் இருந்த அமுதக் கலசத்தைத் தங்களிடம் ஒப்படைத்தனர். மயக்கும் மோகினியின் வடிவத்தில் இருந்த நீர், பிரித்துக் கொடுக்கும்போது தவறு ஏற்பட்டால் அவற்றைப் பொறுத்துக் கொள்ள வேண்டும் என்று கேட்டீர். பிறகு தேவர்கள் ஒருபுறமாகவும் அசுரர்கள் மற்றொரு புறமாகவும் வரிசையாக அமர்ந்தனர். கலசத்தில் இருந்த அமுதம் முழுவதையும் தேவர்களுக்கு அளித்தீர். ஒய்யார நடையாலும் உல்லாசப் பேச்சாலும் அசுரர்களுடைய மனங்களை மயக்கித் திசை திருப்பி விட்டீர். (4)

மோகினி தங்களிடத்தில் மாறாக் காதல் கொண்டிருக்கிறாள் என்ற மனமயக்கத்தில் அசுரர்கள் அமைதியாக இருந்தனர். அடியார்க்கு என்றென்றும் அரவணைத்து அருள் கூட்டும் நீங்கள் அமுதம் முழுவதையும் தேவர்களுக்கு அளித்து முடித்த பின்னர் உமது சுயரூபத்தை எடுத்துக் கொண்டு வரிசை மாறி தேவர்களுடன் அமர்ந்திருந்து கொஞ்சம் அமுதம் உண்டுவிட்ட ராகு என்ற அசுரனுடைய தலையை வெட்டிச் சாய்த்தீர். (5)

தங்கள் கரத்திலிருந்து அமுதகலசத்தைப் பறித்த அசுரர்களுக்கு அதற்குரிய பலனைத் தந்தபின்னர், நீங்கள் அங்கிருந்து மறைந்து விட்டீர். உடனே அசுரர்கள் தேவர்களுடன் போருக்குக் கிளம்பினார்கள். கடுமையான போரில் பலி அசுரன் செய்த மாயங்களால் தேவர்கள் திகைத்துக் களைப்புற்று மயங்கினர். அவர்கள் மத்தியில் மீண்டும் நீர் தோன்றினீர். (6)

பிறகு காலநேமி, மாலி மற்றும் வேறு அசுரர் பலரை அழித்தீர். பலி, ஜம்பா, வலன் மற்றும் பகன் ஆகியோர் இந்திரனால் அழிக்கப்பட்டார்கள். கடினப் பொருளாலும் நீர் போன்ற பொருளாலும் அழிக்கப்பட முடியாத நமுசி

என்பானை நுரையால் செய்யப்பட்ட ஆயுதத்தால் முறியடிக்கப்பட்டான். பிறகு நாரதரின் ஆலோசனையின் பேரில் போர் நிறுத்தப்பட்டது. (7)

அசுரர்களை மயக்குவதற்காகத் தாங்கள் மோகினி வடிவம் எடுத்ததைக் கேள்விப்பட்ட சிவன், உம்மை அவ் வடிவத்தில் காண ஆசைப்பட்டார். அதனால் தமது மனைவி உமாதேவியும் பூதகணங்களும் புடை சூழத் தங்கள் இருப்பிடம் வந்தார். சிவபெருமானால் வேண்டிக் கொள்ளப்பட்டபடி அவருடைய வேண்டுதலுக்குத் துணை புரிய அங்கிருந்து மறைந்து விட்டீர். (8)

பிறகு அங்கே ஒரு தோட்டத்தின் மூலையில் அம்மானை விளையாடும் அழகிய மங்கையின் வடிவில் தோற்றம் அளித்தீர். மருண்ட விழிகளும், உடல் அசைவால் சரிந்து விழும் மேலாடைகளும், மயக்கமூட்ட விளையாடிக் கொண்டிருந்தீர். அதனைக் கண்டு மயங்கிய, காமனை வென்ற சிவனே உம்மைக் கட்டித் தழுவ முற்பட்டார். (9)

தாம் தழுவ முயன்ற மோகினி, தம் அணைப்பிலிருந்து மறைந்ததைப் பார்த்த பின்னரே அவருக்கு புத்தி நிதானந் திற்கு வந்தது. உடனே அவரைப் பாராட்டி மொழி உரைத்தீர். சிவனும் உம்மை பற்ற உமைக்கும் மற்றவர் களுக்கும் எடுத்துக் கூறினார். அத்தகைய குருவாயூரப்பா, எனக்கு அடைக்கலம் அருள வேண்டுகிறேன். (10)

# தசகம் - 30

## வாமன அவதாரம்

பெருந்தன்மை வாய்ந்த மகாபலி என்பான் மிகப் பெரிய வீரன். விச்வஜித்து என்ற யாகத்தின் மூலம் சக்தி பெற்றான். இந்திரனோடு போரிட்டு மரணமடைந்தவன்.

அசுரகுரு சுக்கிராச்சாரியாருடைய உதவியால் உயர்ந்தெழுந்தான். உமது கரத்தில் உள்ள சுதர்சனச் சக்கிரத்தைக் கண்டு அவன் அஞ்சவில்லை. அஞ்சி நடுங்கிய தேவர்கள் ஓடி ஒளிந்து கொண்ட மூன்று உலகங்களையும் தன்வசப்படுத்திக் கொண்டான். (1)

தன் மக்களான இந்திரன் முதலிய தேவர்கள் பட்ட துன்பம் கண்டு அதிதி மிகவும் வருத்தப்பட்டுத் தன் கணவராகிய காசியப முனிவரிடம் சரண் அடைந்தாள். அவர் கூறிய ஆலோசனைப்படி உம்மிடத்தில் பக்தி பூண்டு பன்னிரண்டு நாட்கள் இடைவிடாத விரதம் பூண்டு உம்மை வழிபட்டாள் அல்லவா? (2)

விரதம் முடிந்தவுடன், அதிதியின் முன்னர் நீலமேகச் யாமள வர்ணத்துடன் நான்கு கரங்களுடன் காட்சி அளித்தீர். தொழுது வணங்கியவளிடம் "உன்னுடைய மகனாக பிறப்பேன். என்னைக் கண்டதையும் கேட்டதையும் எவரிடமும் கூறாமல் இரகசியமாக வைத்திரு" என்று ஆணையிட்டு மறைந்தனை. (3)

காசியபமுனிவரின் தவ வலிமையினால் எழுந்த சக்தி, அதிதியின் கருப்பையில்இடம் பெற்றது. பிரமன் உன்னைத் துதித்தான். துவாதசித் திதியும் திருவோண நட்சத்திரமும் கூடிய நன்னாளில், நாராயணனுக்குரிய சங்குசக்கர அடையாளங்களுடன் கூடிய தெய்வீகத்தன்மை பெற்ற அதிதி உன்னை ஈன்றெடுத்துப் பெரிதும் உவந்தாள். (4)

மங்கள முரசுகொட்டித் தேவர் திருக் கூட்டம் முனிவரின் ஆசிரமத்தின் மீது மலர்மாரி பொழிந்து மகிழ்ந்தது. தந்தையும் தாயும் கரம் கூப்பித் தொழுதனர். சக்தி வாய்ந்த பிரமசரிய உருவத்தை எடுத்துக் கொண்டனை. (5)

தெய்வமே, உடனே காசியபர் பிரஜாபதி முதலியோர் உனக்கு உபநயனம் செய்வித்தனர். மேகலை, தண்டம்,

மான்தோல், அட்சமாலை ஆகியவற்றை நீர் அணிந் திருந்தீர். தேகம் பிரகாசத்துடன் காட்சித் தந்தது. அக்னி யில் முடிக்க வேண்டிய கடமைகளை முடித்தபின்னர், அசுவமேத யாகத்தை பலி நடத்திக் கொண்டிருந்த இடம் நோக்கிச் சென்றனை. (6)

ஐயனே! ஓங்கி உலகளந்த உருவம் எடுப்பதற்கு முன் னோடியாக, தங்கள் பாதம்பட்ட பூமி நடுங்கி அசைந்தது. பகைவர் கொடுமை எனும் வெப்பம் தாக்காதிருக்க குடை ஏந்திநடந்து வந்தீர். அரக்கர்களைத் தண்டிப்பதுபோன்று ஒருவகையில் தண்டத்தையும் தாங்கி நடந்தனை. (7)

நர்மதை ஆற்றங்கரையில் இருந்த அசுவமேத யாக சாலை சென்ற உன்னைக் கண்ட சுக்கிராச்சாரியார் போன்றவர்களின் கண்கள் கூசின. கனவோ, கதிரவனோ கடுந்தவம் புரிந்த சனத்குமாரனோ? யார் இவன் என்று சந்தேகப்பட்டனர். (8)

உனது தேகசாந்தியால் கவரப்பட்ட பிறகு மரபில் தோன்றிய சுக்கிராச்சாரியாரும் மற்றவர்களும் உன்னை எதிர்கொண்டு அழைக்க விரைந்தனர். அரக்கர்களாக இருந்தாலும் அருஞ்செயல்கள் பலபுரிந்த பலி உடல் சிலிர்க்க, அளவற்ற பக்தியுடன் ஓடிவந்து உன் பாதங்க மலங்களைப் பணிந்து தொழுது புனித நீர்ஊற்றிக் கழுவி னான் தூய்மைக்குத் தூய்மை சேர்க்கும் அந்தத் தூயநீரை தன் தலையில் தெளித்து பெருமைப்பட்டான். (9)

அரக்கனாகிய பலி, சிவபெருமானின் சிரசை அலங்க ரித்த அந்தப் புனித நீரை ஏற்றுக் கொண்டான். ஒருவேளை பிரகலாதன்மரபில் தோன்றிய காரணத்தினாலோ அல்லது பல யாகங்களை நடத்திய காரணத்தாலோ அந்தணரிடம் கொண்ட பக்தியாலோ அவனுக்கு அந்தப் பேறு

கிட்டியதா என்று எனக்குத் தெரியாது எப்படி இருப்பினும் குருவாயூரப்பா, என்னை நீதான் காப்பாற்ற வேண்டும். (10)

# தசகம் - 31

## பலியை அழித்தல்

அளவற்ற ஒளி வீசும் உமது உடலைக் கண்டு அளவற்ற அன்புகொண்ட, பலி, பல்வேறு வகையாலும் உனக்கு பூசனை புரிந்தான். இருகரங்களையும் கூப்பிக்கொண்டு "பிராமண புத்திரனே! நீ விரும்புவது என்ன? என்னிடம் கூறு உணவா, வீடா, நிலமா? எது வேண்டுமென்றாலும் கேள் நான் கொடுக்கக் காத்திருக்கிறேன் என்றான். (1)

குறையில்லாக் கொற்றவன் கூறியவற்றைக் கேட்டு, அருள் கொண்ட முகம் காட்டி நின்றாலும், அரக்கனின் செருக்கை அடக்க விரும்பு, அவர்கள் குலத்தைப் புகழ்ந்து பல கூறியவண்ணம், மூன்றடி மண்வேண்டும் கேட்டதைப் பார்த்து அனைவருக்கும் சிரிப்பு வந்தது. (2)

உடனே பலி, "நீயோ சிறியவன். நான் உலகங்கட் கெல்லாம் தலைவன். அப்படியிருக்க என்னிடத்தில் வெறும் மூன்றடி மண் மட்டும் வேண்டும் என்று கேட் கிறாயே? அதனால் என்ன பயன். இந்த நிலவுலகம் முழுவதையுமே கேள். தயங்காமல் தானமாகக் கொடுக் கிறேன்" என்று பலி தருக்கோடு பகர்ந்தான் அந்த அகங்காரத்தின் காரணமாகவே, அந்த மூன்றடி மண்ணை கூட கொடுக்க முடியாமல் இகழ்ச்சியையும், கருவபங்கம் அடையச் சிறையையும் அடைந்தான். அவன் அதற்குத் தகுந்தவனல்ல. (3)

வரதா! உடனே "மூன்றடி மண் போதும் என்று ஏற்றுக்கொள்ளாதவர்கள் மூன்றுலகத்தையும் கொடுத்

தாலும் திருப்தி அடைய மாட்டார்கள் என்று பதில் உரைத்தீர். கேட்டதை கொடுப்பதற்காக நீர் வார்த்துக் கொடுக்க முற்பட்ட பலியை, "கொடுக்காதே! இவன் சாதாரணச் சிறுவனல்ல. அனைத்தையும் கவர்ந்து செல்லும் ஹரியே இந்த உருவத்தில் வந்திருக்கிறான்" என்று சுக்கிராச்சாரியார் தடுத்தார். (4)

அதற்கு அரக்கனான பலி, "இறைவனே என்னிடத்தில் பிச்சைக் கேட்க முன்வந்ததால், எனக்கு வேண்டியவை வேண்டிய வண்ணம் கிடைக்கும் ஆகவே அவர் கேட்டதை நான் மறுக்காமல் அப்படி கேட்டபடி கொடுப்பேன்" என்று உறுதிக் குரலெடுத்து உரைத்தான். அதனால் சுக்கிராச்சாரியாரால் சபிக்கப்பட்டான். இருந்தாலும் தன் மனைவி வித்தியாவல்லியுடன் திருவடி பூசனைக்கு நீர் வார்த்ததால், பிறகு உலகங்கள் அனைத்தையும் உமக்கு தாரை வார்த்துக் கொடுத்தான். எத்தகைய விந்தையான செயல்! (5)

அப்பனே! சந்தேகம் சற்று இல்லாமல் எல்லாவற்றையும் அரக்கர் தலைவன் பலி உமக்கு அளித்து விட்டான். இதனைக் கண்ட தேவர்களும் முனிவர்களும் பூமாரி பொழிந்து மகிழ்ந்தனர். அனைவரும் பார்த்துக் கொண்டிருக்கும்போதே உன்னுடைய உருவம் ஓங்கி உயர்ந்து பூதாகாரமாக வளர ஆரம்பித்து விட்டது. (6)

பிரமன் வசிக்கும் சத்தியலோகம் நோக்கி உயர்ந்த உன் திருவடிக்கு கமண்டலத்தில் உள்ள நீரால் அபிஷேகம் செய்யப்பட்டது. அந்த நீர் உலகங்கள் அனைத்தையும் புனிதப்படுத்தியது. கந்தர்வர் மகிழ்ச்சியால் கூத்தாடினர். பெரிய பக்தராகிய ஜாம்பவான், பேரிகை கொட்டியவாறு பூமியைச் சுற்றி வந்தான். (7)

ஐயனே, அரசனின் சம்மதமின்றி அரக்கர் கூட்டம் போர் தொடுத்தது. அப்பொழுது அங்கே உம்முடன் வந்திருந்தவர் தோல்வியுற்றனர். "காலத்தை வெல்லும்

இறைவனின் அருளால் நாம் வெற்றி பெற்று வந்தோம். அந்த இறைவனே நம்மை எதிர்த்து முன் நிற்கும்போது, போராடுவதால் பயன் இல்லை என்று பலி கூறினான். அதனைக் கேட்ட அரக்கர்கள் போரை நிறுத்தித் தங்கள் உலகம் திரும்பினர். (8)

வருணபாசத்தால் பலியைக் கருடன் கட்டி விட்டான். உலகங்களுக்கெல்லாம் தலைவனே! எனக்கு மூன்றாவது அடி மண்ணைக் கொடு'' என்று பலியிடம் உரக்கக் கேட்டீர் உடனே பலி, சற்றும் தயக்கம் இல்லாமல் ''ஆண்டவனே! தங்கள் திருவடியை அடியேனுடைய சிரசின மீது வைத்து அருள் புரிக' என்று கூறினான். அச்சமயம் பலியைப் பாராட்டியபடி பிரகலாதன் உன்னைத் துதித்தான். (9)

''அரக்கனே! உனது மமதையை அழிக்கவே இவ்வாறு நடந்தது. புண்ணி காரியங்கள் பல புரிந்த காரணத்தால், தெய்வத்தன்மையில் பாதியைப் பெற்ற முனிவன் ஆகி விட்டாய். உனக்குச் சொர்க்கத்தைவிட உயர்ந்த இடம் கிடைக்கும். பிறகு இந்திரன் பதவியையும் பெற்று என்னோடு இணைவாய் என்று அந்த பலிக்கு அருள் புரிந்தீர் பின்னர் அந்தணர் மூலம் யாகத்தை நிறைவு செய்தாய். அத்தகைய குருவாயூரப்பனே என்னைக் காத்து அருள் புரிய வேண்டுகிறேன். (10)

# தசகம் - 32

## மச்ச அவதாரம்

மன்வந்தரயுகத்தின் முடிவில் பிரளயம் ஏற்பட்டது. அப்போது உறக்கத்தில் ஆழ்ந்திருந்த பிரமதேவன் முகத்திலிருந்து ஹயக்கிரீவன் என்ற அசுரன் வேதங்

களைத் திருடிச் சென்று விட்டான். அப்போது மீனாக அவதாரம் எடுக்க நீர் விரும்புனீர் அல்லவா? (1)

திராவிட அரசனான சத்தியவிரதன் என்பான் ஆற்றில் தர்ப்பணம் செய்து கொண்டிருந்தபோது அவனுடைய கைகளில் மீன் குஞ்சாகக் காட்சி தந்தீர். (2)

உடனே உன்னை நீரில் விட்டான். பின் அச்சமுற்ற உன்னை நீர் நிறைந்த பாத்திரத்தில் தன்னுடைய இல்லத்திற்குக் கொண்டு சென்றான், அப்பனே ஆனால் நீ சில நாட்களில், நீர் நிறைந்த பாத்திரத்தின் அளவாகவும், கிணற்றின் அளவாகவும் தடாகத்தின் அளவாகவும், பிறகு ஏரியின் அளவாகவும் பெரியதாக வளர்ந்து விட்டாய். (3)

பிறகு அவன் உமது ஆணைப்படி, தனது தவத்தின் வலிமையால், மீனாக இருந்த உம்மைக் கடலில் சேர்த்தான் 'பிரளயத்தைக் காண விரும்புகிறேன்' என்றும் உம்மிடம் கூறினான். அதற்கு 'ஏழு நாட்கள் பொறுத்துக் கொள்' என்று பதில் கூறி மறைந்தான். (4)

அப்படிக் குறிப்பிட்ட நாள் வந்தது. பெருக்கெடுத்த வெள்ளத்தால், பூமி நீரில் மூழ்கியது. பிறகு அவன் ஏழு முனிவர்களுடன் கடலில் சுற்றிச் சுழன்று வந்தான். பிறகு உன்னையே சரணடைந்தான். (5)

உமது ஆணைப்படி, தோணியாக உருவெடுத்து வந்த பூமியில் அவர்கள் அனைவரும் ஏறிக் கொண்டனர். அதனால் தோணி ஆட்டங்கண்டது. அப்பொழுது நீர் முன்பு இருந்ததைவிடப் பெரிய மீனாகக் காட்சி தந்தீர். (6)

எட்டு இலட்சம் மைல்கள் நீளமுள்ள மீனுடைய உருவத்துடன் மிகுந்த பிரகாசத்துடன் காட்சி தந்தீர்.

அவர்கள் கண்டு மகிழ்ந்தனர். நீர் கூறியபடி அந்த தோணியைத் தங்கள் மூக்கின் நுனியில் கட்ட வைத்தார்கள். (7

அந்தத் தோணியை இழுத்துக்கொண்டு சென்ற உலகத்தின் பல்வேறு பகுதிகளும் அவர்களுக்குக் காட்ட பட்டது. அந்த அரசன் தங்களை நன்கு போற்றி துதித்தான். அவனுக்கு உம்மால் ஆன்மீக உபதேச செய்யப்பட்டது. (8

பிரளயத்தின் முடிவில் அந்த ஏழு முனிவர்களு முன்னிருந்தபடியே இருக்குமாறு பணிக்கப்பட்டனர் சத்தியவிரதன் என்ற மன்னனை வைலஸ்வன் என் பெயருடைய மனுவாக ஆக்கிய பின்னர், மிகுந்த சீற்ற துடன் ஹயக்கிரீவன் என்ற அரக்கனை எதிர்த்தீர். (9

குருவாயூரப்பா! உமது ஓங்கிய கொம்பால் அரக்கனைக் குத்தி பிளந்து சாய்த்த பின்னர், அவனிட இருந்த வேதங்களை எடுத்து கொண்டு வந்த பிரமன் மகிழக் கொடுத்தீர். அத்தகைய சக்தி வாய்ந்த தெய்வமே என்னையும் காப்பாற்று! அருள்புரிய வேண்டுகிறேன் (10

## தசகம் - 33

## அம்பரீஷன் சரிதம்

நபாகன் என்பவன் வைவஸ்த மனுவின் மகன் அவனுக்குப் பிறந்தவன் நாபாகன் அவனுக்கு அம்பரீஷன் மகனாகத் தோன்றினான். அவன் ஏழு கடல்களால் சூழ பட்ட பூமிக்கு அரசனாக விளங்கினான். அப்போது உம்மிடத்திலும் உம்முடைய அடியவர்களிடத்திலு நீங்காத அன்பு பூண்டவனாக இருந்து வந்தான். (1

ஐயனே உம்மீது பூண்ட பக்தியின் காரணமாக, எதை வேண்டுமானாலும் செய்வதற்குத் தயாராக இருந்தான். அதனால் அவன் வேண்டும் என்று கேட்காமலேயே, ஆயிரம்முனைகள் கொண்ட சுதர்சன சக்ராயுதத்தை அவனுக்கு அளித்தீர். பக்திக்காக அப்படி அவனுக்கு அருள் புரிந்தீர். (2)

பிறகு, அம்பரீஷன் நற்குணமுடைய தன் மனைவியுடன், யமுனை நதிக்கரையில் உள்ள மதுவனத்தில் சிறந்த பூசனைகள் செய்து வந்தான். அறுபது கோடிப் பசுக்களைத் தானமாக அந்தணர்களுக்குக் கொடுத்தான். உம்மை வழிபட்டு ஒரு ஆண்டு துவாதசி விரதம் இருந்து வந்தான். (3)

விரதம் முடிந்து விருந்து படைத்துச் சிறப்பிக்கும் நாளில், அம்பரீஷனுடைய அரண்மனைக்கு துருவாச முனிவர் வந்தார். விருந்தில் கலந்து உணவு உண்ண வேண்டும் என்று அவரை அம்பரீஷன் வேண்டிக்கொள்ள விரைவில் கோபம் கொண்டு கொடுமை செய்யும் முனிவரும் ஒத்துக்கொண்டு, கடமைகளைச் செய்ய யமுனைக்குச் சென்றார். (4)

பக்தனாகிய அரசன், இறைவனுக்குப் படைப்பதற்குரிய காலம் ஆகிவிட்டதே என்று வருத்தப்பட்டு வெறு நீரைப் படைத்தான். அதைப் பற்றித் தயது தொலைவின் உணர்வு சக்தியால் அறிந்து கொண்ட முனிவர், கோபம் கொண்டார். சடா மகுடத்தைப் பிடுங்கிக்கொண்டு. கிருத்தியை என்பவளைப் படைத்தார். (5)

அந்தக் கிருத்தியை என்பவருடைய கையில் கத்தி இருந்தது. உலகங்களை எல்லாம் ஒழித்து வந்தாள், அம்பரீஷ மன்னன் அவளை நேரில் கண்டான். ஆயினும் அசையாது இருந்த இடம் விட்டு அசையாது நின்றான்.

நீர் அவனுக்கு அளித்திருந்த சுதர்சனம் கிருத்தியை விழுங்கி விட்டுத் துருவாசரைப் பின்தொடர்ந்து சென்றது. (6)

பயம் கொண்ட முனிவர் ஒவ்வொரு உலகமாகத் தேடி ஓடினான். ஒவ்வொரு இடத்திலும் சுதர்சனம் பின் தொடர்வதைக் கண்டு, பிரமதேவனை தஞ்சம் புகுந்தான். 'காலச்சக்கரத்தை யாரால் வெல்ல முடியும்' என்று கூறி பிரமன் ஒதுங்கிக் கொண்டார். இறுதியில் சிவபெருமானிடம் சென்றான். அவரும் கைவிட்டு விட்டார். (7)

முழுமுதல் பொருளோனே, பெரியவனே, கடைசியில் வைகுண்டத்திற்கு வந்து உம்மைச் சரணடைந்தான். நீர் அவனைப் பார்த்து "முனிவனே! நான் அடியார்க்கு அடியவன் அல்லவா அறிவும் தவமும் அடக்கத்துடன் இருந்தால்தான் பெருமைக்கு உரியனவாகும். எனவே அம்பரீஷனையே சரணம்அடைவாயாக" என்று கூறினீர். (8)

உடனே முனிவன் விரைவாகச் சென்று அம்பரீஷன் பாதங்களைப் பற்றிக்கொண்டான். அரசன் சற்று விலகி நின்று சக்ராயுதத்தைத் துதி செய்ய, சக்ராயுதம் திரும்பிச் சென்றது. தீங்கு செய்தவருக்கும் நன்மை செய்யும் பண்பையும், உம்மிடத்தில் உள்ள ஆழமான பக்தியையும் அம்பரீஷனிடத்தில் கண்ட முனிவன் அவனைப் பாராட்டி அவனுக்கு பல நல்லாசிகளைக் கூறினான். (9)

அம்பரீஷன், துருவாச முனிவனை எதிர்நோக்கி ஒரு ஆண்டுகாலம் உணவின்றி விரதம் காத்தான். அதன் பின் உணவுண்டு, மீண்டும் உம்மிடத்துப் பக்திசெலுத்தி வந்து கடைசியில் உம்மோடு ஐக்கியம் ஆனான். அத்தகைய தன்மை பெற்ற குருவாயூரப்பா! என்னைக் காத்தருள புரியமாட்டாயா! (10)

# தசகம் - 34

## இராமாயணம் — அனுமன் சந்திப்பு வரையில்

ரிச்யசிருங்க முனிவர் அயோத்தியில் நடத்திய புத்திர காமேஷ்டி யாகத்தில் கிடைத்த பிரசாதத்தைத் தசரத மன்னருக்கு அளித்தார். அதனை உண்ட அவனது மனைவிகள் மூவரும் கருவுற்றனர். இராவணனை வதம் செய்ய வேண்டுமென்று வேண்டிய தேவர்களுக்கு இணங்கி அந்த மூவரிடத்தில் பரதனோடும், இலககுவனோடும். சத்ருகனோடும் இராமனாக அவதாரம் செய்தீர். (1)

தெய்வமே! தந்தை சொல் கேட்டு வில்லேந்தி தம்பி இலக்குவனுடன் விசுவாமித்திரர் செய்த யாகத்தை காத்து நின்றீர். அந்த முனிவர் கூறிய பலா, அதிபலா என்ற இரண்டு மந்திரங்களால் வழிநடந்த களைப்பு நீங்கியது. முனிவன் சொற்கேட்டு தாடகையை வதம் செயது முனிவரிடம் இருந்து மேலும் சக்தி வாய்ந்த ஆயுதங்களைப் பெற்றுக் கொண்டீர். பின்னர் சித்தாச்ரமம் என்ற தபோ வனத்தை அடைந்தீர். (2)

யாகத்தின் துவக்கத்தில், மாரீசனை அம்பால் அடித்துத் துரத்தி மற்ற அரக்கர்களைக் கொன்றனை. நின் காலடி பட்டு கல்லாக இருந்த அகலிகை பெண்ணாக உரு வெடுத்தாள். ஜனகரின் அரண்மனையில் சிவன் வில்லை முறித்து, நிலமகளாகப் பிறந்த மகாலட்சுமியை மணம் புரிந்து கொண்டீர். (3)

பிருகுவின் வம்சத்திற்குத் திலகமான பரசுராமர் வீண் கோபத்தால் அறிவிழந்து வழி மறித்துத் தன் வலிமையை உம்மிடம் இழந்தான். அயோத்தி சென்ற பின்னர், பரதனும் சத்ருக்கனும் அம்மான் வீடு சென்றிருந்தபோது,

உம் தந்தை உமக்குப் பட்டாபிஷேகம் செய்ய முடிவெடுத்தார். ஆனால் கைகேயி அதனைத் தடுத்து நிறுத்தினாள். (4)

தந்தை சொற்கேட்டு, வில்லேந்திய கையோடும், தம்பியுடனும் துணைவியுடனும் கானகம் சென்றீர். வழியில் பின் தொடர்ந்த மக்களை திருப்பி அனுப்பி விட்டு குகனுடைய இடத்தில் சடாமகுடம் மரவுரி தரித்து, ஓடத்தின் மூலம் கங்கையைக் கடந்து வழியில் பரத்வாஜ முனிவரின் சொற்படி சித்ரகூட மலையில் மகிழ்ச்சியாகத் தங்கி இருந்தீர்! (5)

மகனைப் பிரிந்த வருத்தத்தால் தந்தை மரணமடைந்தார் என்ற சேதியைப் பரதன் மூலம் கேட்டு வருந்தி தந்தைக்கு ஈமக்கடன் செய்தீர். பரதனிடம் பாதுகைகளையும் பூமியையும் ஒப்படைத்த பின்னர் அத்திரி முனிவரை வணங்கி விடைபெற்று தண்டகாரிய வனம் சேர்ந்தீர். அங்கு விராதன் என்னும் அரக்கனைக் கொன்றுத் சாபங்க முனிவருக்கு முக்தி அளித்தனை. (6)

முனிவருக்கு நன்மை செய்ய விரும்பிய நீர் அரக்கர்களை அழிக்க உறுதி பூண்டீர். அகத்தியரை வணங்கி வைஷ்ணவ வில்லையும், பிரம்மாஸ்திரத்தையும் பெற்றீர். வழியில் தந்தையின் நண்பரான சடாயுவைக் கண்டு கோதாவரி கரையில் உள்ள பஞ்சவடியில் மனைவியுடனும் இளையவனுடனும் வாழ்ந்தீர். (7)

எவராலும் அழிக்க முடியாத வல்லமை பெற்றவரே! மோகம் கொண்ட சூர்ப்பணகையை இலக்குவனிடம் அனுப்பி வைக்க, இலக்குவன் அவளுடைய மூக்கை அறுத்து அனுப்பிவிட, அதைக் கேட்ட கரதூஷணர்கள் போருக்கு வர அவர்களுடன் வந்த திரிசிரஸ் மற்றும் பதினாயிரத்திற்கு மேற்பட்ட அரக்கர்களை அழித்து ஒழித்தனை. (8)

இராவணன் தன் தங்கை சூர்ப்பணகையின் சொல் கேட்டு, மாரீசனை மாயமானாகச் செல்லுமாறு ஆணையிட தாமரைக் கண்ணாளாகிய சீதை, அந்த மானுக்கு ஆசைப்பட, அதனைப் பின்தொடர்ந்து அம்பு எய்து கொன்றீர். மாரீசனின் வஞ்சகக் குரல்கேட்டு ஏமாந்த சீதை, இலக்குவனை வெளியே அனுப்ப, இராவணன் சீதையைக் கவர்ந்து சென்றான். வருத்தமுற்றாலும் இராவணனை அழிப்பதற்குரிய காரணம் கிடைத்தது என்று மகிழ்ச்சி அடைந்தீர். (9)

சீதையை தேடிச் சென்றீர். வழியில் சடாயு, தன்னைக் கொன்று சீதையை இராவணன் கவர்ந்து சென்ற செய்தியைச் சொல்ல, அவனுக்கு ஈமக்கடன்களைச் செய்தீர். பிறகு கபந்தனைக் கொன்றீர். பம்பையாற்றங் கரையில் சபரியைச் சந்தித்தபின்னர் அனுமனைக் கண்டு மனம் மகிழ்ந்தீர். குருவாயூரப்பனே! என்னைக் காப்பாற்றி அருள் புரிய வேண்டுகிறேன். (10)

# தசகம் - 35

## இராமன் - சுக்கிரீவன் நட்பு

பிறகு அனுமன் மூலமாகச் சுக்கிரவனுடன் நட்புப் பூண்டீர் சுக்கிரீவனுக்கு உம்முடைய வல்லமையை உணர்த்துவதற்காக, கால் கட்டை விரலால் துந்துபியை தூக்கி உயரே எறிந்தனை. ஒரே அம்பின் மூலம் ஏழு மரங்களை ஒரே சமயத்தில் துளைத்து வீழ்த்தினை. சுக்கிரீவனுக்குக் கேடு நினைத்தவனும் அளவற்ற பராக்கிரமம் படைத்தவனுமான வாலியை வதம் செய்தனை. பின்னர் சீதையின் பிரிவால் மனம் வருந்தி மதங்க முனிவரின் ஆசிரமத்துக்கு அருகில் தங்கி மழைக் காலத்தை கழித்தனை. (1)

பிறகு தம்பி இலக்குவனின் கோபம் கண்டு பயந்து வந்த சுக்கிரீவனுடைய குரங்குப் படை, சீதையைத் தேடிக் கண்டுபிடிக்கப் புறப்படும் முன், உம்மை வணங்கி வாழ்த்தியது. குரங்குகள் உமது துணைவியைத் தேடச் சென்றன. அனுமன் கையில் கணையாழியும் தூதுச் செய்தியும் கொடுத்து அனுப்பினீர். (2)

உமது சரிதத்தை கேட்ட சம்பாதிக்கு புதிய இறக்கைகள் வளர்ந்தன. விரைந்து பறக்கும் ஆற்றல் பெற்ற அவனுடைய சொல்கேட்டு, அனுமன் கடலைக் தாண்டிச் சென்றான் இலங்கையில், சீதையைக் கண்டான், கணையாழியைக் கொடுத்தான். அசோக வனத்தை அழித்தான். அட்சய குமாரனுடன் திறமையாகப் போரிட்டான். பிரம்மாஸ்திரத்திற்குக் கட்டுப்பட்டுப் பின் சென்று இராவணனைச் சந்தித்தான். இலங்கையைத் தகனம் செய்தான். பிறகு திரும்பி வந்து சீதையின் சூடாமணியை உம்மிடம் அளித்தான். (3)

பிறகு சுக்கிரீவன், அங்கதன் உடன் வானரப்படை திரட்டி இலங்கைமீது போர் தொடுத்தீர். கடற்கரையில் இராவணன் தம்பி விபீஷணன் அடைக்கலம் கேட்டுச் சரண் புகுந்தவனை ஏற்றுக் கொண்டீர். பகைவரின் இரகசியச் செய்திகள் யாவும் அவனிடம் இருந்து கேட்டறிந்தீர். உன்னுடைய வேண்டுகோளை ஏற்க மறுத்த கடலரசன் மீது அக்னிஅஸ்திரத்தைத் தொடுக்க, அவன் அதைக் கண்டு அஞ்சி, கடலின் நடுவே வழிவிட்டான். (4)

எட்டுத் திக்கும் சென்ற வானவர்கள் மலைகளையும் குன்றுகளையும் கொண்டு வந்து கொட்டி, பாதை அமைத்தார்கள். அதன் மூலம் இலங்கைக்குச் சென்று பற்கள், நகங்கள், கற்கள், மலைகள் மரங்கள் ஆகியவற்றை ஆயுதங்களாகக் கொண்ட படைகளைக் கொண்டு அரக்கர்களைக் கருவழித்தீர். போர்க்களத்தில் புயலெனச் சுழன்ற

இந்திரஜித் நாகபாணத்தால் உங்களைக் கட்டி வீழ்த்தினான். ஆனால் கருடனின் சிறகுகள் வீசிய காற்றில் அந்த கட்டிலிருந்து விடுபட்டீர். (5)

இலக்குவன் சக்தி ஆயுதத்தால்போரில் உயிர் துறந்தான். அனுமன் கொண்டு வந்த சஞ்சீவி மலையில் உள்ள பச்சிலைக் காற்றால் உயிர் பிழைத்தான் மாயைகளோடு போர் புரிந்து இந்திரஜித் கொன்று வீழ்த்தப்பட்டான். அரக்கரின் மாயை கலகக்கத்தை உண்டு பண்ணினாலும் அதனை விபீஷணன் அளித்த விளக்கம் மாற்றியது. நிலம் நடுங்கப் படைக்கலன் எறிந்து போர் புரிந்த கும்ப கருணனைக் கொன்றீர். (6)

இந்திரன் அளித்த தேரில், அவன் அளித்த கவசத்தை அணிந்து கொண்டு இராவணனுடன் போர் புரிந்தீர். பிரம்மாஸ்திரத்தால் அவன் சிரங்களை ஒன்றன்பின் ஒன்றாக வெட்டி வீழ்த்தினீர். பின்னர் தீக்குளித்துத் தன் தூய்மையைக் காட்டிய சீதையுடன் புஷ்பக விமானம் மூலம் அயோத்திக்குத் திரும்பினீர். போரில் உயிரிழந்தும், தேவர் அருளால் மீண்டு உயிர் பெற்ற வானரப்படைகள் உன்னுடன் வந்தன. இலங்கைத் தலைவன் விபீஷணனும் உடன் வந்தான். (7)

மகிழ்ச்சியுற பட்டாபிஷேகம் நடைபெற்றது. பதினாயிரம் ஆண்டுகளுக்குமேல் மகிழ்ச்சியாக வாழ்ந்தீர். சீதையைப் பற்றிய பழிச் சொல்லைக் கேட்டு, கருவுற்றிருந்தவளைக் காட்டுக்கு அனுப்பி வைத்தீர். சத்ருகனன் மூலமாக இலவணன் என்ற அரக்கனை அழித்தீர். சம்புகனைக் கொன்றீர். வால்மீகி ஆசிரமத்தில் சீதை உன் மக்களைப் பெற்றெடுத்தாள். (8)

வால்மீகி முனிவர் எழுதிய இராமாயணத்தை வேள்விச் சாலையில் உன் மக்கள் பாடினர். முனிவர் விருப்பப்படி

சீதையை அடைய விரும்பினாலும், அவள் வர மறுத்து பூமிக்குள் புகுந்து கொண்டாள் இலக்குவன் உன்னை வைகுண்டத்திற்குத் திரும்பும்படி வேண்டினான். அதைப் பொருட்படுத்தாமல், சரயூ நதியில் மூழ்கி விண்ணுலகம் அடைந்தீர். பிறகு மீண்டு வைகுண்டம் சென்றடைந்தீர். (9)

காமத்திலும் அறத்திலும் அதிகமான பற்று வைப்பதால், பிரிவுத் துன்பமும் குற்றமற்றவர்களைத் துறத்தலும் உண்டாகும் என்ற உண்மையை உலகத்திற்கு விளக்குவதற்காகவே மானிடனாகவே வந்தீர். இல்லையெனில் தன்னிலே லயித்து தன்னையே இழந்து துன்பம் காணும் உமக்கு மனோ விகாரம் எப்படிப் பாதிக்கும் எவ்வாறு தோன்றும்? சக்கரம் ஏந்திய கையனே; ஐயனே; மெய்யனே; சத்துவ வடிவாக விளங்கும் குருவாயூரில் குடி கொண்ட கோவிந்தா; எனக்குற்ற நோய்களையும் துன்பங்களையும் போக்கி இன்னருள் காட்டமாட்டாயா! (10)

## தசகம் - 36

### பரசுராமன் சரிதம்

முன்பு ஒருமுறை, அத்திரி முனிவருக்கு அனுசூயை மூலமாகத் தத்தன் என்ற மகனாகப் பிறந்தீர். அப்போது உமது சீடர்கள் தந்த தொல்லைகளைத் தாங்காமல், மனைவியுடன் தனியாகச் சென்று வாழ்ந்தீர். அப்பொழுது உம்மைத் தொழுத சிறந்த பக்தனான கேகய நாட்டின் அரசனான கார்த்தவீரியார்ஜுனனுக்கு எட்டு வகையான செல்வங்களைப் பெறுவதற்கான வரங்களை அளித்தீர். இறுதியில் மரணத்தையும் அவனுக்கு ஒரு வரமாகவே அளித்தீர். (1)

பிறகு அவனுக்குக் கொடுத்த வரங்களை உறுதிப்படுத்த நினைத்தீர். அவனது ஆளுகைக்கு உட்பட்ட பிரதேசத்தில்

உள்ள அரசர்கள் பிராமணர்களையும் பழித்துப் பகையாக்கி, அடக்கமற்று பூமிக்குப் பாரமாக இருந்ததால். அந்த அரச குலத்தைக் கருவறுக்க பிருகு முனிவரின் மரபில் உதித்த ஜமதக்னி முனிவருக்கும் அவரது மனைவி இரேணுகா தேவிக்கும் இராமன் என்ற பெயரில் மகனாக அவதரித்தீர். (2)

உமது பதினான்கு வயதிலேயே வேதங்களையும் சகல சாஸ்திரங்களையும் கற்றுத் தேர்ச்சி பெற்று, தந்தையின் கட்டளையை மீறி நடந்த உனது சகோதரர்களையும் தாயையும் தந்தையின் கட்டளைப்படி வெட்டிக்கொன்றீர். பிறகு கோபம் தணிந்த தந்தையை வேண்டி அவர்களை மீண்டும் பிழைத்து எழச் செய்தீர். உன் தாய் உனக்குப் பல வரங்களைத் தந்தாள். (3)

தாயின் விருப்பத்திற்கு இணங்கி உமது தந்தை தோத்திரம் செய்து தெய்வீகப் பசுவான காமதேனுவைத் தனது ஆசிரமத்திற்கே கொண்டு வந்தார். பிறகு ஆசிரமத்தை விட்டு இமயமலைக்குச் சென்றீர். சிவ பெருமானை வேண்டி அவரிடம் இருந்து அவரது கோடரியைப் பரிசாகப் பெற்றீர். அவர் குறிப்பிட்ட அரக்கனை அழித்தீர். மேலும் பல ஆயுதங்களைப் பெற்றீர் பிறகு அனிருதவிரதன் என்ற முனிவருடைய நட்பைப் பெற்று உமது ஆசிரமத்திற்குத் திரும்பி வந்தீர். (4)

வேட்டையாடக் காட்டுக்குச் சென்ற கார்த்தவீரியார்ஜுனனை, உமது தந்தை வரவேற்று காமதேனுவின் உடன் பிறப்பான சுசிலை என்ற பசுவின் மூலம் கிடைத்த செல்வங்களால் உபசரித்தார். ஊர் திரும்பிய அரசன் தீயவர்களான தனது அமைச்சர்களின் சொல் கேட்டு, அந்தப்பசுவை விலைக்கு வாங்குவதற்காக ஒரு அமைச்சனை அனுப்பினான். தந்தை தரமறுக்கவே, திருட்டுத்தனமாக

...ளை எடுத்துச் செல்ல முற்பட்டான். அதனைத் தடுத்த ...து தந்தையைக் கொன்றான். அதனால் கோபம் ...ாண்ட பசு, எதிரிகளின் கூட்டத்தை அழித்தது. ஆனால் ...குணம் படைத்த அமைச்சன் அந்தப் பசுவின் ...றினைக் கவர்ந்து சென்றான். (5)

சுக்கிராச்சாரியாரின் உதவியால் உமது தந்தை உயிர் ...ழைத்தார். தந்தை சொல் கேட்டுக் கடுங்கோபம் ...ாண்ட நீர், தியானத்தால் மகேசன் அளித்த வில்லையும் ...ம்புகளையும் கோடரியையும் எடுத்துக் கொண்டு குதிரை ...ளாடு சகவாகனன் சென்ற தேரோட்டி ஓட்டி வந்த ...ரில் அமர்ந்து, மகஹிஷ்மதி எனும் நகரம் சென்று ...றினைத் திருப்பிக் கொடுக்க வேண்டுமென்று இன் ...ால் கூறி நயமாக வேண்டினீர். கன்றைக் கொடுக்க ...றுத்த அரசனுடன் நீர் போர் செய்தீர். (6)

கார்த்தவீரியார்ஜுனன், பல்லாயிரக்கணக்கான படை ...ர்களுடனும், பலவகைப்பட்ட சேனைப் பிரிவு ...ளுடனும் உம்மை எதிர்த்துப் பெரும் போர்தொடுத்தான். ...மது கோடரியாலும், அம்புகளாலும் அவனது சேனை ...ன்னா பின்னமாகியது அவன் மீதியுள்ள போர் வீரர் ...ளோடு கடும் போர் புரிந்தான். (7)

தன்னைத் தடுத்து நிறுத்திய நருமதையில் மூழ்கிய ...ராவணனுடன் போர் செய்து வென்றவன் கார்த்தவீரி ...ார்ஜுனன், அத்தகைய வீரன், தனது ஆயிரங்கரங் ...ளாலும் ஆயுதங்களாலும் உம்மைத் தாக்கினான். ஆனால் ...வனை எதிர்த்த உம்மிடத்தில் சுதர்சனச் சக்கரம் கூடப் ...யன்படவில்லை. உம்மை ஹரி என்று அறிந்து மகிழ்ச்சி ...பாடு தியானம் செய்தான். அந்தத் தியானத்தின் பலனாக ...வனது பாவங்கள் யாவும் விலகத் தூயவனானான். பிறகு ...வனை நீர் கொன்று வீழ்த்த வைகுண்டபதவி பெற்றான். (8)

மறுபடியும் சீற்றம் அடைந்த கார்த்தவீரியார் ...ஜுனனின் குடிமக்கள் உமது தந்தையைக் கொன்றனர்.

உமது தாய் இரேணுகை மார்பில் அடித்துக் கொண்டு வாய் விட்டு அலறி அழுதாள் அப்பொழுது கடுமையான சபதம் எடுத்துக் கொண்டீர். தியானத்தால் பல ஆயுதங்களையும் தேரையும் பெற்றீர். பிராமணர்களுக்கு எதிரிகளாக நிலவுலகில் வாழ்ந்த அரசர்கள் அனைவரையும் மழுவாலி அம்புகளாலும் அழித்தீர். நிலவுலகில் அரசர்கள் பூண்டற்றுப் போனார்கள். (9)

பின்னர் உமது தந்தையை உயிர் பிழைக்கச் செய்தீர். இருபத்தியொருமுறை அரசர்கள் பரம்பரையையே அழித்தீர். சமந்தபஞ்சகம் என்ற இடத்தில் இரத்தக் குளத்தில் நின்று பிதுருக்களுக்குத் தர்ப்பணம் செய்தீர். பின்பு நடத்திய வேள்வியில் காசியபர் முதலானோர்க்கு நிலங்களை தட்சிணையாக வழங்கினீர். மீண்டும் சல்யன் என்ற அரசனோடு போர் புரியத் துவங்கும்போது கிருஷ்ணர் அவனைக் கொல்வார் என்று சனத் குமரர்கள் தடுத்தனர். போரை நிறுத்தி அமைதி காத்தீர். (10)

பிருகுகுலத்தின் தலைவனே; குருவாயூர்க்கோவிந்தா, ஆயுதங்களைத் துறந்து பின்னர் மகேந்திர மலையில் தவம் செய்தீர். அப்பொழுது கோகர்ணக்கரையில் உள்ள நிலம் கடலில் மூழ்கியது. முனிவர்களின் வேண்டுகோளுக்கிணங்கி, அக்னியாஸ்திரத்தைத் தொடுக்க கடல் அஞ்சி விலகியது. வேள்வியின் நெய்க்கரண்டியை வீச, கடல் விலகி, நிலம் தோன்றியது. இவ்வாறு கேரளத்தை உண்டாக்கினீர். அத்தகையமேலவனே; என்னைக் காப்பாற்றி அருள் புரிய வேண்டுகிறேன். (11)

## தசகம் - 37

### கிருஷ்ணாவதாரத் துவக்கம்

முழுமை நிறைந்த ஆனந்தத்தின் அழகு உருவே! ஹரியே! முன்னொரு காலத்தில் தேவர்களுக்கும் அரக்கர்

களுக்கும் நடந்த போரில். அரர்கர்களைக் கொன்றீர். ஆனால் பாவங்களின் வயப்பட்ட அந்த அரக்கர்களுக்கு முக்தி கிட்டவில்லை. மண்ணுலகில் பிறந்த அரக்கர்களின் சுமையினால் நிலமடந்தை துன்புற்றாள். அதனால், அவள் தேவர்களுடன் சத்திய உலகத்தில் உள்ள பிரமனைக் காணச் சென்றாள். (1)

"கொடிய அரக்கர்களின் சுமையைத் தாங்காது கடலில் மூழ்கி விட நினைத்திருக்கிறேன். என்னைக் காப்பாற்ற வேண்டும். எனது தேய்ந்த நிலைமைப் பற்றித் தேவர்களிடம் கேட்டறிவீராக!" என்று கூறி அழுதாள் அப்பொழுது தன்னிலை கெட்ட நிலமகளைப் பிரமன் பார்த்தான் பிறகு சுற்றிலும் இருந்த தேவர்களின் முகங்களை நோக்கிய பின்னர், உம்மைத் தியானித்தார். (2)

பின் தேவர்களைப் பார்த்து "தேவர்களே; நிலமகள் கூறுவது முற்றிலும் உண்மையே இவளையும் உங்களையும் காப்பதற்குச் சக்தி படைத்தவன் இலட்சுமிநாயகனே; நாம் அனைவரும் சிவனை அழைத்துக் கொண்டு பாற்கடலுக்குச் சென்று அவரை வணங்கித் துதிப்போம்" என்று கூறினார். அனைவரும் அப்படி உம்முடைய இருப்பிடத்தை அடைந்தனர். (3)

தென்றல் இனிமையாகத் தவழ்ந்து வரும் பாற்கடலின் கரையை அடைந்து, ஒன்று கூடி, மனதை ஒரு நிலைப்படுத்தி உம்மைத் தியானம் செய்தனர். அப்பொழுது பிரமனின் உள்ளத்தில் உன் அருள் வாக்கு ஒலித்தது. "நாராயணன் எனக்குக் கூறியவற்றை நீங்களும் கேட்பீர்களாக" என்று மகிழ்ச்சியோடு கூறினான். (4)

மேலும், "நிலமகளுக்கும் தேவர்களுக்கும் நீசர்களால் ஏற்பட்ட இழிநிலையை நான் அறிவேன். அதைப் போக்குவதற்காக யாதவர் குலத்தில் தோன்ற இருக்கிறேன் தேவர்கள் தத்தம் அம்சங்களோடு விருஷ்ணி குலத்தில்

பிறப்பார்கள். தேவ மங்கையரும். எனக்குப் பணியாற்றப் பூமியில் பிறப்பர்'' என்ற அருள் மொழியை பிரமன் எடுத்துக் கூறினான். (5)

ஈசனே! உமது அருள் மொழி கேட்டு அனைவரும் அகமகிழ்ந்தனர். மனம் அமைதியடைந்தனர். பிறகு கவலையின்றித் திரும்பிச் சென்றனர். உமது தொடர்பால் புகழும் தூய்மையும் பெற்ற நகரம் மதுரை ஆகும். அதனை அரசாண்ட சூரசேனனின் மகன் வசுதேவன் என்பான்; அவன் புண்ணியம் பல செய்தவளும் தேவகனின் மகளும் ஆகிய தேவகியைத் திருமணம் செய்து கொண்டான். (6)

தேவகியின் சகோதரரான கம்சன் தன் தங்கையையும் அவள்கணவரையும் பெருமைப்படுத்த எண்ணி, அவர்கள் ஏறிவந்த ரதத்தில் தேரோட்டியாக அமர்ந்து அதனைச் செலுத்தத் தலைப்பட்டான். அப்பொழுது ''இவளுடைய எட்டாவது மகன் கொடியவனாகிய உன்னைக் கொல்வான்' என்ற ஒலி விண்ணில் எழுந்தது அதனால் அச்சம் அடைந்த கம்சன், தேவகியை கொல்வதற்காக கொலை வாளை எடுத்தான். (7)

தேவகியின் கூந்தலைப் பற்றி இழுத்த கம்சனை பல வாறான இனிமையான மொழிகளால் வசுதேவன் சாந்தப் படுத்தினார் தங்களுக்குப் பிறக்கும் குழந்தைகளை எல்லாம் அவனிடம் ஒப்படைத்து விடுவதாக ஆறுதல் கூறினார். அதனால் சமாதானம் அடைந்த கம்சன் தேவகியை கொல்லாமல் விட்டு விட்டான். தான் வாக்கு றுதி அளித்தபடி, முதலில் பிறந்த குழந்தையை கம்சனிடம் ஒப்படைத்தாள். ஈவு இரக்கமின்றி அந்தக் குழந்தையை உடனே தன் வாளால் வெட்டிக் கொன்று அந்த இரத்தத்தைப் பார்த்து மகிழ்ந்தான். (8)

அப்போது நாரத முனிவர், உமது கருத்தின்படி கம்சனைப் பார்த்து ''அரசே நீங்கள் அசுரர் அல்லவா?

யாதவர்களோ தேவர்கள். இதனை நீ அறியாததென்ன? மாயாவியாகிய ஹரியே உன்னை கொல்வதற்காகப் பிறப்பான் என்று கூறினார். அதைக்கேட்ட கம்சன் வசுதேவனுடைய மக்களைக் கொன்றான். யாதவக் குலத்தைச் சேர்ந்தவர்களை நரகத்தை விட்டு வெளியேற்றினான். (9)

மாதவனே! உமது ஆணைப்படி, பாம்பரசனாகிய ஆதிசேஷன் ஏழாவது கருவாக இடம் பெற்றான். மாயை அதனை உரோகிணியிடம் கொண்டு சேர்த்தது. சச்சிதானந்த ரூபனாகிய நீரும் தேவகியின் வயிற்றில் எட்டாவது கருவாக இடம் பெற்றீர் எங்கு நிறைந்த கண்ணா! தேவர்களால் போற்றப்படுபவனும் தேவகியின் மணி வயிற்றில் உதித்தவனும் ஆகிய நீர்தான் என்னைப் பிடித்திருக்கும் இந்த தீராத நோயின் கொடுமையிலிருந்து என்னைக் காப்பாற்றி அருள் புரிய வேண்டும். (10)

# தசகம் - 38

## கிருஷ்ண அவதாரம்

ஆனந்த வடிவான இறைவனே! உமது அவதாரத்துக்கு உரிய காலம் நெருங்கி விட்டது. உன் திருவுருவில் கிளம்பிய ஒளியைப்போல மேகங்கூட்டங்கள் நிறைந்து காணப்பட்டன. அவ்வாறு மழைக்காலம் காட்சி தருகின்றது அல்லவா? (1)

மேகங்கள் பொழிந்த நீரால், திக்கெங்கும் குளிர்ச்சி அடைந்தன. விரும்பியதை பெற்ற நல்லவர்கள் மகிழ்ச்சி கடலில் மூழ்கினர். அப்பொழுது நடு இரவில், விண்ணில் மதி தோன்றும் வேளையில், மூவுலகங்களின் துன்பங்களைப் போக்கக் கூடிய நீர் இவ்வுலகில் அவதரித்தீர். (2)

சின்னச்சிறு குழந்தையாக இருந்தாலும். உன் திரு மேனி மிகவும் வல்லமை வாய்ந்தது. தலையில் கிரீடம், கைவளை, தோள்வளை, முத்துமாலை ஆகியவற்றின் ஒளியுடன், சங்கு, சக்கரம். தாமரை மலர், கதாயுதம் தரித்த கைகளோடு காட்சி தந்தீர். கார்மேகத்தை ஒத்த நீல நிறத்துடன் அந்த அறையில் காட்சி தந்தீர். (3)

நீ பிறக்கும் இடத்தை லட்சுமி வசிப்பதற்கேற்ற இட மாகக் கம்சன் வைக்க வில்லை. ஆனால் எப்போதும் உன் மார்பில் வசிக்கும் இலட்சுமியை உமது கடைக் கண் ணால் பார்த்தாலே அந்த இடம் லட்சுமிகரமாகக் காட்சி அளித்தது. (4)

மகா ஞானிகளான முனிபுங்கவர்களின் அறிவுக்கு எட்டாத தொலைவில் உமது திருமேனி இருந்தது. அதனை வசுதேவன் தன் கண்களால் கண்டார். கண்களில் நீர் பெருக, உடல் சிலிர்க்க எல்லையில்லா ஆனந்தத்தைப் பெற்றார். மனங்கனிந்த வசுதேவன் இனிய நறுங்கனியான உம்மைப் போற்றித் துதித்தார். (5)

''தேவதேவனே! புருஷோத்தமனே! துன்பம் நீக்கப் பிறந்த தூயவனே! எல்லா உயிர்களையும் ஒன்றெனக் கருதி கருணை காட்டுபவனே! மாயலீலா வினோதனே! கடைக்கண் காட்டி கவலை வினைகளைப் போக்க வேண்டும்'' என்று நெடுநேரம் துதித்தார். (6)

கொடியுடலான் தேவகியின் கண்களிலும் மகிழ்ச்சிப் பெருக்கால் நீர் பெருகி வழிந்தது. உன் கல்யாண குணங் களைப் பற்றிப் பாடித் துதித்துப் போற்றினாள். அருளுக்கு உறைவிடமான நீர், அவர்களிருவருக்கும் அவர் களது முன்னிரண்டு பிறவிகளைப் பற்றி எடுத்துரைத்தீர். பிறகு உமது தாயின் வேண்டுதல்படி, மானிட உருவை எடுத்துக் கொண்டீர். முன்பெடுத்த இரு பிறவிகளில்,

பிருச்னி சுதபஸ் ஆகியவர்க்கு பிருச்னி கர்ப்பன் ஆகவும் அதிதி காச்யபன் ஆகியவர்க்கு வாமன னாகவும் பிறந்துள்ளீர். (7)

அதன் பிறகு உம்மை, நந்தகோபனுடைய மகளுக்குப் பதிலாக மாற்றி வைக்கும்படி வசுதேவனுக்கு ஆணை இட்டீர். உடனே அவர், உயர்ந்தோர் உள்ளத்தில், தாமரைத் தடாகத்தில் இருக்கும் அன்னமாக இருக்கும் உம்மை தமது இரு கரங்களாலும் வாரி எடுத்துக் கொண்டார். (8)

அச்சமயம், நந்தகோபனுடைய இல்லத்தில் யோக நித்திரை பிறந்திருந்தாள். அவள் நகரமக்கள் அனைவரையும் கண்களை மூடிக்கொண்டு உறக்கத்தில் ஆழ்ந்திருக்கும்படி செய்து விட்டாள். உமது கட்டளைப் படி அறிவற்ற கதவுகள் தாமே திறந்து கொண்டன. இதில் அதிசயம் என்ன இருக்கிறது. (9)

நல்வினை பல செய்த வசுதேவன் உம்மைக் கரங்களில் தூக்கிக் கொண்டு மெதுவாகப் புறப்பட்டார். ஆதிசேஷன் படம் எடுத்துச் குடை பிடித்தான். தலைகளில் இருந்த இரத்தினங்கள் ஒளி வீசி வழிகாட்டின. ஈசனே நோயைப் போக்கிக் காப்பாற்ற வேண்டும். (10)

# தசகம் - 39

## யோக மாயையின் தோற்றம் கண்ணன் பிறந்தநாள் விழா

யதுகுலத்தில் தோன்றிய வசுதேவன் தங்களை ஏந்திய கரங்களோடு யமுனைக் கரையை அடைந்தான். யமுனையில் வெள்ளம் பெருக்கெடுத்துக் கரை புரண்டு ஓடியது. ஆனால் என்ன மாயம்! பெருகிய வெள்ளம் ஒரு நொடியில் கணுக்கால் அளவுக்கு தணிந்து ஓடியது. (1)

யாதவ மகளிர் நந்தகோபன் இல்லத்தில் உறங்கிக் கொண்டிருந்தனர். பிறந்த பெண் குழந்தை மெதுவாக அழுது கொண்டிருந்தது. கதவுகள் திறந்து கிடந்தன. அந்த இல்லத்திற்குள் வசுதேவன் சென்றார். அங்கே உம்மைப் படுக்கவைத்து விட்டு அங்கே இருந்த பெண் குழந்தையை எடுத்துக் கொண்டு விரைவாகத் தன் இருப்பிடம் வந்து சேர்ந்தார். (2)

குழந்தையின் அழுகுரல் கேட்டுப் பணியாட்கள் விழித்து எழுந்தனர். விரைந்து சென்று கம்சனிடம் தகவல் கூறினர். தலைவிரிகோலமாக ஓடி வந்த கம்சன், தன் தங்கையின் கரத்தில் இருப்பது பெண் குழந்தை என்று அறிந்தும் மகிழ்ச்சி கொள்ளவில்லை. (3)

இந்தக் குழந்தை நாராயணனின் மாயையால் தோன்றியதாக இருக்கும் என்று நினைத்து, தங்கையின் கரத்திலிருந்து குழந்தையை முரட்டுத் தனமாக இழுத்துப் பறித்தான், அந்தக் குழந்தையைக் கற்பாறையில் ஓங்கி அடித்தான் (4)

காலனுடைய பாசக்கயிற்றிலிருந்து உமது அடியவர்கள் நொடியில் விடுபட்டு விலகுவதுபோல், அக்குழந்தை கம்சனுடைய கரத்திலிருந்து விடுபட்டு வேறு ஒரு உருவம் தாங்கி விண்ணை நோக்கித் தாவி, எட்டுக் கரங்களிலும் எட்டுக் வகையான ஆயுதங்களைத் தாங்கியவளாக விண்ணில் பறந்து நின்றாள். எத்தகைய அதிசயமான செயல் அது? (5)

''பிரபுவே! அவள் அந்தக் கம்சனைப் பார்த்து, ''கொடியவனே! கம்சனே! உன்னைக் கொல்லப் பிறந்தவன் வேறு ஒரு இடத்தில் இருக்கிறான். உன்னைப் பற்றி நீயே ஆய்ந்து அறிவாயாக!'' என்று கூறினாள். பின்னர் தேவர் துதிபாட அவ்விடத்தை விட்டு நீங்கி மண்ணுலகில் உள்ள பல கோவில்களையும் சென்றடைந்தாள். (6)

மறுநாள், நடந்தவற்றைக் கம்சன் கர்வம்மிக்க- பிரலம்பன், பகன் பூதனை போன்ற அசுரர்களுக்குக் கூறினான். அந்த அரக்கர்கள், உன்னைக் கொல்லும் விருப்பத்தால், மற்றக் குழந்தைகளை எல்லாம் கொன்று அச்சமின்றி வாழ்ந்து வந்தனர். அருள் இல்லாதவர்களுக்கு செய்ய முடியாதது என்று ஒன்றும் கிடையாது. (7)

முகுந்தனே! நந்தகோபனின் வீட்டில் கால்களை அடைத்து யசோதையின் பக்கத்தில் அழுது கொண் டிருந்தீர். உறங்கிக் கொண்டிருந்த பெண்கள் விழித் தெழுந்து, குழந்தை பிறந்த செய்தியை மற்றவர்களுக்குத் தெரிவித்தனர். என்ன சொல்வேன்? எப்படித் சொல் வேன்? கோகுலம் முழுவதும் மகிழ்ச்சிக் கடலில் திளைத்தது. (8)

மனங்கவர்ந்த உம்மை முதன் முதலாகக் கண்டு யசோதை மகிழ்வுற்றாள். உம்மைத் தொட்டும் தடவியும் மார்போடணைத்தும் பால் ஊட்டினாள். புண்ணியம் புரிந்தவர்களை அனைவரிலும் அவளே மிகச் சிறந்தவள். யாருக்கு கிடைக்கும் இத்தகைய பெறற்கரிய பேறு? (9)

மகிழ்ச்சியில் திளைத்த நந்தகோபனும், மறையவர் களுக்கு கேட்டதை இல்லை என்னாது கொடுத்தான். மற்ற இடையர்களும் மங்கல காரியம் பல புரிந்து மகிழ்ந் தனர். ஆயர்பாடியே விழாக்கோலம் பூண்டது. மூன்று உலகங்களையும் காப்பாற்றி நலம் அருள வந்தவனே என்னைக் கொடிய பிணியிலிருந்து காப்பாற்றி அருள் புரிய வேண்டுகிறேன். (10)

## தசகம் - 40

## பூதனைக்கு முக்தி

கம்சனுக்குத் துணை நிற்கும் பூதனை போன்றவர்கள் செய்து வரும் முயற்சிகளை அறிந்த வசுதேவன், கப்பம் கட்டுவதற்காக மதுரைக்கு வந்த நந்தகோபனைச் சந்தித்துப் பேசினான். (1)

''உனக்குப் பிறந்த பிள்ளை எனக்குப் பிறந்ததைப் போன்றே மகிழ்ச்சி அடைகிறேன்'' என்று வசுதேவன் கூறினார். நந்தகோபனைப் பார்த்து அன்புடன் புகழ்ந்து பேசினார். (2)

''இங்கே பல தீய அறிகுறிகள் உனக்காகத் தோன்று கின்றன. ஆகவே விரைந்து கோகுலத்திற்குச் செல்வா யாக'' என்று கூறினர். நந்தகோபனும் உனக்குத் தீங்கு நேரிடும் என்ற அச்சத்தால் விரைந்து கோகுலம் போனான். (3)

வஞ்சகக் கள்வா, அங்கே கோகுலத்தில் பெண் ஒருத்தி உமது அருகில் வந்து நின்றாள். வண்டுகள் மொய்க்கும் கூந்தலுடன், அழகிய உருவத்துடன் வந்து அவள் அப்படி நின்றாள். (4)

அவள் பெயர் பூதனை. அரக்கர் குலத்தில் தோன்றி யவள். குழந்தையின உயிரைப் பறிக்க வந்தவள். இடைச் சியர் அவளை ஆச்சரியத்துடன் உற்று நோக்கினர். ஆனால் அவளோ ஒன்றும் கவனியாமல். உம்மைக் கரத்திலே எடுத்துக் கொண்டாள். (5)

தன் அழகாலும், கவர்ச்சியான பேச்சாலும், விளை யாட்டாலும் ஆயர்குல மங்கையரின் மனம் கவர்ந்தாள். தடையின்றி வீட்டில் அமர்ந்து உம்மைத் தன் மார்போடு சேர்த்துப் பாலூட்ட ஆரம்பித்தாள். (6)

குழந்தைகள் கொல்லப்பட்டிருப்பதால், கடுங்கோபம் கொண்டிருந்த நீர், அவள் மடியில் ஏறித் தயக்கமின்றி அமர்ந்து கொண்டு, மாம்பலம் போன்ற பெரிய முலையில் வாய் வைத்துக் கொஞ்சம் கொஞ்சமாக அதில் வரும் நஞ்சினை உறிஞ்சத் தலைப்பட்டீர். (7)

பால் அருந்தும் பாவனையில், பாவை அவளுடைய உயிரையும் கொஞ்சம் கொஞ்சமாக, ஆனால், உறுதியாக உறிஞ்சிக் குடிக்கத் துவங்கினீர். உயிர் பறிக்கும் உமது

செயலினால் அதிர்ச்சியுற்ற பூதனை, அச்சம் தரக்கூடிய அரக்கி வடிவெடுத்து ஓங்காரக் குரல் எழுப்பி, உயிர றறு நெடுமரம் போல் பூமியிலே பெருத்த சப்தத்துடன் விழுந்தாள். (8)

அச்சம் உண்டாக்கிய அந்தக் கூக்குரலைக் கேட்டு, இடையர்கள் நடுங்கினர். பூத வடிவைப் பார்த்து மயக்கம் அடைந்தனர், அப்பொழுது நீர் அவளுடைய மார்பில் புரண்டு விளையாடிக் கொண்டிருந்தீர். கோபியர் ஓடி வந்து உம்மை வாரி எடுத்து அணைத்துச் சென்றனர். (9)

மங்களங்களின் வடிவமாகத் திகழ்பவரே! குருவாயூரில் கொலுவிருக்கும் கொற்றவனே! உமது பெயர் பாடியே பெண்கள் உமக்குப் பலவகையான காப்புச் செய்தனர். அத்தகைய பெருமை மிக்கவரே! என்னுடைய கடுமையான நோய் போக்கி, என்னை என்றென்றும் உமது அடியவர்க்கு அடியவனாக ஏற்றுக்கொள்ள வேண்டுகிறேன். (10)

## தசகம் - 41

## பூதனை உடல் எரித்தல்
## கண்ணனுக்கு விழா எடுத்தல்

வசுதேவன் கூறிய அறிவுரைப்படி, கோகுலத்திற்கு விரைந்து திரும்பி வந்து கொண்டிருந்த நந்தகோபன், வழியில் மரங்கள் எல்லாம் துகளாக்கி வீழ்ந்து கிடந்த பெரும் பொருள் ஒன்றைக் கண்டு அச்சமுற்றான். தன் வீட்டுக்குள்ளே விரைந்து புகுந்தான். (1)

ஆய்ச்சியர் மூலம் நடந்தவை அனைத்தையும் அறிந்து கொண்டான். அச்சத்தாலும் ஆச்சரியத்தாலும் ஆயர் குலத்து ஆண்மக்கள் வாய் திறக்கவில்லை. பிறகு உம்மால் வீழ்த்தப்பட்டு மகா பயங்கரத்துடன் காட்சி அளித்த அந்தப் பெரிய உடலை துண்டு துண்டாகக் கோடாரியால் வெட்டித் தீயிட்டு எரித்து அழித்தனர். (2)

உமது திருவாய் பட்டு தூய்மை அடைந்த பூதனையின் உடலிலிருந்து உயரமாகப் புகை கிளம்பியது. அது வீசிய மணம், அகிலா, சந்தனமா, குங்கிலியமா என்று அறிய முடியாத சந்தேகத்தை உண்டாக்கியது. (3)

தூய்மையான பல பெயர்களைக் கொண்டவர் நீர்' உம்மோடு தொடர்பு கொண்டால் உடனுக்குடன் பலன் கிடைக்கிறது. மறுபிறப்பு வரை காத்திருக்க வேண்டிய தில்லை என்று ஆயர்குடி மக்களுக்கு அறிவுறுத்தினீர். அரக்கி பூதனையே அத்தகைய நறுமணம் திகழக்கூடிய வளாக மாற்றப்பட்டு விட்டாள். (4)

பேய் முலையோடு வந்தாள். பூதனையால் கண்ணன் கொல்லப்படவில்லை. அவளே மாறாக மாய்க்கப்பட் டாள். வசுதேவன் இதனை நன்குணர்ந்து முன்னரே எச்சரித்துள்ளார். இதென்ன விந்தை! என்று ஆயர்பாடி மக்கள்அதிசயித்துப் பேசினர். உமது அழகுத் திருமுகத் தைப் பார்த்துப் பார்த்து ஆனந்தத்தில் பேரானந் தத்தில்—மூழ்கினர். (5)

வசுதேவா! கோகுலத்தில் வாழ்ந்து வந்த காலத்தில் செல்வங்கள் அனைத்தும் பெருகி நிறைந்தன. குன்றாமல் குறையாமல் மங்களச் செயல்கள் நாள்தோறும் நடை பெற்றன. நாடெங்கும் அளவில்லா மகிழ்ச்சியில் மூழ்கியது. (6)

கோபி மங்கையர், தத்தம் வீடுகளில் நாள்தோறும் உமது அழகிய உருவத்தையும் ஆனந்தம் தரும் புன்முறு வலையும் பற்றிப் பேசி மகிழ்ந்தனர். தங்கள் வேலைகளை விட்டு விட்டு உம்மைக் காணத் துடித்தனர். (7)

"குழந்தை என்னைத்தான் பார்க்கிறது என்னைக் கண்டு சிரிக்கிறது. கை நீட்டி அழைக்கிறது" என்று சிரித்து மகிழ்ந்து, ஆடி அணைத்து உச்சி முகர்ந்து உவகை யுற்று ஒப்பனை செய்து, ஓராயிரம் விளையாட்டுக்களில் ஈடுபட்டு மகிழ்ந்தனர் கோபியர்கள். (8)

தொட்டுத் தொழுவும் ஆசையினால், ஒருவர் மாற்றி ஒருவர் உம்மைத் தொட்டுத் தூக்கி மற்றவரிடம் கொடுத்து மகிழ்ந்து ஆடினர். அப்பனே! அப்பொழுது ஒரு செந்தாமரை மலரிலிருந்து மற்றொரு அழகிய மலருக்குத் தாவிச் செல்லும் மனோகரமான வண்டைப்போல் காட்சி தந்தனை. (9)

ஹரியே! யசோதைத் தன் மடியில் கிடத்தி உம்மை மார்போடணைத்துப் பாலூட்டி மகிழ்ந்தாள். பவள வாய் அசைவைப் பார்த்து மகிழ்ச்சியுற்றுச் சிரித்தாள் ஆகா! எத்தகைய உன்னதமான நிலையைப் பெற்று விட்டாள். அத்தகைய ஆண்டவனே! என்னை என்னுடைய நோய் களிலிருந்து காத்து இரட்சிக்க மாட்டாயா? (10)

# தசகம் - 42

## சகட அசுரன் வதம்

பெருமானே! உறவினர்களும் உற்றாரும் மறையவரும் மற்றவரும் கூடி நிற்க ஒரு நாள் யசோதை உமது பிறந்த நாள் விழாக் கொண்டாடினாள். உன்னை ஒதுக்குப்புற மாக ஒரு பெரிய வண்டியின் அருகில் படுக்க வைத்திருந் தாள். தன்னுடைய வீட்டு வேலைகளில் மும்முரமாக ஈடு பட்டிருந்தாள். (1)

உன் அருகில் இருந்து உம்மைப் பாதுகாப்பதற்காக இடைச்சிறுவர்களை நியமித்திருந்தாள். திடீரென அச் சிறுவர்கள் அச்சத்துடன் எழுப்பிய கூக்குரல் கேட்டது. பெரிய மரங்கள் சடசட என்று கீழே முறிந்து விழுகின்ற பேரொலியும் கேட்டது. (2)

அப்பொழுது கோபியர்கள் அந்தச் சத்தங்களைக் கேட்டுப் பயந்து பரபரப்பு இளமுலைகள் குலுங்க ஓடி வந்தனர். அதனால் களைப்படைந்தனர். வீட்டைச் சுற்றி யிருந்த திறந்த வெளியில் வானுயர ஓங்கி வளர்ந்திருந்த

மரங்கள் வேரற்றுக் கீழே விழுந்திருப்பதைக் கண்டனர். அவற்றின் நடுவே புன்முறுவல் பூத்த உம்மைக் கண்டனர். (3)

மறையவர்களும் மற்றவர்களும் நந்தகோபனுடன் சின்னக் கண்ணனுக்கு என்ன நேர்ந்ததோ என்று அஞ்சி, அரற்றி வாய் விட்டுக் கதறிக் கண்களில் நீர் பெருகி வழிய ஓடி வந்தனர். யசோதையின் அரவணைப்பில் கிடந்த உம்மைப் பார்த்து ஆறுதல் அடைந்தனர். (4)

என்ன இது? எப்படி நடந்தது? மரங்கள் அடியற்று விழுந்து கிடக்கின்றன. வண்டிச் சக்கரம் முறிந்து கிடக்கிறது. இதற்கென்ன காரணம்? ஒன்றும் புரியவில்லையே என்று அனைவரும் திகைப்புற்று உம்மை உற்று உற்றுப் பார்த்து விழித்த வண்ணம் இருந்தனர். (5)

இறைவனே! உமக்குப் பாதுகாவலாக நிறுத்தப்பட்டிருந்த சிறுவர்கள், ''பால் குடிக்க விரும்பிக் குழந்தை அழுதது தாமரை போன்ற காலால் அருகில் இருந்த வண்டியை உதைத்தது. அந்த வண்டி தலைகீழாகக் குப்புற விழுந்தது இதை நாங்கள் பார்த்தோம்'' என்று கூறினர். (6)

உம் பெருமையை உணராதவர்கள் சிறுவர்களின் சொற்களை நம்பத் தயங்கினர். ஆனால் பூதனைக்கு ஏற்பட்ட கதியை அறிந்திருந்த நந்தகோபன் போன்றவர்கள் மனதில் எழுந்த சந்தேகத்திற்கு விளக்கம் தேடி நின்றனர். (7)

கோபியர்கள் ஒன்று திரண்டு, ''தாமரைப் பாதங்கள் தாக்கப்பட்டனவோ பிஞ்சு விரல்கள் பாதிக்கப்பட்டனவோ,'' என்று மனம் உருகித் துடித்தனர். தங்கள் திருவுடலை அங்கும் இங்கும் தொட்டும் தடவியும் பார்த்து பரிதவித்தனர். (8)

உமது தந்தை, ''உலகங்களைக் காத்து இரட்சிக்கும் கடவுளால் என் குழந்தை காப்பாற்றப்பட்டு விட்டது''

என்று உம்மை வாரி எடுத்து மார்போடணைத்து உடல் புளகித்துத் தழுவிக்கொண்டார். (9)

வண்டியில் ஒளிந்து கொண்டு உம்மைக் கொல்ல நினைத்த அசுரனைக் கொன்றீர். அந்த அசுரன் ஆசத்துவ குணவடிவான உம்மிடம் இணைந்து விட்டான். அதனால் அவனுடைய உடலின் ஒரு சிறு துகள் கூட அங்கே கிடைக்கவில்லை. (10)

குருவாயூரில் குடியிருக்கும் கோபாலா! பெருமை யடைந்த மறையவர்கள் உமக்கு மங்கள வாழ்த்துக் கூறி மனங்களித்தனர். மதலைப் பருவத்துக் குறும்பு விளையாட்டுக்களால் அனைவரின் மனத்தையும் மகிழ்வித்துக் கொண்டிருந்தீர். அத்தகைய தயாநிதியே! நாயேன் படும் துன்பத்திலிருந்து என்னைக் காப்பாற்றி அருள் புரிய வேண்டுகிறேன். (11)

## தசகம் - 43

## திருணாவர்த்த வதம்

குருவாயூர்க் கோமானே! ஒருநாள் உம் தாய் யசோதை உம்மைத் தூக்குவதற்கு மிகவும் சிரமப்பட்டாள் காரணம் எளிதில் தூக்க முடியாதபடி உமது எடை அதிகரித்திருந்தது. மிகவும் சிரமப்பட்டுத் தூக்கிப் பஞ்சணையில் கிடத்தினாள். ஏன் இப்படியென்று யோசித்தபடி வீட்டு வேலைகளில் ஈடுபட்டிருந்தாள். ஆனால் அவளுடைய மனம் வேலையில் ஈடுபடாமல் உனையே நினைத்துக் கொண்டிருந்தது. (1)

திருணாவர்த்தன் என்ற பெரிய வடிவத்தை உடையவன் அச்சமூட்டும் பெரிய ஒலியோடு பூமியிலிருந்து புழுதியைச் சுருட்டி வாரிக் கொண்டு விண்ணுயரம் வளர்ந்து திரிந்தான். அப்போது உம்மையும் சுருட்டி எடுத்துக் கொண்டு புறப்பட்டான். (2)

ஆயர்குல மக்கள் அனைவருக்கும் சூறைக் காற்றில் உண்டான இருட்டினால் எதனையும் பார்க்க இயலவில்லை. குழந்தையைக் காணோமே என்று தவித்து யசோதை ஓலமிட்டாள். உம்மைக் காணாது அலறித் துடித்தாள். என்ன செய்வது என்று ஏங்கினாள். (3)

ஆனால் உமது சுமையைத் தாங்க முடியாமல் உடல் தளர்ந்து வேகம் குறைந்தான் அந்த அரக்கன். அசை முடியாமல் சோர்ந்தான். புழுதிப்படலம் அடங்கியது. ஆனால் உன் தாயின் ஓலம் அடங்கவில்லை. (4)

யசோதையின் அழுகுரல் கேட்டு நந்தகோபனும் மற்ற ஆயர்களும் ஓடிவந்தனர். அவர்களும் அழுதனர். உம்மைத் தூக்கிச் சென்ற அரக்கர்கள் உம்மை விட்டு விட முயன்றாலும் நீர் அவனை விடாமல் பிடித்துக் கொள்ள, அவன் பூமியில் வந்து விழுந்தான். (5)

அப்படி விழுந்தவன், பெரிய கூரான பாறையின் மீது விழுந்தான். அவனுடைய உடலின் மீது சிரித்த முகம் மாறாமல் நீர் ஆடிக் கொண்டிருப்பதைக் கண்ட ஆயர்குல மக்கள் அதிசயத்தோடு பார்த்துக் கொண்டிருந்தனர். (6)

பாறைமேல் விழுந்த அரக்கன், உடல் சிதைந்து உயிர் துறந்தான். ஆனால் அவன்மேல், தாமரைக் கரத்தால் அடித்துச் சிரித்துக் கொண்டிருந்தீர். பெருமலைபோல் கிடந்த அவன் உடல்மேல் வீற்றிருந்த நீலமணிவண்ணனாகிய உம்மை அவர்கள் வாரி எடுத்துக்கொண்டனர். (7)

நந்தகோபனும் மற்றவர்களும் ஒவ்வொருவராக உம்மைத் தூக்கி விளையாடி மகிழ்ந்தனர். உம் உடலில் முத்தமிட்டு மெய் சிலிர்த்தனர். ஆய்ச்சியர் கரங்களில் விழுந்து எழுந்து துள்ளி விளையாடிய கண்ணா! உன்னைத் துதிக்கின்றோம். (8)

தாய் தந்தையும் மற்றவர்களும், "அறியாத எங்களை ஆட்கொள்ளும் தெய்வமே! எங்கள் குழந்தையைக்

காப்பாற்று'' என்று ஆண்டவனை இறைஞ்சினர். வேண்டப்படுவனே வேண்டுதலுக்கு உரியவன் என்பதனை அவர்கள் அறியமாட்டார்கள் என்னே விந்தை இது! (9)

குருவாயூர்க் கோமானே! சூறாவளிக் காற்றாகச் சுழன்று வந்த அரக்கனை அழித்தவனே! வாத நோயால் என்னைச் சுற்றி வரும் பிணிகளை ஒழிக்க மாட்டாயா! பிணி நீக்கி என்னைக் காப்பாற்றி அருள் புரிய வேண்டுகிறேன்! (10)

## தசகம் - 44

## பெயர் சூட்டல் சோதிடம் பார்த்தல்

இறைவனே! சோதிடக்கலையில் வல்லவன் கர்க்க முனிவன். வசுதேவன் சொற்படி உமக்குப் பெயர் சூட்டுகின்ற சடங்கினைச் செய்வதற்காக எவரும் அறியாமல் உமது இல்லத்திற்கு வந்தான். (1)

அதனால் மனம் மகிழ்ந்த நந்தகோபன் முனிவனை வரவேற்றுப் பெருமைப்படுத்தினான். பிறகு புன்முறுவல் பூத்தபடி உமக்குப் பெயர் சூட்டும் விழாவை நடத்தச் சொன்னான். (2)

மெய்சிலிர்த்த கர்க்க முனிவன், ''நான் யது குலத்தின் குரு ஆவேன். இந்த விழாவை மிகவும் இரகசியமாகச் செய்ய வேண்டும்'' என்று கூறி உமக்கும் உமது அண்ணனுக்கும் பெயர் சூட்டும் விழாவை நடத்தினான். (3)

ஆண்டவரே! உமக்கு ஒன்றா? இரண்டா? ஓராயிரம் பெயர்கள் இருக்க வேண்டும். அப்படி இருக்க எந்தப் பெயரைச் சூட்டுவது என்று கர்க்க முனிவனுக்குத் திகைப்பாக இருந்திருக்க வேண்டும். எனவே உமக்கு இரகசியமாகப் பெயர் சூட்டியிருக்கவேண்டும். (4)

மங்கல எழுத்துக்களைக் கொண்டதும் ஆனந்தம் என்ற பொருளைத் தரக்கூடியதுமான மனதுக்கு ரம்யம் அளிக்கக்கூடியதும் பாவங்களைப் போக்கும் தன்மை உடையதும் ஆகிய கிருஷ்ணன் என்ற பெயரை உமக்குச் சூட்டினான். (5)

கர்க்க முனிவன் உமக்கு வேறு பல பெயர்களையும் உமது அண்ணனுக்கு இராமன் என்ற பெயரையும் சூட்டினான். அந்தப் பெயர்களின் பொருளை விளக்கமாக உமது தந்தையிடம் எடுத்துக் கூறினான். உம்மை இன்னார் என்று வெளிப்படையாகக் கூறாமல், மனிதர்களுக்கு இல்லாத பெருமைகள் அனைத்தும் பெற்றவர் என்று உம்மை அறிமுகப்படுத்தினான். (6)

உன் மகனிடத்தில் அன்பு கொண்டவன் அஞ்ஞானத்தால் ஏற்படும் துன்பங்களால் மயக்கம் அடைவதே இல்லை. உனக்கு வஞ்சனை செய்பவன் அழிந்து விடுவான் என்று உமது பெருமைகளைக் கூறினான். (7)

பின்னும், "இந்தக் குழந்தை அசுரர்களைக் கொல்லும்; வெற்றி கொள்ளும் உறவினர்களுக்குப் புனித இடத்தை அளிக்கும். மாசில்லாத புகழை மக்கள் அனைவரும் கேட்டு மகிழ்வர் என்று புகழ்ந்து உரைத்தான். (8)

உம்மைப் பற்றி நீர் தான் ஹரி என்று வெளிப்படையாகச் சொல்லவில்லை. இக்குழந்தையின் மூலம் துன்பங்கள் அனைத்தையும் கடந்து செல்வீர்கள் என்றும் கூறினான் (9)

குருவாயூர்க் கோமானே! இவ்வாறு பலபடப் பாராட்டிச் சென்றான் அந்த கர்க்க முனிவன். நந்த கோபனும் மற்றவர்களும் உம்மைச் சீராட்டிப் பாராட்டினர். அத்தகைய தெய்வமே, என்னுடைய பிணிகளிலிருந்து என்னைக் காப்பாற்றி அருள்புரிய வேண்டுகிறேன். (10)

# தசகம் - 45

## பிள்ளை விளையாட்டு

பலராமனோடு இருப்பவரே! முரனைக் கொன்றவரே! நந்தகோபன் இல்லத்தில் கைகால்களை ஊன்றித் தவழ்ந்து சென்றீர். தாமரை போன்ற திருவடிகளை அசைத்துச் சென்றபோது கால்களின் சலங்கை ஒலியைக் கேட்பதற்காக விரைந்து சென்றீர்கள் என்ன அழகான காட்சி! (1)

மெல்லச் சிரித்தபோது தெரிந்த பற்கள் உள்ளத்தைக் கொள்ளைக் கொண்டன. தோள்களிலும் கைகளிலும் அணிந்திருந்த வளையங்கள் அழுந்தி அவற்றின் அடையாளம் உடலில் காணப்பட்டது தலைமயிர் கலைந்து முன்னுச்சியில் வீழ்ந்த அழகே அழகு! தங்களைக் கண்டவர் கொண்ட மகிழ்ச்சிக்கு அளவு உண்டோ? (2)

வசுதேவனே! கண்கள் மகிழ்ச்சியால் ஆட உம்மைப் பின்தொடர்ந்தன. சிரிப்பின் ஒளிகேட்டு சிந்தை மயங்கியது தாமரை முகம் திருப்பிப் பார்த்தபோது தளிர் உடல் அசைவு தந்த ஆனந்தம் எத்தனை? எத்தனை? (3)

தட்டுத்தடுமாறி ஓடும்போது எத்தனை முறை கீழே விழுந்தீர்கள். மண்ணையும் சேற்றையும் உடலில் பூசிக் கொண்டீர்கள். வானத்தில் முனிவர் தங்களைக் கண்டு போற்றித் துதிபாடினர். தாய்மார்கள் ஓடிவந்து வாரி அணைத்துக் கொவ்வைக் கனிவாயில் முத்தம் இட்டனர். (4)

கள்ளத்தனமாக இடையர் வேடத்தில் வந்தவனே! உம்மைக் கண்டவுடனே உமது தாய் யசோதையின் கொங்கைகள் பூரித்துப் பால் நிரம்பியது. மடிமீது இருத்தி மார்போடணைத்துப் பால் ஊட்டியபோது, கனிவாயில் சுவைத்து அருந்தியபோது, என்ன ஆனந்தம் அவளுக்கு! உம்மைப் பெறுவதற்கு என்ன பேறு பெற்றாள். புன்

முறுவல் பூத்த முகத்தைக் கண்டு கண்டு சலிப்பில்லாத ஆனந்தம் அடைந்தாள். (5)

தளர் நடை பயின்று தட்டுத்தடுமாறி நடந்தபோது, ஆயர்குடியில் வாழும் சிறுவர்களைப் போல் எத்தனை குறும்பு விளையாட்டுக்களில் ஈடுபட்டீர்கள். வீடுகளில் வளர்த்த கிளிகளையும், பூனைகளையும் கன்றுகளையும் திறந்து விட்டு அவற்றின் பின்னே ஓடி மகிழ்ந்தீர்கள். உம்மைத் தொடர்ந்து தடுக்க முயற்சி செய்து தோல்வி கண்ட இடையர் பெற்ற ஆனந்தம் எத்தனையோ? (6)

முரன் என்ற அரக்கனை அழித்தவரே! பலராமனோடு நீர் எங்கு சென்றாலும் கோபியின் கண்கள் விட்டு விலகாமல் எப்போதும் உம்மையே சுற்றிச் சுழன்று வந்தன. அவர்கள் தங்கள் குழந்தைகளையும் அன்றாட வீட்டு வேலைகளையும் மறந்து விட்டு உன்னையே நினைத்து மனம் மயங்கினர். (7)

கோபியர் கொடுக்கும் புதுவெண்ணைக்காக இனிய குரலெடுத்துப் பாடினீர். சில நேரங்களில் அழகாகஆடினீர். அழகிய இளம் பெண்கள் கொண்டு வந்த நெய்யைப் பருகினீர். புத்தம் புதிதாக காய்ச்சியப் பாலைப் பருகி மகிழ்ந்தீர். (8)

கேட்டுப் பெறுவதற்கு மாறாக, தயிர், பால், வெண்ணைத் திருடி உண்ணத் தலைப்பட்டீர். ஒருமுறை மகாபலியிடம் பிச்சையெடுத்தபோது மீண்டும் அதற்குப் பின் அந்தத் தவறை மெல்லியலாரிடம் செய்ய மாட்டேன் என்று முடிவு செய்து அப்படித் திருடத் துவங்கினீரோ என்னவோ? (9)

குருவாயூர்க் கோமகனே! பால் வெண்ணை திருடினாலும் கோகுலத்துப் பெண்கள் உம்மிடம் கோபம் கொள்ளவில்லை வருத்தமும் ஏற்படவில்லை அவர்களுடைய உள்ளம் கவர்ந்து மகிழ்ச்சி வெள்ளத்தில் அழ வைத்தாய் அத்தகைய இறைவனே, என் நோய்களிலிருந்து என்னைக் காப்பாற்றி அருள் புரிய வேண்டுகிறேன். (10)

# தசகம் - 46

## விண்வெளிக் காட்சியளித்தல்

இறைவனே! யசோதையின் மார்பில் இன்னமுதம் உண்ட பின்னர், ஒருநாள் வாயைத் திறந்து கொட்டாவி விட்டீர். அப்போது உமது வாயில் உலகங்கள் அனைத்தையும் அவளுக்கு உமது திருவாயில் காட்டி வியப்பில் ஆழ்த்தினீர். (1)

அகில உலகங்களுக்கும் தலைவரே சிறுவர்களுடன் விளையாடிக் கொண்டிருக்கும்போது அவர்களிடமிருந்து கனிகளைப் பறித்துக் கொண்டீர். அதனால் கோபமுற்ற சிறார் பொய்யாகக் கதை புனைந்து, மண்ணை அள்ளித் தின்றதாகப் புகார் கொடுத்தனர். (2)

எங்கும் நிறைந்தவனே! யுகத்தின் முடிவில் மண்ணும் விண்ணும் நீர் ஆகிய அனைத்தையும் உண்ணத் தலைப்பட்டவர் அல்லவா நீர். அந்தோ! அதைப்பற்றி அறியாத உமது தாய் மண்ணை உண்ட வாயால் உமக்குத் தீங்கு நேரிடக்கூடும் என்று அஞ்சி, உம்மிடத்தில் கோபமுற்றாள். (3)

''குறும்புக்காரா! மண்ணையா தின்றனை என்று திரும்பத் திரும்பப் பலமுறை உமது தாய் அதட்டினாள். இல்லவே இல்லை என்று பலமுறை மறுத்துக் கூறியும், சிரித்துக் கூறியும் பயனில்லை. (4)

மற்ற சிறுவர்கள் உன் மீது சுமத்தும் குற்றத்திலிருந்து விடுபடவேண்டுமானால் உன் வாயைத் திறந்து காட்டு; பார்க்கலாம் என்று யசோதை கூறினாள். தாய் சொல் கேட்டு, தாமரை மலர் மொட்டவிழ்ந்து மலர் விரிப்பது போல உமது செம்பவள வாய் திறந்து காட்டினீர் (5)

உமது வாயில் ஒரு சிறு மண்ணாவது இருக்கிறதா என்று சோதித்துப் பார்க்க விரும்பிய உமது தாய்க்கு,

உமது வாயில் இந்தப் புவனம் மட்டுமல்ல, விண்வெளியில் காட்சி தரும் சகல உலகங்களையும் காட்டினீர். (6)

காடுகள்; பெருங்கடல்கள்; எல்லையற்ற விண்வெளிகள்; தளம் போன்ற உலகங்கள்; மனிதர்; பூதங்கள் மற்றும் தேவர்-அது மட்டுமின்றி உயிர் வாழும் ஜீவன்கள் அனைத்தையும் தங்களது திருவாயில் அவள் கண்டாள். (7)

அது மட்டுமோ? அங்கே உம்மையும் கண்டாள் எப்படி? பாற்கடலில் பள்ளிக்கொண்ட மாயவனாக; வைகுந்தத்தில் வாழும் மகாவிஷ்ணுவாக; தன் முன் நிற்கும் தன்னுடைய சிறு குழந்தையாக; ஆகா? எத்தனை எண்ணற்ற வடிவங்களில் அவள் உம்மைக் கண்டாள்? (8)

தங்கள் திருவாயில் உலகங்கள் அனைத்தும் காணப்பட்டன. அவற்றுக்குள் மற்றொரு வாயும் வேறு பல உலகங்களும் என அப்படி ஒன்றுக்குள் ஒன்றாக பல்வேறு வாய்களும் பல்வேறு உலகங்களும் தென்பட்டன. அளக்க முடியாதவன் நீ என்பதற்கும் எல்லையும் முடிவும் இல்லாதவன் நீ என்பதற்கும் எத்தகைய அத்தாட்சி! (9)

அந்த மயக்கத்தின் ஒளி, திடீரென பிரகாசிப்பதை யசோதை கண்டாள். ஆனால் அவளை மீண்டும் உலக வாழ்க்கைக்குக் கொண்டு வருவதற்காக, தமது பாசத்தால் குரலெடுத்து, தாயே எனக்குப் பாலூட்ட மாட்டாயா? என்று கேட்டீர். அத்தகைய அதிசயக் குழந்தையே! என்னைக் காப்பாற்றி அருள் புரிய வேண்டுகிறேன். (10)

# தசகம் - 47

## கல்லுரலில் கட்டி வைத்தல்

ஒருமுறை உனது தாயார் தயிர் கடைந்து கொண்டிருக்கும்போது, பால் குடிக்கும் ஆசையால் உந்தப்பட்டு, அவள் மடிமேலேறி அமர்ந்து மார்பில் வாய் வைத்துப் பால்

குடிப்பதன் மூலம் அவளுடைய வேலைக்குத் தடையாக இருந்தீர். (1)

மலர்மொக்கு போன்ற மார்பில், தாமரைவதனத்தின் மணிச்சிறுவாய் பதித்து சிறிது பால் உண்ட பின்னர், அடுப்பில் பொங்கியெழும் பாலை எடுப்பதற்காக உமது தாய் விரைந்து சென்றாள். (2)

அதனால் ஏற்பட்ட தடையால் கோபமுற்ற நீர், தயிர்ப்பானையை மத்தால் அடித்து உடைத்து விட்டீர்.(3)

பானை உடைப்பட்ட சத்தம் கேட்டு திரும்பி வந்த தாய், வீடெங்கும் தயிர் சிந்தி ஓடியதைக் கண்டாள். ஆகா! அது தூய்மையான உமது புகழ் உலகெங்கும் பரவுவதைப் போலக் காட்சி தந்தது. (4)

ஆனால் அங்கே இருந்து நீர் ஓடி விட்டீர். வேதங்களில் கூறப்பட்ட வழிகளில் சென்று உங்களை ஆன்றோர் அடைய விரும்புவர். அப்படியன்றி உங்களைத் தேடிக் கண்டறிய முடியாத யசோதைக்குக் கோபம் வந்தது. கடைசியில் உரலில்மேல் அமர்ந்தபடி பூனைக்குவெண்ணை ஊட்டிக்கொண்டிருந்த உம்மைக் கண்டாள். (5)

பற்றற்ற உம்மைப் பற்றிக் கொண்டாள். மருண்ட முகம் பார்ப்பதற்கு மனோகரமாக இருந்தது. கோபத்தால் துடிக்கும் உதடுகளுடன், கயிறெடுத்து மற்ற பெண்களை பார்த்திருக்க உம்மைக்கட்ட வந்தாள். என்னே மடமை! கட்டுக்களை அறுக்கப் பிறந்தவனைக் கட்டி வைக்க முயற்சி செய்வது? (6)

பல தாம்புக் கயிறுகளை ஒன்றாக இணைத்து முறுக்கி ஆன்றோர் பலரும் பக்திக் கயிற்றால் பிணிக்கின்ற உன்னைப் பிணித்து கட்டும்போது அந்தக் கயிறு குட்டையாக இருந்ததால் மீண்டும் அத்துடன் மற்றொரு கயிற்றை இணைத்து முடிபோட்டாள். (7)

வியப்புடன் உமது தாயின் தோழியர் அனைவரும் இக்காட்சியைப் பார்த்து இரசித்துக் கொண்டிருந்தனர். தாய் களைப்படைந்து மூச்சு வாங்கிக் கொண்டு வியர்வை பெருக்கெடுத்து ஓட நின்ற காட்சியைக்கண்ட நீர், கருணை கூர்ந்து, சுதந்திரமாக என்றும் இருக்க விரும்பினாலும் (பற்றற்று எப்போதும் இருக்க விரும்பினாலும்) கயிற்றால் உரலுடன் கட்டப்படுவதற்கு உடன்பட்டீர். (8)

''கள்வனே! கொஞ்ச நேரம் இந்த உரலிலேயே கட்டப்பட்டுக்கிட'' என்று கூறியவாறு உம் தாய் இல்லத்தில் புகுந்தாள். நீர் அங்கே ஏற்கனவே உரலில் ஒளித்து வைத்திருந்த வெண்ணெயைச் சிறிது சிறிதாக உண்ணத் தலைப்பட்டீர். (9)

எங்கும் நிறைந்தவரே! ஆசையெனும் பாசம் அற்றவர்களால்தான் உம்மை அடைய முடியும் எனும்போது யசோதையால் எப்படி உம்மைப் பாசக்கயிற்றால் பிணிக்க முடிந்தது? குருவாயூரப்பனே! விண்ணிலுள்ள தேவர்களால் பலவகையாலும் போற்றப்படும் தேவனே என்னைப் பீடித்துள்ள பிணிகளை நீக்கிக் காப்பாற்றி அருள் புரிய வேண்டுகிறேன். (10)

# தசகம் - 48

## குபேரனுடைய மக்கள் முக்தி அடைதல்

எல்லையற்ற மகிழ்ச்சியால் தேவர்கள் அனைவரும் உம்மைத் 'தாமோதரா' (இடுப்பைச் சுற்றிலும் கயிற்றால் கட்டப்பட்டவன்) என்று வாழ்த்துரைக்க, உமது மணி வயிறு உரலோடு கயிற்றால் பிணிக்கப்பட்ட நீர் அருகிலே ஓங்கி வளர்ந்த இரண்டு மரங்களைக் கண்டீர். (1)

குபேரனுக்கு இரண்டு மக்கள்; ஒருவன் பெயர் நளகுபேரன், மற்றவன் மணிகிரீவன், சிவனைத் தொழுது எல்லையில்லாத செல்வங்களைப் பெற்றவர்கள்; செல்வச் செருக்கால், உம்மை மறந்து புலனாசைகளில் ஈடுபட்டிருந்தனர். (2)

உம்மிடத்தில் அளவில்லாப் பக்திபூண்ட நாரத முனிவர், மதுவின் மயக்கத்தில் மங்கையர் சூழ்ந்திருக்க அவர்களைக் கண்டார். புனித கங்கையில் ஆடைகள் ஏதுமின்றி மது மயக்கத்தால் அந்த மங்கையருடன் புனல் விளையாட்டில் ஈடுபட்டிருப்பதைக் கண்டார். (3)

முனிவரைக் கண்டவுடன், அச்சத்தால் எழுந்த மரியாதையுடன் அந்த ஆரணங்குகள் அவசரம் அவசரமாகத் தங்கள் ஆடைகளை அணிந்து கொண்டனர். ஆனால் அவர்கள் செய்வதைப் பார்த்தும் அறிவு வராத அந்த ஆடவர் இருவரும் மதுவின் மயக்கத்தால் நன்மை தீமை அறியாமல் ஆடையின்றி நீந்தி விளையாடிக் கொண்டிருந்தனர். அவர்களுக்கு உம்மிடத்தில் மன அமைதியுற்றுப் பக்தியை உண்டாக்க வேண்டுமென்ற காரணத்தால், அவர்களுக்குச் சாபம் அளித்தார். மனதில் அமைதியின்றி மகிழ்ச்சி எவ்வாறு உண்டாக முடியும்? (4)

"நீங்கள் இருவரும் பன்னெடுங்காலம் மரா மரங்கள் ஆக பூமியில் இருக்க வேண்டும். ஹரி உலகில் அவதாரம் எடுத்த பின்னர், நீங்கள் மீண்டும் பழைய நிலையை அடைவீர்களாக" என்பதே அந்தச் சாபம். அதன்படி அவர்கள் இரண்டு மரா மரங்களாக விரஜத்தில் ஓங்கி வளர்ந்து தங்களுடைய வருகைக்காக ஆவலுடன் காத்துக் கொண்டிருந்தனர். (5)

உரலோடு இறுகப் பிணிக்கப்பட்டிருந்தும் தாங்கள் மெதுவாக அந்த மரங்களை நெருங்கினீர். அந்த உரலை

அந்தப் பழைய மரங்களின் நடுவே குறுக்காக இழுத்துக் கொண்டு சென்றதும், அந்த மரங்கள் பயங்கரமாக அசைந்து வேரற்றுக் கீழே விழுந்தன. (6)

கோவிந்தா! அந்த இரண்டு மரங்களையும் தாங்கள் வீழ்த்தியவுடன் அவற்றிலிருந்து மிகவும் ஒளிபடைத்த இரண்டு யட்சர்கள் தோன்றித் தங்களைத் துதி பாடினர். (7)

இவ்வுலகில், மற்ற கடவுளர்களைத் தொழுது பணி பவர்கள்கூட இறுதியிலே உம்மையே அடைகின்றனர். ருத்ரனின் பக்தர்களான அவர்கள், நாரத முனிவரால் நல்வழிப்படுத்தப்பட்டுத் தங்கள் திருவடிகளைச் சேர்ந் தனர் வரம் தர வேண்டும் என்று தங்களை வேண்டிக் கேட்டுக்கொண்டு அவர்கள் தமது இருப்பிடம் சேர்ந்தனர். (8)

மரங்கள் விழுந்த பெரிய ஒலியைக் கேட்டு, ஆயர்குடி மக்கள் அனைவரும் ஓடோடியும் அங்கே வந்தனர். வருத்த முற்ற உமது தாயின் முகத்தைப் பார்த்த நந்தகோபன், சம்சாரத் தளைகளிலிருந்து அனைவரையும் விடுவிக்கக் கூடிய உம்மை அந்த உரலோடு பிணைக்கப்பட்டிருந்த கயிற்றிலிருந்து விடுவித்தான். (9)

''மரங்களின் இடையே அகப்பட்டுக் கொண்ட குழந்தையை ஆண்டவனுடைய கருணைதான் காப்பாற்றி யிருக்க வேண்டும்'' என்று ஆயர்கள் அனைவரும் கூறினர். அத்தகைய சொற்களோடு இல்லத்திற்குள் எடுதது்ச் செல்லப்பட்ட குருவாயூரப்பா, என்னுடைய நோய் களிலிருந்து என்னைக் காப்பாற்றி அருள் புரிய வேண்டுகிறேன். (10)

# தசகம் - 49

## பிருந்தாவனம் செல்லல்

மரங்கள் கீழே விழுந்ததன் பெருமையை உணராத ஆயர்குடி மக்கள், அதனைத் தீய சகுனமாகக் கருதி, வேறு இடத்திற்கு குடியேற வேண்டும் என்று முடிவு செய்தனர். (1)

மெய்யாகவே உம்முடைய தூண்டுதலின் பேரில் உபநந்தன் என்பவன் மேற்குத் திசையில் பிருந்தாவனம் என்ற இடத்தைத் தமது கறவை கணங்களுடன் சென்று குடியேறுவதற்கு உகந்த இடமாகத் தேர்ந்தெடுத்தனர் (2)

பிருந்தாவனம் என்ற பழைய இடத்தைவிட்டு நீங்கி, நந்தகோபனும் மற்ற ஆயர்களும் நீரும் உமது தாயும் அலங்காரத் தேரில் முன்செல்ல, தமது வண்டிகளில் பின் தொடர்ந்தனர். (3)

கால்நடைகளின் ஓசையிலும், மகிழ்ச்சியூட்டும் சத்தத்திலும், உமது விளையாட்டுப் பேச்சுக்களிலும் ஈடுபட்டிருந்த ஆயர்குல மங்கையருக்கு அந்தத் தூரம் ஒரு பொருட்டாகவே தெரியவில்லை. (4)

பிரபுவே! மலர் நிறைந்த மரங்களும், பச்சைப்பசேலென்ற புல்வெளிகளும் நிரம்பப் பெற்ற பிருந்தாவனத்தைக் கண்டு தாங்கள் அளவற்ற ஆனந்தம் அடைந்தீர்கள் பச்சை மணிகள் பதித்த தோட்டம் போல் காட்சி அளித்தது. (5)

புது குடில்களைக் கட்டிக் கொண்டு ஆயர்கள் அங்குக் குடியேறியதும், ஆயச் சிறுவர்கள் புடைசூழ பிருந்தாவனத்தைச் சுற்றிச் சுற்றி வந்து அதன் அழகில் ஆனந்தமுற்றீர். (6)

காளிந்தி நதி (யமுனை) யின் கரை புரண்டு ஓடும் வெள்ள நீர் பெருக்கில், கிளை பிரிந்து கால்வாய்களில் அந்த மகளின் சுருண்ட கூந்தலில் அவளைச் சுற்றி குலாவும் அன்னங்களில் அவளுடைய முகத்தாமரை ஈடு செய்ய முயன்ற வண்ணத் தாமரைகளில் மனம் லயித்து மகிழ்ந்திருந்தீர். (7)

சல்லாப மயில்கள் ஆகவும் கோவர்த்தன கிரியைக் கண்டீர். தன்னிடத்தில் உள்ள பல்வேறு நிறமான மாணிக்கக் கற்கள் ஒளி வீசக் காட்சி தந்த மலை, விண்ணை முட்டி - ஏன் சந்திரலோகத்தையே எட்டும் அளவுக்கு—அதன் உச்சிகள் உயர்ந்திருந்தன. (8)

ஆயர் சிறுவர்களுடன் பிருந்தாவனத்தில் நீர் எங்கெங்கு சென்றாலும் வளைந்து வளைந்து வரும் காளிந்தி நதியின் நீர்பெருக்கைக் கண்டீர். காதல் தாபத் தால் தங்களைத் தனிமையில் சந்திப்பதற்கு எங்கும் அழகு மங்கையைப் போல் அவள் காட்சி தந்தாள். (9)

குருவாயூரில் கோவில் கொண்ட இறைவனே! ஆநிரைகள் மேய்த்தவண்ணம் பலராமனும் ஆயர் சிறுவர் களும் பின் தொடர அந்தப் பிருந்தாவனத்தின் பசுமைப் புல்வெளியில் மகிழ்ச்சியோடு அலைந்து திரிந்தீர் என்னை யும் என்னுடைய கொடிய பிணியிலிருந்து காப்பாற்றி அருள் புரிய வேண்டுகிறேன். (10)

## தசகம் - 50

## கன்றாகவும் நாரையாகவும் வந்த பூதங்கள்

மகாலட்சுமி குடியிருக்கும் இறைவனே! ஆநிரைகளை மேய்க்கும் பணியில் பலராமனுடனும் மற்ற ஆயர் சிறுவர் களுடனும் சேர்ந்து பிருந்தவனத்தின் பல்வேறு பகுதி

களிலும் அழகிய காடுகளிலும் வண்டினம் ரீங்கா
இட்டு மொய்க்கும் மலர்க் காடுகளிலும், குழல் ஒலித்
புல்லாங்குழல் ஊதியும் உமது அழகிய உருவத்த
மகிழ்வூட்டியும் அலைந்து திரிந்தீர்கள்.

தமது பாதம் பட்டுப் பவித்திரம் அடைந்த பிருந்
வனத்தின் செல்வத்திற்கும் செழிப்புக்கும் அதிதேவ
யான மகாலட்சுமி அன்றாடம் அன்போடு வரு
பாதங்கள் அவை — மரங்களும் செடிகொடிகளும்,
நிலைகளும் வயல்களும் குன்றுகளும் இதுவரை காண
மேன்மையை அடைந்து செழித்து விளங்கின.

குழலூதியவண்ணம் மாடு கன்றுகளை மேய்க்
பணியில் ஈடுபட்டிருந்தபோது, யமுனையின் குளிர்
நீர்க்கரையிலும் பசும்புல்வெளியிலும் கோவர்த்
கிரியின் மலைச் சரிவுகளிலும் அலைந்து திரிந்து கொ
டிருந்தபோது உமது மாடுகளின் கூட்டத்தில் கன்
வடிவில் இருந்த ஒரு அசுரனைக் கண்டீர்.

கன்றின் உருவத்தில் இருந்த அசுரன், தன் வா
ஆட்டிக் கொண்டும், தல்லையை அங்கும் இங்கும் திருப்
பார்த்த வண்ணம் அடாத செயல் புரிவதற்கே
நோக்கத்திற்காகக் காத்துக் கொண்டும் இருந்தான்.
அவனைப் பின்னங்கால்களைப் பற்றித் தூக்கி அரு
இருந்த ஒரு மரத்தின் உச்சியின்மீது ஓங்கி அடி
மரணமுறச் செய்தீர்.

ஹரியே! உங்கள் தலைமீது வானத்திலிரு
தேவர்கள் பூமாரி பொழிந்தனர். உயரத்திலிருந்து கீ
விழுந்த அசுரன் உடலால், பல மரங்கள் சாய்
விழுந்தன. அந்த வேகத்தைத் தாங்காமல் வேரோ
கீழே விழுந்தன.

ஆயர்குலச் சிறுவர்கள், வானத்தில் இருந்து உமது தலையில் விழுந்த மலர்க் கூட்டத்தைப் பார்த்துத் திகைத்தனர். அவர்களிடம் பூமியிலிருந்து காற்றில் பறந்து உயரே சென்று பூமலர்கள்தான் அப்படி விழுகின்றன என்று கூறினீர். அசுரனுடைய உடல் எறியப்பட்டதால் அப்படி மரங்களில் இருந்த பூக்கள் உயரத் தூக்கி எறியப்பட்டு மீண்டும் அப்படிக் கீழே விழுந்துள்ளன என்று விளக்கம் கூறினீர். (6)

மற்றொரு நாள், கதிரவன், வெப்பத்தால் நாவரட்சி அடைய, யமுனா நதிக்குச் சென்று தாகம் தணிக்க விரும்புனீர். அங்கே சிறகடித்துக் கொண்டு ஒரு பெரிய நாரை நிற்பதைக் கண்டீர். அது கைலாச மலையைப் போல, இந்திரன் சிறகுகளை வெட்டும்போது மறந்துபோய் விட்டுவிட்ட அத்தகைய மலையைப் போலக் காட்சி தந்தது. (7)

ஆயர் சிறுவர்கள் அனைவரும் தண்ணீர் குடித்துக் கொண்டிருக்கும்போது, நாரையாக இருந்த பூதம் உம்மை விழுங்கியது. உடனே நெருப்பை உண்டு விட்டதுபோல் உணர்ந்து உம்மை வெளியே உமிழ்ந்து விட்டது. பின் தனது அலகால் உம்மை கிழிக்க நினைத்தது. ஆனால் தீயவர்களைக் கிழித்தெறிவதில் ஆர்வம் படைத்தவரான நீர், அந்த நாரையின் அலகைப் பற்றி இரு கூறாகக் கிழித்து அந்தப் பூதத்தை அழித்து விட்டீர். (8)

பகன் என்ற அந்த நாரையாக வந்த பூதம், எமனுலகம் சென்றடைந்தது. ஒருவேளை அங்குள்ள பூதனை என்னும் தனது சகோதரியைக் காணச் சென்றதோ என்னவோ? அல்லது தன்னை பின்தொடர இருக்கும் தன் தம்பி ஆகனை வரவேற்பதற்காகச் சென்று விட்டதோ? பிருந்தாவனத்திலிருந்து பிறகு இல்லம் திரும்பினீர். (9)

குருவாயூர்க் கண்ணா! குருவாயூரின் புகழ்பெற் கோவிலில் குடி இருப்பவனே! தங்கள் குழலோசையா‍ தமது வருகையை அறிந்த ஆயர்குல மகளிர் உம்மை பார்ப்பதற்காக ஆவலுடன் ஓடி வந்தனர். தந்தை நந் கோபனுக்கும் தாய் யசோதைக்கும் அளவில்லா மகிழ்ச் ஊட்டியவனே! என்னுடைய பிணிகளை நீக்கி என்னை காப்பாற்றி அருள் புரிய வேண்டுகிறேன். (10

## தசகம் - 51

## ஆகாசூரன் வதம்

விரஜகுலச் சிறுவர்களுடன் ஆநிரைகள் புடை சூழ ஒருமுறை வீட்டிலிருந்து புறப்பட்டு காடுகளில் விருந்துண் பதற்காக அதிகாலையில் வந்தீர். சோறு, தின்பண்டங்கள் தயிர், வெண்ணை, பால், மற்றும் வேறு பல பண்டங்கள் உம்மோடு கொண்டு வரப்பட்டிருந்தன. (1)

கானகத்தை நோக்கிச் சென்றபோது, உமது காலடிப் பட்டுக் கிளம்பிய தூசியில் திளைத்து ஆன்றோர்களாக முனிவர்கள் உம்மைத் தரிசித்து ஆனந்தம் அடைத்தனர். (2)

யாவுமாகி நின்றவனே! காட்டின் புல்வெளியில் மாடு களை மேய்த்தவண்ணம் சிறுவர்களுடன் சென்று கொண்டி ருந்தபோது ஆகாசூரன் என்ற பெரிய அரக்கன் தீய எண்ணத்துடன் பெரிய மலைப்பாம்பின் உருவெடுத்து வழிமறித்தான். (3)

நீங்கள் முன்னேறிச் சென்று விட்டீர்கள். ஆனால் உடன் வந்த சிறுவர்கள் அந்தப்பாம்பை குன்றாகவும் அதன் திறந்த வாயைக் குகையாகவும் நினைத்து அதற்குள் புகுந்து மறைந்து விட்டார்கள். (4)

தவறுதலாக மாடு கன்றுகளுடன் உட்புகுந்த சிறுவர்கள் வயிற்றுக்குள் சென்றவுடன் துன்பப்பட்டனர் நிலைமையை உள்ளபடி உணர்ந்த நீர், ஆதரவற்ற உமது நண்பர்களைக் காப்பதற்காக நீரும் அந்த வழியே உள்ளே நுழைந்தீர். (5)

பாம்பின் தொண்டைக்குள் நின்றபடி உமது உருவத்தைப் பெரிதாக்கிக் கொள்ள, அந்தப் பெரிய மலைப் பாம்பு மூச்சு விடமுடியாமல் திணறித் துன்பத்தால் துடிக்க ஆரம்பித்தது. உடனே அதனுடைய பிரம்மாண்டமான கழுத்தைப்பற்றிக் கிழித்துக் கொண்டு, ஆயச் சிறுவர்களையும் மாடுகன்றுகளையும் விடுவித்து வெளியே வந்தீர். (6)

ஈதென்ன அதிசயம்! அந்த அசுரனுடைய உடலிலிருந்து வெளியே புறப்பட்ட பேரொளி தாங்கள் வெளிவரும் வரையில் காத்திருந்து பிறகு உமது உடலோடு ஒன்று பட்டு இணைந்தது! வானில் உள்ள தேவர்கள் ஆனந்தக் கூத்தாடிப்பாடினர். (7)

உச்சிப்பொழுதை சூரியன் தொட்டபோது; மற்ற ஆயர் சிறுவர்களை நீர் அடைந்து அவர்களுடன் கூட்டமாக அமர்ந்து உணவுண்ணும் காட்சியைக் கண்டு பிரமனும் மற்ற தேவர்களும் அதிசயித்தனர். (8)

குழலும் ஊதுகுழலும் உமது இடையை அலங்கரிக்க, கையில் அன்னத்துடன், வேடிக்கை மொழி பலபேசி சிறுவர்களைசிரிப்பில் ஆழ்த்தினீர். வானிலுள்ள தேவர்கள் நின் புகழ் பாடி ஆட உணவுண்டு முடித்தீர். (9)

குருவாயூரில் கோவில் கொண்டு உள்ள பூமிநாதா? வானவர்களுடன் அமர்ந்து ஒரு வேள்வியின் அவிர்ப் பாகத்தை உண்பதைவிட அதிகமான ஆனந்தம் இந்த ஆயர்பாடிச் சிறுவர்களுடன் சேர்ந்து உண்பதில் உமக்கு ஏற்படுகிறது என்று வானவர் உம்மைப் பற்றிக் கூறுகின்றனர். என்னைப் பீடித்துள்ள பிணிகளிலிருந்து காப்பாற்றி அருள் புரிய வேண்டுகிறேன். (10

# தசகம் - 52

## கன்றுகளை கடத்திச் செல்லல்

தங்கள் முந்தைய அவதாரங்களில் காணாத பெருமை யும் சிறப்பும், ஆகாசூரனின் வதத்தில் காணப்பட்டது; தங்களது சக்தியைப் பரிசோதனை செய்ய விரும்பிய படைப்புக் கடவுளான பிரமா தமது மந்திர சக்தியால் மந்தையில் உள்ள கன்றுகளை எல்லாம் மறைத்து வைத்து விட்டார். (1)

கன்றுகள் காணாமல் போனதால் இடையர்கள் கொண்ட துயரத்தைக்கண்ட நீர், பிரமனுடைய செயல் முற்றுப் பெற வேண்டும் என்ற நோக்கத்துடன், பாதி உண்ட சோற்றுக்கவளம் ஏந்திய கையுடன் கன்றுகளைத் தேடுவதற்காகப் போக்குக் காட்டி சென்றுவிட்டீர். இந்த சந்தர்ப்பத்தைப் பயன்படுத்திய பிரமா இடைச் சிறுவர் களையும் அவர்கள் உணவு உண்ட பின்னர் மறைத்து வைத்து விட்டார். (2)

தங்களது மாயையால் தாங்களே காணாமல் போன கன்றுகளைப் போலவும் இடைச் சிறுவர்களைப் போலவும் உருவெடுத்து அவர்களுடைய கவண்கயிறு, ஊதுகுழல் புல்லாங்குழல் ஆகியவற்றுடன் நாள் முழுவதும் காட்டில் பொழுதைப் போக்கி விட்டு வழக்கம் போல மாலையில் ஆடிப்பாடி வந்து சேர்ந்தீர். (3)

கன்றுகளாகவும், கவணும், குழலும், புல்லாங்குழலும் தரித்த இடைச் சிறுவர்களாகவும், உருமாறி வந்த உம்மை அவர்களுடைய தாயார்களால் வழக்கத்தைவிட அதிக மான மகிழ்ச்சியுடனும் ஆரவாரத்துடனும் வரவேற்கப் பட்டீர். (4)

கோப மங்கையரும் பசுக்களும் தமக்கே உரித்தான அடையாளம் கண்டு கொள்ளும் மற்றும் உரிமை கொண் டாடும் முறைகளின்படி கண்டு கொண்டு ஆனந்தம் அடை

யும் சக்தி அறிவற்ற அந்த ஜீவன்களுக்கே இருக்கிறதென்றால், அவர்களுக்கு உண்டாகும் ஆனந்தத்திற்கு அளவு உண்டோ? (5)

ஒரு ஆண்டுக்குப் பிறகே உன் சகோதரன் பலராமனுக்குக் கூட இத்தனை வடிவங்களில் உம்மைத்தான் கோகுலம் முழுவதும் மகிழ்ச்சியோடு கொண்டாடி வருகிறது என்பது புலனாகியது. தாங்களும் தங்கள் சகோதரர் பலராமனும் பிரமத்தின் வடிவமாக இந்தாலும், உங்களிருவருக்கும் இடையில் நிறைய வேறுபாடுகள் உள்ளன. (6)

ஆண்டின் முடிவில், பழைய இடையர்களையும் கன்றுகளையும் புதிய இடையர்களையும் ஒன்றாகக் கண்ட பிரமனுக்குத் திகைப்பு ஏற்பட்டது. எவை புதியன எவை பழையன என்று பிரித்தறிய முடியாமல் போனது. அதன் பின்னர் உம்மால் உருவாக்கப்பட்ட புதியவற்றை நெற்றிச் சுட்டி, தோள் ஆபரணங்கள், நான்கு கரங்கள், நீர்மேகத்தின் நீலவண்ணம் போன்றவற்றால் தனியாகப் பிரித்து அடையாளம் காட்டினீர். (7)

தாமரையில் தோன்றிய பிரமன் ஒவ்வொன்றையும் நீராகவே கண்டு, ஒவ்வொன்றும் அழகிய வடிவமும் அரைக்கண் மூடிய நிலையும் மகாலட்சுமியுடன் ஆதி சேஷன் மேல் பள்ளி கொண்டிருக்கும் நிலையில், சனகர் முதலிய முனிவர்கள் துதிக்கும் நிலையில் கண்டு அளப்பரிய மகிழ்ச்சி கொண்டான் (8)

நாராயணனின் எண்ணிக்கையற்ற வடிவங்களைக் கண்டார். ஒவ்வொரு நாராயணனிடத்திலும் தன்னைப் போல ஒரு பிரமனைப் பார்த்து படைப்புக் கடவுளான பிரமன், மனங்குழம்பித் தவித்தான். தங்களது அதிசக்தி வாய்ந்த மாயையால் ஆக்கிரமிக்கப்பட்டு தன்னையே அவனால் சரியாக அடையாளம் கண்டுகொள்ள முடியவில்லை. அந்த நேரத்தில் கையில் பாதி தின்ற சோற்றுக் கவளத்துடன் நிற்கும் சிறுவனாக ஒரு புறத்தில் காட்சி தந்தீர். (9)

தனது செருக்கு அடைக்கப்பட்டு, படைப்புக் கடவுளான பிரமன் தங்களது காலடிகளில் நெடுஞ்சாண் கிடையாக விழுந்து வணங்கினான். மீண்டும் மீண்டும் அப்படி வணங்கினான். தன்னிடம் சேர்வதற்கு முன்னர் தங்கள் புகழைப்பாடிப்பரவினான். யாவுமாகிநிற்கின்ற தெய்வமே திருவாயூரில் குடிகொண்டு இருப்பவனே உற்சாகத்துடன் மற்ற சிறுவர்களுடன் வீடு திரும்பினீர். என்னுடைய நோய்களிலிருந்து என்னைக் காப்பாற்றி அருள் புரிய வேண்டுகிறேன். (10)

## தசகம் - 53

### தேனுகாசுர வதம்

குழந்தைப் பருவம் கடந்து பிள்ளைப் பருவத்தைக் கண்ணன் அடைந்தான். கன்றுகளை கவனிக்கும் பணியைக் கைவிட்டு, பெரிய பசு மாடுகளை பேணிக் காக்கும் பணி ஒப்படைக்கப்பட்டது. (1)

பெரிய பசுக்களைக் காக்கும் பணி, நீர் பின்னர் எதிர்காலத்தில் செய்ய வேண்டிய வேலைகளுக்கு ஒரு முன்னோடியாக அமைந்தது. உலகத்தைக் காக்கும் பணியில் ஈடுபட வேண்டிய நீர் முதலில் கோ எனப்படும் பசுக்களை காக்கும் பணியில் ஈடுபட்டீர். (2)

ஒருமுறை பலராமனுடன் உல்லாசமாகக் கானகத்தில் செல்லும்போது, சுற்றிலும் தென்பட்ட அழகிய காட்சியில் ஈடுபட்டு மகிழ்ந்தீர். உமது நண்பர் ஸ்ரீதாமாவின் யோசனைப்படி, உற்சாகமான மனநிலையில் தேனுகாசுரன் வாழ்ந்து வந்த காட்டுப் பகுதிக்குள் சென்றீர். (3)

தங்களுடைய வேண்டுகோளின்படி, அங்கே உயர்ந்து வளர்ந்திருந்த பனைமரங்களைத் தம் வலுவான கரங்களால் பிடித்து அசைத்து, அவற்றினின்றும் பழுத்த பனம்

பழங்கள் உதிரும்படி பலராமன் செய்தார். அப்பொழுது அங்கே கழுதை வடிவில் இருந்த தேனுகன் என்ற அசுரன் பழங்கள் விழும் சத்தத்தால் எழுப்பப்பட்டான். அவன் உங்களுக்கு ஒரு பொருட்டல்ல. (4)

பலராமனால் அந்த அசுரன் கொல்லப்படும்படி செய்தீர். பசுக்களைக் காப்பது உமது கடமையாதலால், பசுவின் பெயரை வடமொழியில் கொண்டிருந்ததால் தேனுகனைக் கொல்லுவது சரியலல என்று நினைத்தீரோ? (5)

அந்த அசுரனின் ஆட்கள் ஓநாய்களின் வடிவத்தில் உங்களைத்தாக்க வந்தனர் அவர்களை நாவல் பழங்களைப் போல மரங்களுடன் சேர்த்து அழுத்தி நீங்களும் பலராமனும் நசுக்கி அழித்து விட்டீர்கள். (6)

ஓநாய்கள் வடிவத்தில் வந்த அரக்கனை அழிக்கும் பணியில் ஈடுபட்டிருந்தபோது, வருணன் தன்னுடைய வேதப்பெயரான ஜம்புகா என்பதை மறைத்து விட்டதால், அழிவிலிருந்து தப்பி விட்டான். (7)

தங்களது அவதாரத்திற்கு உரிய பலன் கிடைக்க ஆரம்பித்து விட்டது என்று தேவர் புகழ் மாரி சூட்டினர். பழம் கிடைத்துள்ளது என்று சிரித்தவாறு கூறி மற்ற சிறுவர்களுடன் கூடி உதிர்ந்த பழங்களை உண்ணத் தலைப்பட்டீர். (8)

வயிறு நிரம்ப நீங்களும் மற்ற சிறுவர்களும் பழுத்த இனிமையான கனிகளை உண்டு பசியாறினீர்கள். அவற்றைத் தூக்கிக் கொண்டு வெற்றி நடைபோட்டு வீடு திரும்பினீர்கள். (9)

தேனுகாசுரன் வதம் செய்யப்பட்டது கூறி வாழ்க என்று முழக்கமிட்டு அந்த பழத்தோப்பில் கூடியவர்கள் அந்தப் பழங்களை ருசித்து உண்டனர். குருவாயூரப்பனே! நன்றிப் பெருக்கால் உணர்ச்சியோடு வாழ்த்திக் கூறத் தலைப்பட்டீரே என்னுடையபிணிகளில் இருந்து என்னைக் காப்பாற்றி அருள் புரிய வேண்டுகிறேன். (10)

# தசகம் - 54

## காளியன் கொடுமை

முன்னொரு காலத்தில், சௌபரி என்ற முனிவர் உமது சேவையிலே ஈடுபட்டுப் பன்னிரண்டு ஆண்டுகள் காளிந்தி நதியில் மூழ்கி இருந்து கடுமையான நோன்புகள் நோற்றார். அதனால் அந்த நீரில் நீந்தி விளையாடிய மீன்களோடு மிகவும் நெருங்கிய நட்புப் பூண்டுவிட்டார். மீன்களைத் தின்று ஜீவிக்கும் தங்கள் வாகனமாகிய கருடனைத் தம் முன்னர் ஒரு நாள் கண்டார். (1)

ஆற்றிலிருந்து மீன்களைப் பசியோடு சாப்பிட்டுக் கொண்டிருந்த தங்கள் கருடனைப் பார்த்த அவரது உள்ளத்தில் வேதனை ஏற்பட, அங்கே உள்ள உயிர் வாழ் இனங்களை உண்டால் அதனுடைய உயிருக்கே ஆபத்து ஏற்படும் என்று கருடனைச் சபித்து விட்டார். (2)

அப்பொழுது தன்னுடைய விஷத்தின் சக்தியைப் பற்றி மிகவும் பெருமைப்பட்டுக் கொண்டு இருந்த காரியன் என்ற பாம்பு, நாகங்களின் பகைவனான கருடனுக்குச் சேரவேண்டிய பலிகளைத் தான் எடுத்துக் கொண்டான். அதனால் கோபம் அடைந்த கருடன் காளியனைத் தனது சிறகுகளால் தாக்கினான். காளியன், காளிந்தி நதியில் தஞ்சம் புகுந்தான். முனிவரது சாபத்தால் அந்த இடத்திற்கு கருடனால் வரமுடியாது அல்லவா? (3)

சூரிய குமாரியான காளிந்தி நதியில் அந்த நாகம் தஞ்சம் புகுந்ததால், அதன் கரைகளில் இருந்த மரங்கள் யாவும் காய்ந்து சருகாகின. அதன்மேல் பறந்து சென்ற பறவை இனங்கள் மாண்டு விழுந்தன அந்த நாகத்தின் மூச்சு மிகவும் கடுமையானதாக இருந்தது. (4)

ஒருநாள், பலராமனின்றித் தனியாகக் கால்நடைகளுடன் யமுனை நதிக்கரையிலுள்ள காடுகளுக்குச் சென்

றிருந்தீர்கள். கோடையின் வெப்பத்தால் நாவரண்டு போன இடையர்களும் பசுக்களும் தாகம் தணிய ஆற்றின் நச்சு கலந்த நீரைக் குடித்தனர். (5)

அழியாப்பரம் பொருளே! உயிரற்றுக் கீழே வீழ்ந்த அவர்களைக் கண்டவுடன் இரக்கம் மிக அவர்களைத் தொட்டு உமது புனிதப் பார்வையாலேயே உயிர் பிழைக்க வைக்கும் அமிர்தத்தை ஊட்டி அவர்களை உயிர் பிழைக்க செய்தீர். (6)

உயிர் பிழைத்த இடையர்கள், தங்கள் நாடி நரம்பு ஒவ்வொன்றும் எல்லையில்லா ஆனந்தம் துள்ளி விளையாட உங்களைத் தழுவிக் கொண்டனர். அத்தகைய அதிசய மான ஆனந்தத்திற்கு காரணமானவர் நீர் என்பதை அவர்கள் உணர்ந்திருந்தனர். ஏனெனில் உமது சக்திகளைப் பற்றி அவர்கள் பலமுறை நேரில் கண்டறிந்துள்ளனர். (7)

உயிர் பிழைத்தெழுந்த பசுக்களும், தம்முன்னர் உம்மைக் கண்டவுடன், பாசத்துடன் உம்மைச் சுற்றி வளைத்துக் கொண்டு மெதுவாகக் குரல் எழுப்பின (8)

''எங்கள் மயிர்க்கால்கள் சிலிர்த்து எழுந்து நிற்கின் றன. உள்ளத்திற்குள்ளே அளவிட முடியாத ஆனந்தத்தை அனுபவித்துக் கொண்ருக்கிறோம். அந்த நஞ்சின் விளைவு எத்தகைய அதிசயிக்கத்தக்கதாக உள்ளது முகுந்தா!'' என்று இடையர்கள் புகழ்ந்து பாடினர். (9)

குருவாயூரில் குடியிருக்கும் கோமகனே! உமது கடைக் கண் பார்வையாலேயே பொங்கியெழும் கருணை வெள் ளத்தைக் காட்டுகின்ற கருணாநிதியே! மரணமடைந்த உமது அடியவர்களைக் கூட மீண்டும் உயிர்த்து எழச் செய்திருக்கிறீர். என்னுடைய பிணிகளிலிருந்து என்னை விடுவித்துக் காப்பாற்றி அருள் புரிய வேண்டுகிறேன். (10)

# தசகம் - 55

## காளிய நர்த்தனம்

இறைவனே! அந்தக் கொடிய நாகத்தின் கட்டுப்பாடற்ற ஆதிக்கத்திலிருந்து அந்த நதியை விடுவிக்க முடிவு செய்து, ஆற்றின் கரையில் தனது இலை தழைகள் எல்லாம் கருகிக் காய்ந்த நிலையில் இருந்த கடம்ப மரத்தில் ஏறினீர். (1)

மென்மையான பூவிதழ்கள் போன்ற பாதங்களால், அந்தக் காய்ந்துபோன மரத்தின்மேல் ஏறிய பின்னர், நீர் அலைகள் பொங்கி வரும் ஆற்றின் அடியாழத்திற்குள் செல்லுமாறு உயரத்தில் இருந்து குதித்தீர். (2)

உலகத்தின் சுமையையே தாங்குகிற உமது உடல் அந்த ஆற்றுக்குள் பாய்ந்தவுடன் ஆற்றில் பெருக்கெடுத்த வெள்ளம் பலத்த ஓசையுடன் பொங்கி எழுந்து கரை புரண்டு நூற்றுக்கணக்கான அடி உயரத்தில் பெருகி ஓடியது. (3)

உமது தாக்குதலால் உயரக் கிளம்பிய அலைகளின் ஓசை, காளியனைப் பயங்கரக் கோபத்துடன் உம்மை தாக்குவதற்காக வெளிக் கிளம்பி வரச் செய்தது. (4)

கரும்பு மலை போலக் காளியன் கண்ணுக்குத் தோன்றினான் அவனது பல தலைகளும் அம்மலையின் உச்சிகளைப் போல் நிமிர்ந்து நின்றன. அவற்றில் இருந்து கொடிய நஞ்சு பெருக்கெடுத்து ஓடியது. தீப்பொறிகள் தெறித்து வெளிவரத் தலைப்பட்டன. (5)

ஐயோ! அந்தக் கொடிய நாகம், நெருப்புப் பொறிகளையும் கடுமையான ஆலகால விஷத்தையும் அள்ளி வீசிக் கொண்டு, தன் பலமெல்லாம் சேர்த்து உம்மைத் தாக்கியது. ஆனால் உமக்கு ஒன்றும் நேரவில்லை.

உயிரோடு இருப்பதைக் கண்டவுடன் உம்மைச் சுற்றிலும் வளைத்துத் தன் உடலால் இறுகப் பிணித்தது. உமது அங்கமும் அதன் அசைவும் வெளியே தெரியாதபடி செய்தது. (6)

நீங்கள் கண்ணுக்குத் தெரியாமல் மறைவதைக் கண்ட ஆயர்களும் பசுக்களும் அருந்துயர் அடைந்தன பல தீய சகுனங்களைக் கண்ட ஆயர்கள் யமுனை நதிக்கரையில் ஒன்று திரண்டனர். (7)

பிரபுவே! தங்களுடைய சங்கடமான நிலையைக் கண்டு துயரில் மூழ்கி, பயனற்ற தங்கள் ஆவிகளைக்கூடத் துறக்கச் சித்தமாக இருந்தபோது, நாகத்தின் பிடியிலிருந்து விடுவித்துக் கொண்டு சிரித்த முகத்துடன் ஆற்றில் இருந்து வெளிப்பட்டீர். (8)

பிறகு, அந்த நாகத்தின் தலைகளின் மேல் ஏறி நின்று கொண்டு நடனமாடத் தலைபட்டீர். நாகத்தின் தலையில் காணப்பட்ட ரத்தினங்களுக்கு இணையாகத் தங்கள் பாதங்கள் பிரகாசத்துடன் நடம்புரிய, இனிய சத்தங்களுடன் தங்கள் கால்களில் சலங்கைகள் கொஞ்சி விளையாட, கால்களில் தாளத்திற்கு ஏற்றபடி கரங்களை விரித்து வீசி நர்த்தனம் ஆடினீர். (9)

அப்படி நாட்டியம் ஆடுவதைப் பார்க்கும் பேறுபெற்ற ஆயர்கள் ஆனந்தம் அடைந்தனர். முனிபுங்கவர்கள் தோத்திரம் பாடினர். வானவர் பூமாரி பொழிந்தனர். குருவாயூரப்பா! காளியனின் கொட்டத்தை அடக்கியது போல, என் நோய்க் கொடுமையிலிருந்து என்னைக் காப்பாற்றி அருள் புரிய வேண்டுகிறேன். (10)

# தசகம் - 56

## காளியனிடம் கருணை காட்டல்

காதுகளில் குண்டலங்கள் பளீரென்று ஒளி வீசி ஆட, நீண்ட நேரம் காளியனின் தலை மீது நர்த்தனம் ஆடினீர். வித்தியதரப் பெண்கள் இசை பாடினர். வானவர் மேளம் கொட்டி மகிழ்ந்தனர். (1)

ஹரியே! உம்மைத் தாங்க முடியாமல் தொய்ந்து சாய்ந்ததும் மற்றொரு தலைக்குத் தாவினீர். தமது தாமரைப் பாதங்களால், அதன் ஒவ்வொரு தலையாக நசுக்கிச் சாய்த்தீர். கைகளைக் கொட்டியபடி தாள லயத்துடன் எத்தகைய நாட்டியம் ஆடினீர். (2)

தலைகள் வலுவிழந்து சாய்ந்தன, உடலில் பெருக்கெடுத்த உதிரம் யமுனை நதியைச் சிவப்பாக்கியது. நாகங்களின் தலைவன் தன் நிலைகுலைந்து சோர்ந்து தடுமாறியது. அப்போது மாதவா! அந்த நாகத்தின் மனைவியரும் தங்கள் தாள் பணிந்து வீழ்ந்தனர். (3)

இறைவர்க்கிறைவனே; அந்த நாகத்தின் மனைவியர், தங்களது பெருமைகளை முன்னரே அறிந்திருந்ததால், தங்களை தமது உள்ளங்களில் இருத்தி, முனிவர்களாலும் தபவல்லமை பெற்றவர்களாலும் செய்ய முடியாத தோத்திரங்கள் பாடி உணர்ச்சியோடும் உற்சாகத்துடனும் உம்மைத் தொழுது வழிபட்டனர். (4)

அவரது மனைவியர் காட்டிய பக்திப் பெருக்கைக் கண்டு அந்த நாகத்தை அழிக்காது கருணை கொண்டு உயிர் பிழைக்க விட்டீர். அதுவும் தங்கள் பாதத்தில் சரண் அடைந்தது. (5)

அதனைக் கடலின் மையத்தில் உள்ள ரமணக எனும் தீவுக்குச் சென்று குடியேறும்படி ஆணையிட்டீர். நாகங்களின் பகைவனான கருடன் அங்கே வந்து தாக்காது என்று உறுதி அளித்தீர். தங்கள் சொல்லுக்குட்பட்டு தன் நாக இனங்களுடன் யமுனை நதியில் இருந்து அந்தத் தீவுக்குப் புறப்பட்டுச் சென்றது. (6)

நாகத்தின் மனைவியர் அளித்த ஒளிபொருந்திய நவமணி மாலைகளையும் பட்டுப் பீதாம்பரங்களையும் அணிந்து கொண்டு, தங்களது கூட்டத்தாருடன் நதிக்கரையில் மகிழ்ந்து விளையாடினீர். ஆனந்தத்தால அவர்கள் கண்கள் நீரால் நிறைந்தன. (7)

காரிருள் சூழ்ந்து விட்டதால், அவர்களால் இரவு வீடுகளுக்குப் போக முடியவில்லை உம்மைத் தேடி வந்த ஆயர் குல மக்கள் உமது பாதுகாப்பை நம்பி ஆற்றங்கரையிலே உறங்கினர். ஆனால் விரைந்து காட்டு நெருப்பால் சூழப்பட்டனர். (8)

அச்சமூட்டும் நெருப்பால், ஆயர்கள் விழித்தெழச் செய்யப்பட்டனர். உதவிக்கேட்டுக் கதறி அழுதனர். அவர்களது துயரைத் தீர்ப்பதற்காக காட்டு நெருப்பையே உண்ணத்தலைப்பட்டீர். அதில் வியப்பென்ன? பஞ்சபூதங்களில் ஒன்றான நெருப்பு உமது முகத்திலிருந்து வெளிவந்ததல்லவா? (9)

பித்தம் (மஞ்சள் நிறம்) என்பது நெருப்புக்கு அனுசரிக்கப்பட வேண்டியதாக இதுவரை இருந்து வந்தது. ஆனால் இப்போது பருகப்படுவது என்ற பொருளிலும் பயன்படுத்தப்பட வேண்டி உள்ளது. ஏனெனில் நெருப்பையே நீர் உண்டவராயிற்றே; ஆனந்தமுற்ற ஆயர்களால் அவ்வாறு போற்றப்பட்டவரே! என்னை என்னுடைய பிணிகளில் இருந்து காப்பாற்றி அருள்புரிய வேண்டுகிறேன். அதற்குக் காரணமாக இருந்த பாவங்களிலிருந்தும் விடுவிக்க வேண்டுகிறேன். (10)

# தசகம் - 57

## பிரலம்பாசுரன் வதம்

வேண்டுவோர்க்கு வேண்டுவன யாவும் அளிக்க வல்லவனே; ஒருநாள் ஒளிவீசும் அணிகள் பலபூண்டு, பலராமனுடனும் ஆயச்சிறுவர்களுடனும் பசுக்களுடனும் கானகம் சென்றீர். (1)

ஆயர் கைக்கோலைக் கையில் ஏந்தியபடி, விளையாட்டு மொழி பேசிக் கொண்டும் கானகத்தின் அழகு நிறை காட்சிகளை அவ்வப்போது பலராமனுக்குச் சுட்டிக் காட்டிக் கொண்டும் பண்டீரகம் என்று அழைக்கப்படும் ஆலமரத்தின் அடியைச் சேர்ந்தீர். (2)

அருள் கொடுக்கும் அகண்ட கரங்களைப் பெற்றவரான உம்மைக் கொலை செய்யும் நோக்கத்துடன் பிரலம்பன் என்ற அசுரன் இடையன் ஒருவன் வடிவத்தில் தங்களை நெருங்கினான். (3)

அவனது தீய எண்ணத்தை நீர் அறிவீர். இருந்தும் அவனுடைய நோக்கத்தை அறியாதவர்போல் அவனுடன் தோழமை பூண்டு ஆலமரத்தின் நிழலில், தேர்ச்சிபெற்ற ஆயர்கள் ஏற்பாடு செய்திருந்தபடி மல்யுத்தத்தில் ஈடுபட்டீர். (4)

ஆயர்கள் கூட்டம் இரண்டு குழுக்களாகத் தங்கள் தலைமையிலும் பலராமன் தலைமையிலும் பிரிந்து, தங்களது பலம் பற்றிய அச்சம் கொண்ட அசுரனைத் தங்களது குழுவில் உம்மோடு சேர்த்துக் கொண்டீர். (அப்படிச் செய்வதால் அவன் உம்மோடு யுத்தம் தொடுக்க முடியாது.) (5)

தோற்றவர், வென்றவரைத் தமது தோளில் சுமக்க வேண்டும் என்ற விளையாட்டு விதியின்படி, எதிர்க்குழுவில் இருந்து உம்மை வெற்றி கொண்ட உமது தோழர் ஸ்ரீதாமா என்பவரை உமது தோளில் சுமந்து வந்தீர். (6)

இறைவனே! அதன்படி ஆயர்களில் பலர் மற்றவரைச் சுமக்க நேர்ந்தது. அதன்படி தோற்ற பிரலம்பன் தன்னை வென்ற பலராமனைத் தனது தோளில் சுமக்க நேர்ந்த போது, அவரைச் சுமந்து கொண்டு நெடுந்தூரம் சென்று விட்டான். தனது தீய எண்ணத்தை நிறைவேற்றிக் கொள்வதற்காக உமக்குப் பயந்து அப்படித் தொலைவில் சென்று விட்டான். (7)

நெடுந்தூரம் தன்னைத் தூக்கிச் செல்வதைக் கண்ட பலராமர் தமது தெய்வீக சக்தியால் தமது எடையை அதிகரித்து, அவனை அழுத்த, அந்த அசுரன் தனது சுய உருவத்தைக் காட்ட அந்தப் பயங்கர உருவம் பலராமரையே சிறிது நடுங்க வைத்தது. (8)

அசுரன் மிகவும் நெடிது வளர்ந்து காணப்பட்டான். அவனுடைய தோளிலிருந்து தொலைவில் உள்ள உமது முகத்தரிசனம் அவருக்கு சிறிது தெம்பாக இருந்தது. உடனே அச்சம் சிறிதுமின்றி அந்த அசுரனை அடித்து நொறுக்கி கூழாக்கி விட்டார். (9)

தேவர்கள் உங்கள் இருவர் மீதும் மலர் மாரி பொழிந்தனர். அசுரனைக் கொன்று திரும்பி வந்த பலராமரை; ஆர்வத்துடன் தழுவிக் கொண்டீர். (10)

கருவண்டைப்போல் ஒளிவீசிக் காட்சி தரும் ஹரி! உலகங்களைக் காப்பவரே! பிரலம்பனை அழித்தவரே; என்னுடைய துன்பங்களிலிருந்து என்னைக் காப்பாற்றி அருள் புரிய வேண்டுகிறேன். (11)

# தசகம் - 58

## கொடிய நெருப்பிலிருந்து காப்பாற்றல்

பிரலம்பன் வதத்திலும் மற்ற ஆயர்களுடன் அயராத விளையாட்டிலும் ஈடுபட்டிருந்த போது, மேய்ச்சல் தரையைத் தேடிப் பசுக்கள் அவ்விடம் விட்டு அகன்று புல் மேய்ந்தபோது அய்ஷிகம் என்ற இடத்தை அடைந்தன. (1)

பிருந்தாவனத்தின் வெப்பம் அணுகாத குளிர்ந்த தோப்புக்களில் இருந்து புறப்பட்டுச் சென்ற பசுக்கள் கோடை வெப்பத்தாலும் உம்மைப் பிரிந்ததால் ஏற்பட்ட துன்பத்தாலும் தொல்லைப்பட்டன. அதனால், செயலற்று திகைத்து நின்று விட்டன. (2)

பிரபுவே! தமது தோழர்களுடன் பசுக்களைத் தேடி அலைந்து, திக்குத் தெரியாத காட்டில் திசை தடுமாறித் திகைத்து நின்றதைக் கண்டீர். அந்தோ! அவற்றின் அருகில் நீர் போவதற்குள் சுற்றிலும் பயங்கரமான தீ பற்றி எரியத் துவங்கிவிட்டது. (3)

கொழுந்து விட்டு எரிந்த நெருப்பால், பெரிய மரங்கள் கருகிச் சாய்ந்தன. வெளியே செல்வதற்கு வழியேதும் இன்றிப் பாதையை அடைத்து விட்டன. ஆயர்கள் எரியுண்டதைப்போல எண்ணிக் கதறி ஓலமிட்டனர். அகில உலகங்களையும் காப்பவராகிய உம்மை துன்பக் காட்டிலிருந்து விடுவிக்கும் ஆற்றல் பெற்றவரான உம்மை வேண்டித் தொழுதனர். (4)

'அஞ்சேல்! அனைவரும் தங்களது கண்களை மூடிக் கொள்ளுங்கள் என்று நீர் கூறிய அறிவுரைப்படி அப்படியே அனைவரும் தத்தம் கண்களை மூடிக் காத்திருந்தனர். கண்மூடி கண் திறப்பதற்குள் அனைவரும் பிருந்தா

வனத்திலுள்ள பண்டரீக ஆலமர நிழலில் இருப்பதை உணர்ந்தனர். பயங்கரக் காடும் கொழுந்து விட்டெரிந்த தீயும் கண்களுக்குப் புலப்படவே இல்லை. (5)

தாம் அதிசயமாக உயிர் பிழைத்ததை எண்ணி வியப்புற்ற ஆயர்கள் கோவிந்தா உனது சக்தி அளவற்றது என்று உமக்கு பல்லாண்டு கூறி வாழ்த்தித் தொழுதனர். புன்முறுவலுடன் அவர்களது வாழ்த்துக்களை ஏற்றுக் கொண்டீர். வனத்திற்குள் விளையாடித் திரிந்து மகிழ்ந்தீர். அங்குமிங்கும் மரங்களில் பூத்திருந்த மலர்கள், இருண்ட காட்டிடையே வசந்தத்திற்கு வரவேற்பளித்தன. (6)

இறைவனிடத்தில் அன்பு பூணாதவர் மனத்தில் பொங்கியெழும் கொடிய உணர்ச்சிகளைப் போலவும், இறைவனிடத்தில் இடையறாத அன்பு பூணுவதால், மனிதர்களின் உள்ளத்தில் குடிபுகுந்துள்ள பாவச் சேறு காய்ந்து மறைவதைப் போலவும் தங்களது ஓங்கிய கரத்தில் ஒளிவிடும் சுதர்சனச் சக்கரத்தைப் போலவும், கோடைக்காலம் துவங்கியது. அவற்றை யமுனை நதிக்கரையில் கழித்தீர். (7)

மழைக்காலம் வந்தது; அனைவர் மனதிலும் மகிழ்ச்சி பொங்கித் ததும்பியது. தங்கள் திருவுடலை போலக் கார் நிறங்கொண்ட மேகங்கள் வானத்தில் நிறைந்தன. அங்கே பட்டொளி வீசிப் பிரகாசித்த மின்னல், தாங்கள் தரித்திருக்கும் பீதாம்பரத்தைப் போல நிறங்காட்டிப் பிரகாசித்தன. அந்த மழைக் காலத்தில் கோவர்த்தன மலையின் குகைகளில் உமது விளையாட்டுக்கள் தொடர்ந்தன. (8)

இறைவனே! மிகவும் பெருமை பொருந்திய தனது விருந்தினராக கோவர்த்தன மலை அரசன் தங்களை வரவேற்றான். மேகம் கண்டு மனம் மகிழ்ந்து அகவுகின்ற மயில்களின் இன்னிசை உமது புகழ் பரப்பியது. மரங்களி

விருந்து வீழ்ந்த அழகிய வண்ண மலர்கள் தங்கள் திருவடி களுக்கு அஞ்சலி செலுத்தின. (9)

குருவாயூருக்குத் தலைவனே! தங்களது அடியவர்களின் உள்ளங்களைப் போலத் தூய்மையான நீர் பெருக்கால் நிரம்பப் பெற்ற ஓடைகள் வசந்தத்தின் வருகைக்குச் கட்டியம் கூறின. அவற்றின் அழகில் ஆனந்தம் அடைந் தீர். காட்டு வெளியில் மேய்ந்து திரிந்த ஆநிரைகளைப் பார்த்து அகம் மகிழ்ந்தீர். எனக்கு உடல் நலத்தை அளித்துக் காப்பாற்றி அருள் புரியவேண்டுகிறேன். (10)

# தசகம் - 59

## குழலோசை கேட்கிறது

காயா மலர்களைப் போன்ற அழகு படைத்த உமது உருவம் அதனுடைய வனப்பாலும் வடிவாலும் அனைவரையும் ஆனந்தத்தில் மூழ்கடித்தது. அவர்கள் உள்ளங்கள் உமது பிரேமையால் பிரகாசித்தன. சச்சிதானந்தப் பிரம வடிவமான உங்களைப் பார்த்து ஆயர்குல மங்கையர் நாள்தோறும்கண்டு தம் வசம் இழந்தனர். (1)

ஹரியே! மன்மதனால் தாக்குண்ட அந்த கோபியர்கள் உங்களை எப்பொழுதும் கண்டு ஆனந்திப்பதையே விரும்பி, உம்மை விட்டு ஒருபொழுதும் அகலாது காத்திருந் தனர். அதனால் விடியலில் கானகம் செல்லும் காட்சியைக் கூடத் தவிர்க்க விரும்பினர். (2)

ஆநிரைகளை மேய்ப்பதற்காக விடியற் காலையில் தாங்கள் வெளியேறும்போது, தங்கள் உருவம் தங்கள் கண்பார்வையிலிருந்து மறையும் வரையில், தங்களையே கண்கொட்டாது பார்த்து நின்றனர். அதன்பிறகும்

தங்களது உருவம் கண்ணுக்குப் புலனாகாது மறைந்த பின்னரும், மனத்திருத்தி தொலைவிலிருந்து கேட்கும் தங்களது மதுரக் குழலோசையை செவிமடுத்து மகிழ்ந் தனர் தங்களது பல்வேறு திருவிளையாடல்களை எண்ணி எண்ணி இறும்பூர தெய்தினர். (3)

கானகம் சேர்ந்தவுடன், நிழல் தரும் மரத்தடியில் கால் மாற்றி நின்று தங்களது உயிர் மூச்சால், புல்லாங் குழலை நிரப்பி இனிய ஓசை எழுப்பிக் காற்றில் தவழ விட்டு இசைத்து வந்தீர். (4)

தங்களது மதுரக்குழலில் இருந்து வெளிக்கிளம்பிய மனோகரமான ஓசை வானத்தில் இருக்கும் தேவமங்கை யரின் உள்ளங்களை மன்மத பாணத்தால் தாக்கின. காட்டு விலங்குகளும் பறவைகளும் உருகி வழிந்தன. (5)

குழலின் மீது நிரவி விளையாடும் தங்களது அழகிய விரல்களையும் இசைக்கேற்றவாறு தாளமிடும் பாதங் களையும், மனதில் நினைத்து நினைத்து நெக்குருகி ஆயர்குல மங்கையர் எல்லையில்லாக் களிப்பில் மூழ்கி யிருந்தனர். (6)

தங்கள் திருவுருவத்தைக் காணும்பேறுபெற்ற தேவ மங்கையர்கள் பாக்கியம் செய்தவர்கள்; காட்டு விலங்கு களும், பசுக்களும் பறவைகளும் அதிர்ஷ்டசாலிகள் ஏன் தங்கள் பாதம் பட்டுப் பவித்தரப்பட்ட காடும் மேடும் புண்ணியம் செய்தவை என்று ஆயர்குல மங்கையர் எண்ணிப் பெருமூச்செறிந்தனர். (7)

அதரத்தில் வழியும் ஆனந்தத்தேனை உறிஞ்சி அந்தப் புல்லாங்குழல் ஆனந்தம் அடைந்த பின்னர், நமக்கும் ஏதாவது மிச்சம் மீதி வைத்திருக்குமா? அடைய முடியாத பொருளுக்காக மனமே! நீ ஏன் வீணாக ஆசைப்படுகிறாய் என்று கோபியர் ஏங்கித் தவித்தனர். துயரம் அடைந்தனர். (8)

இறைவனே! இடைவிடாமல் தாக்குகின்ற காமன் கணையால் அந்தப் பெண்களுக்கு ஆசி வழங்கப்பட்டது ஏனெனில் அதனால் அவர்கள் எந்த நேரமும் தங்களை விட்டு விலகி இருக்காது நெருங்கி வருவதற்கு துணை நின்றன அதன் விளைவாக உலக பந்தங்களிலிருந்து அவர்களால் விடுதலை பெற்று நிற்க முடிகிறது அல்லவா? (9)

இயற்கையின் விளைவால், இருபாலோருக்கும் இடையில் இணக்கம் ஏற்படுவது உண்மையே ஆனால் ஆண்டவனிடத்தில் பக்தி பூண்டிருப்பதால், நீண்ட முயற்சிக்குப் பின் முக்தி கிட்டுகிறது. சில வேளைகளில் கிட்டாமலும் போகிறது. ஆனால் இந்த மங்கையர்களுக்கு இந்த இரண்டு பரிசுகளும் நிறையவே கிட்டியுள்ளன. ஆன்மீகப் பாதையில் நிற்கும் அனைவரும் நாடுகின்ற உத்தம புருஷனான கண்ணனாக அவதாரம் எடுத்துள்ள உம்மை அவர்கள் அந்த இரண்டு வகையாக நெருங்குகின்ற அடைகின்ற பேற்றைப் பெற்றிருக்கின்றனர், எத்தகைய நல்லாசிகள் அவர்களுக்குக் கிட்டியுள்ளது. அத்தகைய குருவாயூரப்பனே! என்னைப் பாதுகாத்து அருள் புரிய வேண்டுகிறேன். (10)

# தசகம் - 60

## கோபியர் ஆடைகள் கவர்தல்

தங்களது பணிப் பெண்களாகச் சேவை செய்யும் ஆவலால் உந்தப்பட்டு, தங்களிடம் மாறாத காதல் கொண்ட கோபியர்கள், யமுனை நதிக்கரையில் கூடித் தாயாரை வழிபட்டனர் தங்கள் விருப்பங்களைப் பூர்த்தி செய்வதற்காக தேவியைப் போன்ற பதுமையை மணலால் செய்து வழிபட்டு வந்தனர். (1)

தங்கள் திருநாமங்களைப் போற்றுவதிலும் தங்களது திருவுருவத்தை நெஞ்சில் இருத்தி வழிபடுவதிலும் ஆனந்தம் கொண்ட அந்த மங்கையர், ஒரு நாள் அதிகாலைப் பொழுதில் துயிலெழுந்து, நந்தகுமாரன் தமக்குக் கணவனாக வரவேண்டும் என்று தேவியைத் வேண்டித் தொழுதனர். (2)

அத்தகைய விரதத்தை ஒரு மாதத்திற்கு மேல் கடைப் பிடித்து வந்த அவர்களிடம் பரிவு கொண்டு அவர்களை ஆசீர்வதிக்கும் நோக்கத்துடன் யமுனைக் கரைக்குச் சென்றீர் (3)

வழிபாடு முடிந்தவுடன், கோபியர் அனைவரும் தத்தம் ஆடைகளைச் களைந்து ஆற்றங்கரையருகே வைத்து விட்டு, யமுனை நதியில் பாய்ந்து நீர் விளையாட்டில் ஈடுபட்டிருக்கும்போது அவர்களை நோக்கித் தாங்கள் வருகை தருவதைக் கண்டு அதிர்ச்சியுற்றனர். (4)

வெட்கத்தால் நாணித் தலைகுனிந்து நின்ற அந்தக் கோபியரின் ஆடைகளைக் கவர்ந்து அருகில் இருந்த மரத்தின் மீது ஏறி அதன் கிளை ஒன்றில் அமர்ந்து கொண்டீர். (5)

''அழகியரே! ஆடைகள் வேண்டுமென்றால் ஒவ்வொருவராகக் கரைக்கு வந்து உங்களுடைய ஆடை களைப் பெற்றுக் கொள்ளுங்கள்'' என்று உரைத்தீர். புன் முறுவலோடு உரைக்கப்பட்டவற்றைக் கேட்ட கோபியர் ஆடை ஏதுமின்றி வெளியே வருவதற்கு முடியாமல் திகைத்தனர். (6)

கமலக்கண்ணா! நீடுவாழ்க; உமது பணிப் பெண் களான எங்களை ஏன் இப்படி துன்புறுத்துகிறீர்? எங்கள் ஆடைகளைக் கொடுத்து விடு என்று கோபியர் கேட்டதும் உமது புன்முறுவல் ஒன்று மட்டும் அவர்களுக்குக் கிடைத்தது. (7)

கூப்பிய கரங்களுடன் ஆற்றங்கரைக்கு வந்து நின்ற கோபியரை உம்மையே சரணடைந்த புனித உள்ளங்களைக் கொண்டவர்களைக் கண்டதும், அவர்களுக்கு அவர்களது ஆடைகளை அளித்து விட்டுக் கூறியவை என்ன தெரியுமா? (8)

உங்கள் மனதை நான் அறிவேன் யமுனை நதிக் கரைக்கு வாருங்கள் ஒவ்வொரு பௌணர்மியிலும் நீங்கள் வேண்டுவது உங்களுக்குக் கிட்டும் என்று கூறினீர். (9)

பரந்தாமா! உமது திருவாயிலிருந்து உதிர்ந்த தேனினும் இனிய சொற்களைக் கேட்டதும், தங்களைப் பிரிய மனமின்றி, தங்கள் திருவடித் தாமரைகளைத் தமது கடைக்கண்களால் பார்த்த வண்ணம் அந்த மங்கையர் மெல்லத் தங்கள் வீடு திரும்பினர். (10)

ஹரியே! இவ்வாறு ஆயர்குலப் பெண்களுக்கு ஆசி நல்கி, கானகத்தில் இடையர்களுடனும் பசுக்களுடனும் அலைந்து திரிந்து வந்தவரே; அடியார்க்கு என்றென்றும் அருள் புரியும் கருணை உள்ளம் கொண்டவரே என்னுடைய நோய்கள் அனைத்தையும் நீக்கிக் காப்பாற்றி அருள் புரிய வேண்டுகிறேன். (11)

## தசகம் - 61

## பிராமணப் பெண்களுக்கு வாழ்த்துரைத்தல்

ஒருமுறை, பிராமண மங்கையருக்கு அருள் புரிவதற்காக பிருந்தாவனத்தில் இருந்து வெகுதொலைவில் உள்ள கானகக் குடியிருப்புக்கு மாடு கன்றுகளுடன் சென்றீர். (1)

மனிதர் நடமாட்டம் இல்லாத காடுகளின் வழியே செல்லும்போது கால்நடைகள் பசியாலும் தாகத்தாலும்

பாதிக்கப்பட்டன. அதனால் சற்று தூரத்தில் பிராமணர்கள் யாகம் புரிந்து கொண்டிருந்த இடத்திற்கு சென்று உணவுக்காக யாசிக்கும்படி அறிவுறுத்தினீர். (2)

இறைவனே! தங்கள் நாமத்தைக் கூறி அந்த ஆயர்கள் உணவு கேட்டபோது கேட்டும் கேளாதவர்களைப் போல இருந்துவிட்டனர். சுருதிகளை கற்றிருந்தும் ஆண்டவன் பெயரால் உணவு கேட்டவர்களுக்கு உதவ வேண்டியது தங்களது கடமை என்று அறிந்திருந்தும் அப்படிச் செய்யாமல் அலட்சியமாக இருந்து விட்டனர். (3)

உணவு மறுக்கப்பட்டதால் புண்பட்ட இதயத்துடன் ஆயர் சிறுவர்கள் திரும்பி வந்தனர். யக்ஞம் செய்பவர்கள் யாக முறைக்கு மாறாக நடந்து கொண்டது அதிசயமாக இல்லை? இறைவனிடத்தில் மெய்யான பக்தியின்றி, உமக்கு எப்படி ஆகுதிப் பொருள்களை அவர்களால் படைக்க முடியும்? அரிசி உணவின்றிப் பலகாலம் பசித்திருந்து வந்தவர்களால் தங்களது பசியாற்ற எப்படி உணவு படைக்க முடியும்? (4)

"அந்தப் பிராமணர்களின் மனைவியரிடம் நான் வந்திருப்பதாகக் கூறுங்கள். இரக்கக்குணம் படைத்த அவர்கள் உங்களுக்கு உணவு அளிப்பார்கள்" என்று புன்முறுவலுடன் நீர் கூறியதைக் கேட்டு, அந்த மகளிரை அணுகி, அந்தச் சிறுவர்கள் உணவு அளிக்க வேண்டும் என்று கேட்டார்கள். (5)

உம்மைத் தரிசிக்க வேண்டும் என்ற ஆவலுடன் நெடு நாட்களாகக் காத்திருந்த அந்த மங்கையர், தங்கள் பெயரைக் கேட்டவுடன உணர்ச்சி பொங்கி எழ, மகிழ்ச்சி கொண்டனர். நால்வகை அன்னங்களை ஏந்தியபடி அவர்கள் உம்மை நண்ணினர். அவர்களுடைய உற்றாரும் உறவினரும் அப்படிச் செய்யக்கூடாது என்று தடுத்தும் அவர்கள் கேட்கவில்லை. (6)

ஒரு தோழனின் தோள் மீது கை வைத்தபடி, அருள் சுரக்கும் முகம் ஒளி வீச, கன்னக்கதுப்புகளில், காதில் அணிந்திருந்த குண்டலங்களால் விகசிக்க தலைமுடியில் மயில் பீலிகள் அசைந்தாட நின்ற காட்சியைக் கண்டனர். (7)

அற்புதம்! சம்பிரதாயத்தில் மூழ்கிய கணவனால், உமதருகில் செல்லக்கூடாது என்று தடுத்து நிறுத்தப்பட்ட ஒரு மங்கை உம்மைப் பற்றிய சிந்தனையில் ஆழ்ந்தபடி ஒருவித சிரமும் இன்றி உடனே முக்தி அடைந்தாள். (8)

அப்படித் தம் வீடு வாசல் துறந்து உம்மைச் சரணடைந்து சேவை செய்ய பெண்கள் விரும்பினாலும், அவர்கள் அளித்த பிரசாதத்தைப் பெற்றுக்கொண்டு அவர்களுக்கு நல்லாசி கூறி, வேள்விச் சடங்குகளை நல்ல முறையில் முடிப்பதற்காக தங்களது இல்லம் திரும்புமாறு அறிவுரை கூறினீர். மற்றும் தங்களது அருளால் அவர்கள் மீது அவர்களது கணவன்மார்கள் எத்தகைய காழ்ப்புணர்ச்சியும் அற்று இருந்தனர். (9)

குருவாயூரப்பனே! வேள்வி முடிந்த பின்னரே, அதற்கு முன் நடந்தவற்றின் தாத்பரியம் என்ன என்பதை அந்தப் பிராமணர்கள் உணர்ந்தனர். உடனே அவர்கள் தமது தவற்றை உணர்ந்து தங்களது புகழ்பாடித் தொழுதனர். தங்களது மனைவியரின் பக்தியின் மாண்பை உணர்ந்தனர், ஐயனே என் துன்பங்களைத் துடைத்து அருள் புரிந்து காப்பாற்ற வேண்டுகிறேன். (10 )

## தசகம் - 62

## இந்திரனுக்குப் பலி கொடுப்பதை தடுத்தல்

பிரபுவே! ஒரு முறை, இந்திரனுக்காக செய்ய வேண்டிய ஒரு யாகத்திற்காக யாகப் பொருட்களை ஆயர் குலத்தவர் சேகரித்துக் கொண்டிருந்தனர். இந்திரனுடைய

அகம்பாவத்தை அடக்க வேண்டும் என்று நினைத்த தாங்கள் எதற்காக அவ்வளவு பெரிய ஏற்பாடுகள் செய்து வருகிறீர்கள் என்று அவற்றைப் பற்றி அறிந்திருந்தும் வேண்டும் என்றே நந்தகோபன் முதலான அவர்களைக் கேட்டீர். (1)

நந்தகோபன், "மகனே, ஒவ்வொரு ஆண்டும் நாம் இந்திரனுக்கு ஒரு பெரிய விழா எடுக்கவேண்டும். ஏனெனில் அவனால்தான் மாரி பெய்து உலகம் செழிக்கிறது. மனிதர்களின் தேவைகள யாவற்றையும் மழை தான் பூர்த்தி செய்யக் கூடியது. அதிலும் நம்மைப் பொறுத்தமட்டில், நமது கால்நடைகள் பசிய புல்லையும் தண்ணீரையும் நம்பி உயிர் வாழ்கின்றன" என்று கூறினார். (2)

தங்களது தந்தையின் சொற்களைக் கேட்டவுடன், "இந்திரன்தான் மழைக்குக் காரணம் என்பது சரியல்ல; பூர்வ புண்ணிய தர்மங்களுக்குத் தக்கவாறே மழை பொழிகின்றது. கானகத்தில் வளர்ந்துள்ள நெடிய மரங்கள் எப்பொழுதாவது இந்திரனுக்கு விழா எடுக்கின்றனவா? இல்லையே" என்று பதில் கூறினீர். (3)

கால்நடைகள் நமது குலத்தின் பெரிய சொத்து என்பது சரி; அப்படி புல்லையும் நீரையும் அளிக்கும் கோவர்த்தன மலைக்கல்லவா விழா நடத்த வேண்டும். இந்தப் பூமியில் இந்திரனைப் போன்ற தேவர்களைக் காட்டிலும் உயர்ந்தவர்களான பெரிய முனிவர்களையல்லவா நாம் தொழுவதற்குக் கடமைப்பட்டவர்கள்" என்றும் உரைத்தீர். (4)

தங்கள் சொல் கேட்டதும், பெரிய முனிவர்களை பக்தியுடன் பூசனை புரிந்தனர். கோவர்த்தன கிரியை வலம் வந்து தொழுது விழா எடுத்தனர். அவர்கள் படைத்தன அனைத்தையும் அவர்கள் முன்னிலையில் தாங்களே உண்ணத் தலைப்பட்டீர். (5)

அவர்களிடம் ''பார்த்தீர்களா? நான் சொன்னது எவ்வளவு சரி என்று நாம் படைத்த அனைத்தையும் இந்த மலையே உண்டுவிட்டது. தனக்குச் சேர வேண்டியது கிடைக்கவில்லை என்று இந்திரன் கோபம் கொண்டாலும் இந்தக் கோவர்த்தனகிரி நம்மையும் நமது கன்று காலிகளையும் காத்து இரட்சிக்கும் என்று உரைத்தீர் (6)

விரஜகுல மக்கள் மிகுந்த களிப்புடன் தங்கள் ஊர் திரும்பினர். தனக்கு வழங்கப்பட வேண்டிய பலி, வழங்கப்படாதது குறித்துக் கோபம் கொண்டான் இந்திரன். தங்களுடைய பெருமைகளை அவன் அறிவான். தங்கள் தயவாலேதான் அந்தப் பதவியை அடைந்திருக்கிறோம் என்பதனையும் அவன் அறிவான். இருப்பினும் தனது மமதையால் அத்தகைய கோபம் கொண்டான். (7)

மகாவிஷ்ணு மானிட அவதாரம் எடுத்து வந்திருந்தாலும், தேவர்குலத்தின் பெருமையையும் உரிமையையும் பக்திப்படுத்தக்கூடிய செயல், மானுடன் ஒருவனால் புரியப்பட்டுள்ளது. அதனால் அந்த ஆயர்குலச் சிறுவனுக்கும் அவனுடைய குலத்திற்கும் சொந்தமான ஆநிரைகளையும் இல்லங்களையும் அவர்களது வேறு சொத்துக்களையும் அழித்து ஒழித்து விடுகிறேன் பார் என்று இந்திரன் ஆர்ப்பரித்தான். (8)

தங்களது இருப்பிடத்தை வெள்ளத்தால் மூழ்கடித்து விடுவதற்காக, கார்மேகங்களைக் ககனத்தில் உருவாக்கினான். தனது வெள்ளை யானையின் மீது அமர்ந்து தனது இடி ஆயுதத்தைத் தாங்க வாயு, அக்னி என்ற மற்ற தேவர்கள் பின்தொடர்ந்து வரத் தனது நாச வேலைக்காகப் புறப்பட்டான் ஆனால் இந்திரன் தவறு செய்கிறான் என்பதை அவர்கள் அனைவரும் அறிவர். மூவுலகங்களுக்கும் நாயகனே! உமது மாயையால் ஆட்கொள்ளப்படாதவர் யார்? (9)

'இந்திரன் நம்மீது கோபம் கொண்டால், காட்டில் வாழும முனிவர்களும் மலையும் நம்மைக் காத்து இரட்சிக்கும் என்று ஆயர்குல மக்களுக்கு ஆறுதல் கூறி துணிவூட்டி, இந்திரன் கோபச் செயலை எதிர்பார்த்துக் காத்திருந்தீர். அத்தகைய குருவாயூரப்பனே, மூரனை அழித்தவனே; என்னுடைய நோய்களிலிருந்து என்னைக் காப்பாற்றி அருள் புரிய வேண்டுகிறேன். (10)

## தசகம் - 63

### கோவர்த்தன கிரியைக் குடையாகப் பிடித்தல்

தங்களது அழகிய கார்மேனியைப் போன்ற கார் மேகங்கள் வானத்தில் நிறைந்ததைக் கண்டீர். பூமியை நடுங்கச் செய்யும் இடி முழக்கம் கேட்டது. (1)

மழை மாரி பொழிந்ததைக் கண்டு ஆயர்குல மக்கள் அவதிப்பட்டனர். பெரிய பெரிய பனிக்கட்டிகள் வந்து வீழ்ந்தன. இந்திரன் கோபம் கண்டு அஞ்சி, வாய் விட்டு அரற்றிப் புகலிடம் தேடினர். அவர்களது சோகக் குரல் கேட்டு அஞ்சேல் என்று அபயம் அளித்தீர். (2)

''கோவர்த்தனம் எனும் இந்த மலை (பசுக்களைக் காப்பவன்) ஆயர்குலத்தின் தெய்வமாகும். மலைகளின் எதிரியான இந்திரனுடைய கொடுமையிலிருந்து நம்மை நிச்சயமாகக் காக்கும். அதைப் பற்றி ஐயம் வேண்டாம்.'' என்று புன்முறுவலுடன் ஆறுதல் அளித்தநீர், உமது சிறு கரங்களால் அந்த மலையை வேரோடு பெயர்த்தெடுத்தீர், (3)

அந்தப் பெரிய மலையைத் தங்களது பிஞ்சுக் கரங்களால் உயரத் தூக்கி எடுக்க, அதனுடைய பரந்த பாதுகாப்பின் கீழ் ஆயர்குடி மக்கள் தங்கள் உடைமைகளுடன் பசுக்களுடனும் மழை நீரிலிருந்து பாதுகாக்கப்பட்டவர்களாகத் தங்கினர். (4)

ஒரு கையால் கோவர்த்தன கிரியைத் உயரத் தூக்கிப் பிடித்தபடி மற்றொரு கரத்தால் சுற்றிலுமிருந்த பசுக்களை வாஞ்சையுடன் தடவிக் கொடுத்தபடி, சிறுவர்களுடனும் சிறுமியர்களுடனும் இனிமையாகப் பேசி மகிழ்ச்சி ஊட்டினர். (5)

''எவ்வளவு பெரிய மலை! சின்னஞ்சிறு கரத்தால் எத்தனை லாவகமாக உயரத் தூக்கி நிறுத்தியிருக்கிறார். என்னே விந்தை இது! மலை தானாகவே மேலெழும்பி நின்றதோ'' என்று அதைக் கண்டவர்கள் தங்கள் பெருமை அறியாது பிதற்றினர். (6)

''என்னே இந்தப் பையனின் அறியாமை! சற்று நேரம் சென்றால் கை வலிக்கக் களைப்படைந்து மலையைக் கீழே போட்டு விடுவான்'' என்று உம்மை தாழ்வாக மதித்து, மேலும் கடுமையாக மழை பொழியச் செய்தான். ஏழு நாட்கள் இரவு பகலாக மழை பொழிந்தது. (7)

இறைவனே! இமைப்பொழுதும் சோர்விலாது மலை போல் நிலைத்து நின்ற நீர் இம்மியளவும் அசையவில்லை. அதற்குள் நீர் வறண்ட மேகங்கள் நிலை குலைவதைக் கண்டு இந்திரன் தங்கள் வலிமை கண்டு அஞ்சி ஓடினான். (8)

அவ்வாறு மழை நின்றவுடன், மாடுகளும் இடையர்களும் திறந்த வெளிக்கு வந்தனர். மீண்டும் மலையை அது இருந்த இடத்திலேயே வைத்தீர். பெருமகிழ்ச்சி அடைந்த இடையர்கள் உங்களைக் கட்டித் தழுவிக் கொண்டனர். (9)

வராக அவதாரத்தில் பூவுலகத்தையே தூக்கிய தங்களுக்கு ஒரு மலையைத் தூக்குவது பிரமாதம் அல்ல, பிள்ளை விளையாட்டு என்று வானவர் வாழ்த்தினர். ஓ! குருவாயூரப்பனே! என்னுடைய நோயிலிருந்து என்னைக் காப்பாற்றி அருள் புரிய வேண்டுகிறேன். (10)

# தசகம் - 64

## கோவிந்தனாக மகுடம் புனைதல்

கோவர்த்தனகிரியைத் தூக்கிக் குடை பிடித்தது போன்ற தங்களது அதி அற்புத சக்திகளைக் கண்டு வியந்த ஆயர்குல மக்கள், தாங்கள் மிகப் பெரிய அவதார புருஷர் (மகாவிஷ்ணு) என்று உணர்ந்தனர் தஙகளது எண்ணத்தை உறுதிப்படுத்திக் கொள்வதற்காகத் தங்களது ஜாதகத்தை அளிக்குமாறு நந்தகோபனைக் கேட்டனர். (1)

தங்களது தந்தையார் தங்களது பெருமைகளைப் பற்றி கர்க்க முனிவர் உரைத்தனவற்றை அவர்களுக்கு எடுத்துரைத்தார். அதிலிருந்து அவர்கள் தங்கள் மேல் கொண்ட பாசமும் பக்தியும் அளவு கடந்து அதிகரித்தது. (2)

பின்னர். தனது தோல்வியால் வீழ்ச்சியடைந்த இந்திரன் தங்களை நாடி வந்து தங்கள் புகழ் பாடி வானுலகப் பசு ஒன்றை தங்களுக்குப் பரிசாக தந்தான். தங்கள் பாதங்களில் தன் தலைபட வணங்கினான். (3)

தெய்வீகப் பசு தனது கனத்த மடியில் சுரந்த பாலால் தங்களுக்கு அபிஷேகம் செய்தது. அதன் மூலம் தங்களைக் கோவிந்தன் (கோக்களாகிய பசுக்களின் தலைவன்) என்று உங்கள் பெருமையை உலகுக்கு உணர்த்தியது. ஐராவதத்தால் கொண்டு வரப்பட்ட தெய்வீக கங்கையால் இந்திரன் உமக்குப் புனித நீராட்டினான். (4)

அப்படித் தங்களைக் கோவிந்தன் என்று மகுடம் சூட்டிப் புனிதப்படுத்தியபோது, ஆயர்குலமக்கள் விண்ணுலகிலும் ஏன் வைகுண்டத்திலும் கூடப் பெறமுடியாத அளவற்ற ஆனந்தத்தை அடைந்தனர். (5)

ஒருநாள் அதிகாலையில் தங்களது தந்தையார் யமுனையில் நீராடிக் கொண்டிருந்தார். அப்பொழு அசுரர்கள் உலா வரும் நேரம்; வருணனுடைய தூதுவ ஒருவன் அப்பொழுது அவரைக் கடத்திச் சென்று விட்டான். உலக நன்மைக்காகவே மனித உருவ எடுத்திருந்த தாங்கள் உடனே விரைந்து வருணலோகம் சென்றீர். (6

தங்களது எதிர்பாராத வருகையால் அச்சமடைந் வருணன் - கடல்களின் அரசன் - உங்களை மிகுந்த பக்தி யுடன் தொழுது வணங்கினான். தாங்கள் தங்களது தந்தையை அழைத்துக் கொண்டு வீடு திரும்பினீர். இதை பற்றிப் பின்னர் நந்தகோபன் தன் குலத்தவர்க் எடுத்துரைத்தார். (7

தாங்கள் தான் அரி என்பதை ஆயர்குலமக்கள் ஐய பாட்டுக்கு இடமின்றி அறிந்தனர். தங்களது உன்ன நிலையைப் பற்றிய அனுபவத்தை நேரிடையாக அறிய வேண்டும் என்று விரும்பினர். பக்தியில்லாத மனிதர்களா அறிய முடியாத அந்த உயரிய நிலையை அவர்களுக்கு வெளிப்படுத்தினீர். (8

விடுதலை பெற்ற நிலையை அடைந்த ஆயர்கள் சச்சிதானந்தக் கடலில் மூழ்கி நெடுங்காலம் திளைத்தனர் அவர்களை உலக உணர்வுக்கு மீட்டுக் கொணர்ந்தீர். (9

அவ்வளவு சுலபமாக அத்தகைய அதி உன்னத நிலை பற்றி எந்த அவதாரத்திலும் காட்டியதில்லை. உள்ளங்கை நெல்லிக்கனி போல அதனை எடுத்துக் காட்டி இருக்கிறீர் இடைச் சிறுவன் வடிவத்தில் உள்ள பரப்பிரமம் என்பதை எடுத்துக் காட்டியுள்ள நீரே என் தெய்வம் - குருவா யூரப்பா, என்னைப் பிடித்த பிணிகளிலிருந்து என்னைக் காப்பாற்றி அருள் புரிய வேண்டுகிறேன். (10

# தசகம் - 65

## கோபியரின் ராச லீலை

தங்கள் விரதத்தின் முடிவில் காதல் விளையாட்டில் ஈடுபட்டுக் காட்டுவதாக கோபியருக்கு முன்பே வாக்களித்தபடி, ஒரு இரவில், யமுனை நதிக்கரையில் இருந்து பூரண நில ஒளியில் உமது மதுரக் குழலோசையை எழுப்பினீர்.
(1)

உமது குழலில் இருந்து கிளம்பிய மதுரக் கானத்தை விண்ணையும் மண்ணையும் அலைக்கழியச் செய்த உருக்கமான கீதத்தைக் கேட்ட, ஆயர்குலப் பெண்கள் அனைவரும் ஈடுஇணையற்றதும் எடுத்துச் சொல்ல முடியாததும் ஆன ஒரு ஆனந்தக் கவர்ச்சி வசப்பட்டனர். (2)

மதுரக் குழலோசையில் மனம் மயங்கிய அந்தப் பெண்கள், தாங்கள் ஈடுபட்டிருந்த இல்லப் பணிகளை, குழந்தைகளைக் கவனித்தல், கணவர்மார்களுக்குப் பணிவிடை செய்தல் ஆகியவற்றை அப்படியே விட்டு விட்டு காட்டை நோக்கி, தாங்கள் இருக்கும் இடத்தை நோக்கி, அழகியவனே! உம்மை நாடி ஓடி வந்தனர் (3)

அவர்களில் சிலர் ஆடை ஆபரணங்கள் புனைந்து தங்களை அழகுபடுத்திக் கொண்டார்கள்; பலர் தங்கள் ஒப்பனைகளை பாதியிலே விட்டு விட்டு அரை குறையான அலங்காரத்துடன் ஓடி வந்தவர்கள்; குழலோசை கேட்டவுடன் அவர்கள் மனம் கானகத்தை நோக்கி ஈர்க்கப்பட்டு விட்டன. அதனால் இருந்தது இருந்தபடி அவர்கள் உம்மை நாடி வந்தனர். அப்படி அரைகுறையான ஆடை அலங்காரத்தில் வந்தவர்கள் மற்றவர்களைவிட மிகவும் அழகாகக் காட்சி அளித்தனர். உமது திருக்கண்களுக்கு அவர்களே மிகவும் கவர்ச்சியாகக் காணப்பட்டனர். தங்கள் தோற்றத்தைப் பற்றிக் கொஞ்சமும் கவலைப்

படாமல் அவர்களது பக்தி அவர்களை நின்பால் ஈர்த்தன்றோ? (4)

மங்கை ஒருத்தி இடையில் அணிய வேண்டிய மேகலையைக் கழுத்திலும் கழுத்தில் அணிய வேண்டிய முத்து மாலையை இடுப்பிலும் மாற்றி அணிந்து வந்தாள். அதனால் அவளது இடையழகின் மேம்பாட்டை உமக்கு எடுத்துரைத்தாளோ? (5)

மற்றொருத்தி, ஆபரணங்கள் பல பூண்டிருந்தும் மேலாடை அணிய மறந்த நிலையில் ஓடி வந்திருந்தாள். அதனை மற்றவர் எவரும் காணவில்லை. உணர்ச்சி கொப்பளிக்க உன்னை நோக்கி ஓடி வந்தவர்களுக்கு மற்றவர்களைப் பற்றிக் கவனிக்க கவலைப்பட நேரம் எங்கே இருக்கிறது. கொங்கைகள் குலுங்க ஓடி வந்த வளைக் கண்டபோது உம்மை நீராட்டக் கவசங்களில் நீர் ஏந்தி வந்திருப்பது போல காட்சி தந்தது. உம்மை புனித நீராட்டி ஒப்பற்ற காதல் மன்னனாக முடிசூட்ட அப்படி வந்தாளோ? (6)

தமது சுற்றத்தாரால் விதிக்கபட்ட கட்டுக் காவலை மீறி வெளியே வர முடியாத கோபியர் சிலர் தங்களைப் பற்றிய தியானத்தில் உடல் உணர்வுகளைத் துறந்து உள்ளத்தால் உம்மைநிரப்பப் பெற்றவர்களாக இருந்தனர். எனவே அவர்கள் உம்மை அடைந்து சச்சிதான வெள்ளத்தில் விரைவில் மூழ்கினர். அவர்கள்தான் மிகவும் புண்ணியம் செய்தவர்கள்! (7)

அவர்கள் எவரும் உம்மைப் பரப்பிரமமாகக் காண வில்லை. தங்களுக்குற்ற காதலனாகவே கண்டனர். எனினும் அவர்கள் அத்தகைய வீடு விரைந்து பெற்றனர். பரமஹம்சர்கள் பெறக் கூடிய பேறல்லவா அது! கண்ணா! மனம் ஒருமித்த எத்தகைய உணர்வாலும், காதல், கோபம், அச்சம், நட்பு, அன்பு, காமம், சேவை,

பக்தி—ஆகிய எத்தகைய உணர்வாலும் உம்மை அடைய முடியுமல்லவா? நானும் அதுபோல அத்தகைய அழியாத் தன்மையை அகிலத்தில் அணுவேனும் துன்பமின்றி அடைவேனாக. (8)

உலகங்களின் முதல்வனும் அன்பனும் ஆகிய ஒப்பற்றவனே! உயர்ந்தவனே! கருணைக்கடலே! உமது முகம் விகசிக்க அனைவரையும் உமது அருட்பார்வையால் அரவணைத்தவரே! கூடியிருந்த கோபியர் ஒருங்கே கண்ட கொற்றவனே! குருவாயூரில் என்றென்றும் குடியிருப்பவனே! என்னைக் கொடுமை செய்யும் நோயிலிருந்து என்னைக் காப்பாற்றி அருள் புரிய வேண்டுகிறேன். (9)

## தசகம் - 66

### ராச லீலா

உம்மை நாடி வந்த மங்கையரின் காதல் நோயைத் தீர்க்க உறுதிபூண்டிருந்தாலும், ஆனால் அதற்கு மாறாக அவர்களிடம் பேசத் துவங்கினீர். (1)

வானத்தில் குழுமியிருந்த முனிவர்களும் அவர்கள் மூலமாக உலகில் உள்ள மக்களும் அறிய வேண்டும் என்பதற்காக பத்தினிப் பெண்கள், உயர்குலப் பெண்கள் ஆகியவரின் கடமைகள் என்ன என்பது பற்றி கோபியருக்கு எடுத்துரைத்தீர். தர்மத்தின் சொற்கள் அவை; ஆனால் உமது செயல்களை எவரும் கடைப்பிடிக்க முடியாது. ஏனெனில் நீர் புருஷர்களில் மிகவும் உத்தமமானவர்; தூய்மையானவர்; உலகங்களின் நன்மைக்காகவே இயங்கி வருபவர்; அதனால் அத்தகைய செயல்கள் உம்மை எக்காரணம் கொண்டும் பாதிப்பதில்லை. (2)

முரண்டு பிடிக்கும் உமது சுபாவத்தைக் கண்ட அந்தப் பெண்மணிகள் அளவற்ற சோகத்தை அடைந்தனர். கருணைக் கடலான உம்மிடத்தில் நீண்ட நேரம் வாதாடினர். தங்களைப் புறக் கணிக்கக் கூடாது என்று இறைஞ்சினர். (3)

பிரபுவே! அவர்களது அழுகையாலும் தொழுகையாலும் மனம் இரங்கிய நீர் யமுனை நதிக்கரையில் அவர்களுடன் எவ்விதக் கட்டுப்பாடுமின்றி விளையாடி மகிழத் தலைப்பட்டீர். (4)

யமுனை நதியின் மணல் நிரம்பிய கரையில் பூரண சந்திரனின் கதிர்கள் ஒளி வீச, மஞ்சள் கறை படிந்த கோபியரின் மேலாடைகளால் அலங்கரிக்கப்பட்ட ஒரு மணல் மேட்டில் அமர்ந்தீர். (5)

இட்டும் தொட்டும், கட்டியும் முத்தம் இட்டும், தழுவியும் நழுவியும் கைக் கொட்டியும் கனிமொழி பேசியும் மனம் ஆர உடல் அணைத்தும் அந்த மங்கையருக்கு எல்லையில்லா ஆனந்தம் அளித்தீர். (6)

அவர்கள் ஆடைகளை கவர்ந்து சென்ற தினத்தில் அவர்களுக்கு வாக்கு அளித்தபடி அதனையும் மீண்டும் புரிந்து அவர்களுக்கு ஆனந்தம் ஊட்டினீர். (7)

நந்தகோபனின் மகனே! அழகால் அகிலத்தையும் மயக்க வைக்கும் ஆற்றல் பெற்றவரே! பொடி வியர்வையில் மூழ்கிய உமது உடலை அரவணைத்து அந்த மங்கையர் பெற்ற ஆனந்தம் எவ்வளவு? உமது உதடுகளைத் தழுவி முத்துப் பற்கள் பிரகாசிக்க நின்ற கள்ளச் சிரிப்பின் கவர்ச்சி எத்தனை? (8)

உம்மைப் பிரிந்த அடியார் உள்ளம் சுடுநெருப்பில் இடப்பட்ட விறகாக எரிகின்றது. உம்மைச் சேரும்போது உள்ளம் சிருங்காரமயமாகக் காட்சி தருகின்றது.

வியப்பின் வியப்பே! இங்கே இந்தப் பெண்கள் தங்கள் அங்கங்களையே ஆரமாக்கி உன்னைச் சுற்றி சுழன்றனர். அன்பானவனே! அவர்களுக்கு அளவில்லாத ஆனந்தத்தை அளித்திருக்கிறீர். (9)

குருவாயூரில் குடியிருக்கும் கோமகனே! பொங்கி யெழும் ராதையில் கொங்கை தழுவிய உம்மைத் தொழு கின்றேன். என்னுடைய துன்பங்களை நீக்கிக் காப்பாற்றி அருள் புரிய வேண்டுகிறேன். (10)

## தசகம் - 67

## கண்ணன் மறைந்தும் தோன்றியும் விளையாடல்

பிரம்மானந்தத்தின் திருவுருவான காதல் விளை யாட்டில் மூழ்கியிருந்த அந்தப் பெண்கள் எல்லையில்லாத ஆனந்தத்தை அடைந்ததால், தம்மைப் போற்றி மிகவும் உயர்வாக நினைத்துக் கருதப்பட்டனர். (1)

ஆயர்குலத் தலைவனும் அழகு நிறை செல்வனும் ஆகிய கண்ணன் என்னிடத்தில் மட்டுமே உண்மையான பிரேமை கொண்டிருக்கிறார். மற்றவர்களிடம் அப்படிக் காதல் கொண்டிருப்பது போல நடிக்கிறார் என்ற எண்ணத்தை ஒவ்வொரு கோபியரும் கொண்டிருந்தனர். தம்மைப் பற்றிய அபரிதமான பெருமையாலும் பொறா மையாலும் களங்கப்பட்ட மனங்கொண்டவராகினர். ஆனால் இவையனைத்தையும் அறிந்தவனான கோவிந்தன் கணத்தில் அந்தக் கூட்டத்திலிருந்து மறைந் தார். (2)

செருக்குக்குக்கப்பால் பட்டதால் உமக்கு பிரியவளான ராதையை உடனழைத்துக் கொண்டு தொலைதூரம் விலகிச் சென்று அவளோடு ஆடலிலும் பாடலிலும் ஈடுபட்டிருந்தீர். (3)

தாங்கள் மாயமாக மறைந்ததால், மிகவும் துயர் கொண்ட கோபியர், ஒன்று கூடி கானகத்தில் ஒவ்வொரு இடமாகத் தங்களைத் தேடி அலைந்தனர். (4)

மரங்களைக் கேட்பர்; கொடிகளைக் கேட்பர்; காட்டு மலர்களைப் பார்த்துக் கேட்பர் கண்ணன் எங்கே? என்று தம்மீது கொண்ட அளப்பரிய காதலால் தங்கள் உள்ளம் கவர்ந்த கள்வனைக் கண்டீரோ என்று கவலையுடன் கேட்டு அலைந்தனர். (5)

கவலைமிகக் கொண்ட கோபிகை ஒருத்தி, கண்ணனை இதோ காண்கிறேன் என்று கற்பனையில் உளற அதைக் கேட்ட மற்றவர்களின் துயரம் அதிகரித்தது. (6)

உம்மைப்பற்றி ஒவ்வொருவரும் ஒருவிதமான கற்பனை செய்து கொண்டு, உமது பிள்ளைப் பருவ விளை யாட்டுக்களை மீண்டும் நினைவூட்டி அகமகிழ்ந்தனர். தங்களை போலவே உம்மைத் தேடி அலைந்த ராதையை ஓரிடத்தில் கண்டனர். ஏனெனில் அவள் உள்ளத்திலும் மமதை குடிபுகுந்த மறுகணமே அவளைக் கைவிட்டு மாயமாகிவிட்டீர். (7)

அனைவரும் ராதையுடன் இருள் அடர்ந்த காட்டுப் பகுதிக்குள் எல்லாம் சென்று தேடித்தேடி அலைந்தனர். உம்மைக் காணமுடியாததால் மனம் கலங்கி யமுனை நதிக்கரையில் கூடி தங்கள் நிலையை எண்ணிக் கலங்கி அரற்றினர். (8)

கருணைக்கடலே! புவனங்களை மயக்கும் காமனையும் காமம் கொள்ளச் செய்யும் கட்டழகா! துயரத்தால் அலைமோதும் மனம்கொண்ட கோபியர் இடையே புன்முறுவல் பூத்த வதனத்துடன் காட்சி தந்தீர். (9)

தங்கள் உள்ளம் கவர்ந்த கள்வனை எதிர்பாராத நேரத்தில் காணக்கிடைக்கும் பேறு பெற்ற அந்த மங்கை

யர்கள் தங்கள் மகிழ்ச்சியை எப்படி எல்லாம் வெளிப் படுத்தினர் தெரியுமா? குற்றம் ஒன்றும் இல்லாத குருவா யூரப்பா! கோபியருக்குக் காட்சி தந்த கண்ணா? கொடிய நோயிலிருந்து என்னைக் காப்பாற்றி அருள் புரிய வேண்டுகிறேன். (10)

## தசகம் - 68

## கோபியருடன் ஒன்று சேரல்

இறைவனே! உம்மை நெருங்கியதும் திகைத்து நின்ற கோபியர், உம்மைக் கண்டதால் உணர்ச்சிகள் பொங்கி யெழத் தம்மைக் கட்டுப்படுத்த முடியாத அதிர்ச்சியில் ஆழ்ந்தனர். அசைவற்று நின்றனர். அழிவில்லாத ஆனந்தத்தில் அவர்களது ஆத்மா திளைத்தது. (1)

மயிர்க் கூச்சலுற்ற ஒரு கோபிகை, உமது கரத்தை எடுத்து தமது மார்பில் அழுத்திக்கொண்டு அப்படியே வெகுநேரம் நின்றனள். (2)

மற்றொரு மங்கை, தனது மூச்சே நின்று விடும்படி உமது கரத்தைத் தனது கழுத்தைச் சுற்றி இறுகப் பிணித்துக் கொண்டு நின்றாள். (3)

காதல் மயக்கத்தில் ஆழ்ந்த மற்றொரு மங்கை, எவ் விதமான வெட்கத்தின் பாதிப்பும் இன்றி, உமது வாயிலி ருந்து எச்சில் தாம்பூலத்தை எடுத்து தனது வாயில் சுவைப் பதன் மூலம் தனது காதல் வேட்கையின் உச்ச கட்டத்தை அடைந்தாள். (4)

இரக்கமின்றி எம்மைக் கைவிட்டுக் கதற வைத்த கொடியவரே, உம்மை நாங்கள் எவரும் தீண்ட மாட் டோம் என்று ஒருத்தி வெறுப்புடன் கூச்சலிட்டாள். (5)

சச்சிதானந்தமயமான மனம் படைத்த கோபியர் கூட்டத்தில், உமது பெருமை சுடர் விட்டுப் பிரகாசித்த கோபியர் உடலின் மஞ்சள் கறை படிந்த அவர்களது மேலாடைகளைக் குவித்து வைத்து அதன்மீது அமர்ந் திருந்த கோபாலா! (6)

கருணை எத்தனை எத்தனை உருவங்கள் எடுத்துத் தோன்றுகிறது என்பது தெரியுமா? வேறுபாடின்றி எல்லோரிடத்திலும் ஒரே மாதிரியான கருணையைச் சிலர் காட்டுகின்றனர். பிறர் தம்மை அண்டியிருப்போரிடம் மட்டும் கருணை காட்டுகின்றனர் ஆனால் உமது கருணை அடியவரான எம்மை ஆபாசப்படுத்துவதாக இருக்கிறது என்று கோபியர் உரைத்தனர். (7)

அருமைப் பெண்களே! கடின இதயம் படைத்தவன் என்று என்னைச் சந்தேகப்படாதீர்கள்! என்னுடைய கவலையெல்லாம் நமது காதல் முறியக்கூடாது என்பது தான். உங்களுடைய மனம் என்றென்றும் தொடர்ந்து என்னிடத்திலே லயித்திருக்க வேண்டும் என்பதற்காக மறைந்து விளையாடினேன் என்று பதில் கூறினீர். (8)

என் ஆவி குடிகொண்ட தோழியரே, உங்களைத் தவிர எனக்கு இனியவர் வேறு எவரும் கிடையாது என்பதை அறியுங்கள். ஆகவே எவ்விதத் தடையும் இன்றி பூரண நிலவு பொழியும் இந்த இரவுகளில் யமுனை நதிக்கரையில் இனிமையாக விளையாடுவோம் என்று அவர்களுக்கு உற்சாகம் ஊட்டினீர். (9)

குருவாயூரப்பனே! கோபியரை ஆனந்தத்தில் ஆழ்த்து வதற்காக இத்தகைய அமுதமொழிகளை உதிர்த்த மாதவனே! இன்ப விளையாட்டுகளில் அவர்களுடன் ஈடுபட்டவனே! அடியவனுடைய கடுமையான பிணி யிலிருந்து காப்பாற்றி அருள் புரிய வேண்டுகிறேன். (10)

# தசகம் - 69

## ராச லீலை

தலை உச்சியில் மயில் பீலிகள் அலங்கரிக்க, காதுகளில் மீன் குண்டலங்கள் அசைந்தாட கழுத்தில் கழுத்தணிகளும் கவிமிகு மாலைகளும் விளையாட உடலில் சந்தனமும் புனுகு வாசமும் ஊட்டி சுகந்த மணத்தைப் பரப்பியவரே; இடையில் உள்ள பீதாம்பரத்தைச் சுற்றிலும் பொன்னிற மேகலை சுடர்வீச; மாணிக்கப் பரல்கள் பதித்த கழல்கள் ஒளிவீசி ஒலியெழுப்பி, ராச லீலைக்கு உகந்த உமது அழகிய தோற்றத்தை பூண்ட அணிகலன்களுடன் தியானிக்கிறோம். (1)

பின்னர் தமது மார்புக் கச்சைகளை இறுகப் பிணித்த, காதுகளில் ஒளி வீசும் அணிகளைப் பூட்டிய கோபியர், உம்மைச் சுற்றிலும் வட்ட வியூகம் அமைத்துச் சுழல்கின்றனர். ஒப்பில்லாமணியே! எம் இறையே! பொன்மகளின் துணைவரே! உமது நர்த்தனத்தை ஆரம்பித்தீர். உம்முடைய அழகுத் திருவுருவத்தைப் பலவாகப் பெருக்கிக் கொண்டு, சுற்றி நின்ற கோதையர்கள் இடையே ஒவ்வொரு ஜோடிக்கு ஒரு அணிகலன்களாகக் காட்சித் தந்தீர். (2)

வாசுதேவா! நாரதர் மூலம் தங்களது களியாட்டைப் பற்றிக் கேள்விப்பட்ட தேவர்கள், தமது தேவருலகத்தின் வனப்பு மிக்க வனிதையருடன் - அழகும் அலங்காரத்திற்கும் காதல் லீலைகளுக்கும் சிறப்புப் பெற்ற அத்தகைய தேவ மகளிருடன் - பொங்கியெழும் மகிழ்வோடு வானத்தில் அணிவகுத்து நின்றனர். (3)

உமது மதுரமான குழலிலிருந்து மனோகரமான கீதம் கிளம்பியது; அதற்கு இணைந்தாற்போல் கோபியரின்

கண்டத்திலிருந்து இனிய ஓசை எழும்பியது; இசைக்கு ஏற்றவாறு தாளம் தப்பாது கால்கள் இசைந்து நடனமிட்டன. கைகள் தட்டி ஒலியெழுப்பின. கைவளைகள் குலுங்கி ஓசைப்பட்டன; இடை தழுவி, தோள் தழுவி நடனமாடுவோர் ஒவ்வொருவரும், இடையிலுள்ள ஆடைகள் நெகிழ்ந்து காற்றில் அலைமோத ஆடிய ராசலீலை நடனக்காட்சியை மனத்தே இருத்தி தியானிக்கிறோம்.(4)

இசையின் இனிமை படிப்படியாக உச்ச கட்டத்தைத் தொட்டது; மனதை ஒருமுகப்படுத்தி உயர்ந்த குரல் எடுத்து கன்னியர் இசை மாரி பொழிந்தனர் இளநங்கையரின் இனிய அசைவுகள் அவர்களது ஆடைகளையும் அணிந்திருந்த மலர் மாலைகளையும் அலைக்கழித்தன. வானிலிருந்து இந்தக் காட்சியைக் கண்ணுற்ற தேவர்களும் அவர்களது மனைவியரும் எல்லையில்லாக் களிப்புடன் மலர்மாரி பொழிந்தனர். இமையாக் கண்களுடன் மகிழ்ச்சி மயக்கத்தில் மூழ்கினர். சித்தானந்த வடிவான உம்மிலே இரண்டறக் கலந்த இன்பத்தை பெற்றனர். (5)

கொடியுடல் படைத்த கோபிகை ஒருத்தி, வியர்வை வழிந்தோடும் உடலோடும் களைத்துச் சோர்ந்த கண் இமைகளோடும், உமது அழகிய தோளில் மயங்கிச் சாய்ந்தனள். குழல் கலைந்து சரிந்த கோதை ஒருத்தி, உமது கரங்களை இறுகப் பற்றிக் கொண்டாள். அவற்றில் பூசியுள்ள மணம் வீசும் சாந்தின் மணத்தை நுகர விரும்பினாளோ? இல்லை, கள்ளத்தனமாக அந்தக் கைகளை முத்தம் இடவே அப்படிச் செய்தாள். அப்போது அவள் உடல் மயிர்க் கூச்சலுற்றது. (6)

அதிர்ஷ்டக்காரியான மற்றொரு ஆரணங்கு, தன் கன்னத்தை உமதோடு சேர்த்து அணைத்து காதின் தோடுகள் கழன்று விழுவதைப் பற்றிக் கூடக் கவலைப் படாது இருந்தாள். உமது வாயினின்றும் ஒழுகிய எச்சில் தாம்பூலத்தின் இனிமையைச் சுவைத்து மகிழ்ந்தாள்.

அளப்பரிய அழகு படைத்த பூமகள் விளையாடும் மார்பன் ஆகிய உம்மோடு ஆடிக்களிப்பதற்கு இந்த ஆரணங்குகள் எத்தனை புண்ணியம் செய்தனரோ? (7)

பாடல் நின்றது; இசைக்கருவிகளின் இனிய முழக்கம் மெள்ள மெள்ளக் குறைந்தது. ஆனால் பிரம்மானந்தத்தில் மூழ்கிய கோபியர், இசைக்கருவிகள் இன்றியே சுழன்று சுழன்று நடனமாடினர். மேலாடை விழுந்ததையும் ஆடை குலைவுற்றதையும் அறியார். கூந்தல் சரிந்தது. விண்மீன் களும் தம் பாதைவிட்டு விலகின. என்ன சொல்லுவன்? (8)

நடனம் முடிவடைந்ததும் அகில உலகும் பிரமா னந்தத்தில் மூழ்கியது. கோபியரின் பண்டைய கர்மத்தால் தூண்டப்பட்டவரைப்போல, அவர்கள் எண்ணிக்கைக்கு ஏற்றவாறு உருவங்கள் வந்து அவர்களைக் களிப்பில் ஆழ்த்தினீர். காமவேள் நடன அரங்குகள் நிறைவு பெற்றது. விரகத்தால் துடிதுடித்த இளமங்கையர்கள் நடனத்தால் களைத்து உடல் உதிர்த்த வியர்வை முத்துக் களுடன், புதிய பொலிவோடு திகழ்ந்தனர். (9)

எண்ணற்ற பெண்களிடையே காதல் லீலை புரிந்து களைப்புற்ற கண்ணா! யமுனை நதியின் நீரில் குதித்து அவர்களுடன் நீர் விளையாட்டில் ஈடுபட்டீர். வனத்தி லிருந்து புறப்பட்டு வந்த பூங்காற்று அந்தப் பூவையரின் உள்ளத்தில் பரமானந்தத்தை நிறைத்தது. (10)

அழகுக் கருவூலமே! அந்த இரவுகளில், பற்றற்ற யோகியர் மட்டுமே அடையக்கூடிய பேரின்பத்தை அந்த அபலைப் பெண்கள் அடையுமாறு அருள் புரிந்தவனே அதன் மூலம் அவர்களை பிரமனுக்கும் சிவனுக்கும் இணையாக மாற்றியவனே! அழகு தவழ்ந்து விளையாடும் அணங்கனே! அடியார்க்கு மட்டும் எட்டக் கூடிய அருட் புனலே! அடியவனைக் கொடுமையான நோயினின்றும் காப்பாற்றி அருள் புரிய வேண்டுகிறேன். (11)

# தகசம் - 70

## சுதர்சன முக்தி

முன்னொரு நாள், கோபியருடன் விளையாடிக்கொண்டிருந்தபோது, கோகுலத்தில் உள்ளவர்கள், சிவனைத் தொழுவதற்காக அம்பிகா என்ற ஆரண்யத்திற்குச் சென்றனர். வழிபாடு முடிந்து ஆயர்கள் கண்ணயர்ந்த போது, ஒரு பெரிய நாகம் அவர்கள் தலைவனான நந்தனை விழுங்கத் தலைப்பட்டது. (1)

எரிந்து கொண்டிருக்கும் விறகுக் கட்டையால் அடித்து நொறுக்கியும் அந்தச் சர்ப்பம் தன் பிடியைத் தளர்த்தவில்லை. எனவே காப்பாற்று எனக் கதறிய இடையர்கள் தங்கள் காலடியில் வீழ்ந்தனர். தன் இரையை விழுங்குவதில் ஈடுபட்டிருந்த நாகத்தை நெருங்கி, உமது காலால் உதைத்தீர், உடனே தன் பாவங்களில் இருந்து விடுபட்ட அந்த பாம்பு, தனது பழைய வித்தியாதரனுடைய வடிவைப் பெற்றது. (2)

'சுதர்சனச் சக்கரத்தை சுழற்றுபவரே! நான் ஒரு கந்தர்வன்; என் பெயர் சுதர்சனன். முனிவர்களைப் பழித்த குற்றத்திற்காக மலைப்பாம்பாக மாறும்படி சபிக்கப் பட்டவன். தங்கள் பாதம்பட்டுப் பவித்திரம் அடைந்தவன் வானுலகம் அடைந்தான். ஆயர் அகமகிழ்ந்து வீடு திரும்பினர். (3)

ஒருநாள், பலராமனுடன் சேர்ந்து பருவமங்கையருடன் விளையாடிக் கொண்டிருந்த போது, குபேரனுடைய தூதுவனான சங்குசூடன் என்பவன், அந்த மங்கையரில் சிலரைக்கடத்திச் சென்று விட்டான். உடனே அவனைப் பின்தொடர்ந்து சென்று அவனைக் கொன்று அந்த மங்கையரைச் சிறை மீட்டீர். அவன் தலையில் அணிந்திருந்த பெரிய முத்தைத் தங்கள் தமையன் பலராமனுக்குப் பரிசாக அளித்தீர். (4)

பகலில் உம்மைப் பிரிந்திருக்கும் கோபியர், பிரிவுத்துயர் தாங்காது அழுது புலம்பி அரற்றினர். ஏனெனில் பகலில் உமது பருவத் தோழர்களுடன் கானகத்தில் ஆடி மகிழ்ந்தீர். தங்களது கவர்ச்சி, காமனையும் மனங்கவரக் கூடியதன்றோ! வானுலக மங்கையரையும் வசிகரிக்கக் கூடிய வனப்பு உம்முடையது. உமது முரளியின் கானத்தால் மனம் மயங்காதவர் யாரோ? (5)

கம்சனுடைய அடிமை ஒருவன் பெரிய சதிகாரன்; அவன் பெயர் அரிஷ்டன்; பயங்கரமான மாட்டின் வடிவெடுத்து, அச்சமூட்டும்படி ஒலியெழுப்பி உம்முன்னர் தோன்றினான். (6)

கண்டவர் நெஞ்சை அஞ்சி நடுங்கச் செய்யும் கோர வடிவுடன் அவன் வந்தான். மாட்டு மந்தை அந்த அசுரனைக் கண்டு நடுங்கிச் சிதறி ஓடின. வேதங்களின் விழுப்பொருளான உம்மை அவன் நெருங்கி வேத ஞானமே இல்லாத அம்மூடன் ஆர்ப்பரித்து நின்றான். (7)

தனது கொம்புகளால் தங்களைக் குத்திக்கிழிக்க முயன்ற அந்தக் கயவனை பிடித்து உமது காலின் கீழே போட்டு நசுக்கித் துவம்சம் செய்து விட்டீர், வானவர் அச்செயல் கண்டு மனம் பூரித்தனர். (8)

'பிரபுவே! அந்த அரக்கனைக் கொன்றதன் மூலம் தர்மத்தைக் காத்தவரே! தர்மத்தின் தலையாயவர்களை மகிழ்வுபடுத்தியவரே! என்று இந்திரன் முதலான தேவர்கள் மனங்களித்துத் துதிபாடினர். (9)

மடமை எனும் மாடுகளே! ஓடி ஒளிந்து கொள்ளுங்கள். மாடழிக்க வல்லான் இங்கே வந்திருக்கிறான் என்று ஆயர்கள் தம்முள்ளே உரையாடியபடி இல்லம் திரும்பினர். அத்தகைய குருவாயூரப்பனே! கொடிய நோயிலிருந்து என்னைக் காப்பாற்றி அருள்புரிய வேண்டுகிறேன். (10)

# தசகம் - 71

## கண்ணன் கேசவன் ஆகிறான்

கம்சனுடைய நெருங்கிய நண்பன் கேசி என்ற அரக்கன்; தன்னுடைய நோக்கத்தை நிறைவேற்றிக் கொள்வதில் அவன் எப்போதும் சோம்பலாக இருந்த தில்லை. மகா விஷ்ணுவின் அவதாரமான தாங்கள் சிந்து என்ற பிரதேசத்தில் இருந்து வரும் குதிரையை விரும்பு வீர்கள் என்று அறிந்த அரக்கன், ஒரு நாள் சிந்துஜா என்ற குதிரையின் வடிவில் உம்மை அணுகினான். (1)

குதிரை வடிவெடுத்து அவன் வந்தாலும் அவனது குரல் ஈரேழு லோகங்களையும் அஞ்சி நடுங்க வைக்கக் கூடியதாக இருந்தது. அந்தத் துன்மார்க்கன் ஆயர்பாடியிலே பல அழிவுகளைச் செய்த பின்னர் தங்களைத் தாக்க முனைந்தான். (2)

கருட வாகனத்தின் மீது கால் ஊன்றி இருப்பவரான உம்மை அந்தக் குதிரை மார்பில் எட்டி உதைத்தது. பிருகு முனிவர் தங்களை எட்டி உதைத்ததும் எத்தகைய விபத்திற்கும் உட்படாத கதையைக் கேட்டிருந்த அந்த அரக்கன், அதனுடைய நினைப்பில் அதாவது தனக்குத் தீங்கு எதுவும் உம்மால் நேராது என்ற நினைப்பில் உம்மை அப்படிக் காலால் எட்டி உதைத்தான். (3)

உயரத் தூக்கிய அவனுடைய கால்களின் உதையிலிருந்து சட்டென்று விலகிக் கொண்டு அவனைத் தொலை தூரத்தில் விழும்படி தூக்கி வீசினீர். அப்படிக் கீழே விழுந்ததால் அவன் மயக்கம் அடைந்தாலும், தன்னுடைய மயக்கம் தெளிந்தவுடன் மீண்டும் உங்களைத் தாக்கு வதற்காக வந்தான். (4)

அந்தக் குதிரையைக் கொன்று விடுவதற்கு முடிவு செய்த நீர், உமது கரங்களைப் பெரிய தடிபோல் உருமாற்றி அந்தக் குதிரையின் தொண்டைக்குள் இறக்கி அழுத்தினீர். தொண்டைக்குள் நுழைந்த கரங்கள் பெரிதாகிக் கொண்டே போனதால் அந்தக் குதிரை மூச்சுத் திணறிக் கீழே விழுந்து இறக்க அந்த அரக்கன் உம்மிடத்தில் ஐக்கியம் ஆனான். (5)

இது ஒரு புதுமாதிரியான அசுவமேத யாகமாகத் தோன்றியது. இதனைக் கண்ட தேவர்கள், அசுவமேதக் குதிரை உலகமெங்கும் வெற்றிகரமாக பவனி வந்த பின்னர் வெட்டித் துண்டாக்கப்பட்டு யாகத் தீயில் எறியப்படுவதற்கு மாறாக இந்தக் குதிரை வேறுவித மாகப் பலியிடப்பட்டதைக் கண்டு ஆனந்தம் அடைந் தனர். கேசி என்ற அரக்கனுடைய அழிவைக் கண்ட வானவர்கள் கேசியைக் கொன்றதால் உம்மைக் கேசவா என்ற பெயரிட்டு வணங்கினார்கள். (6)

நாரதமுனிவர், ஒருநாள், கம்சனிடத்தில் உம்மை வசு தேவரின் மகன் என்று எடுத்துரைத்தார். அதனால் வசு தேவரை உடனே கொல்ல முயன்ற கம்சனை நாரதர் தடுத்து நிறுத்தினார். அதனால் உம்மை அழிக்க கேசியைக் கம்சன் அனுப்பி வைத்தான். கொல்ல வந்தவன் கொல்லப் பட்டதை அறிந்த நாரதர் உம்மைச் சந்தித்துப் போற்றினார். (7)

ஒரு நாள், கானகத்தில் ஆயர்பாடிச் சிறுவர்களுடன் கண்ணாமூச்சி ஆட்டம் விளையாடிக் கொண்டிருந்தீர். அப்போது மாயையின் மகனான வியோமன், மிகவும் மந்திர சக்திகள் படைத்த அரக்கன் உம்மைக் கொல் வதற்காக மாறுவேடம் தாங்கி அங்கே வந்தான். (8)

திருடர்களும் காவலர்களும் என்ற விளையாட்டில், அந்த அரக்கன் திருடனாகக் கலந்து கொண்டான். விளை

யாட்டில் கலந்து கொண்டு, விளையாடிக் கொண்டிருந்த சிறுவர்களையும் பசுக்களையும் கடத்திச் சென்று மலைக் குகைகளில் அடைத்து விட்டு அவற்றின் வாயில்களைப் பெரிய பாறைகளினால் மூடிவிட்டான். அதனை அறிந்த வுடன் அவனுடைய அழிவுக்கு வழி செய்தீர். அழித்து விட்டீர். (9)

ஒப்பற்ற இறைவனே! குருவாயூரில் குடியிருக்கும் கோமகனே! உமது வெவ்வேறு விளையாட்டுக்களால் ஆயர்பாடி மக்களை மகிழ்ச்சிக் கடலில் ஆழ்த்தியவனே! என்னை இந்தக் கொடிய நோயிலிருந்து காப்பாற்றி அருள் புரிய வேண்டுகிறேன். (10)

## தசகம் - 72

### கோகுலத்திற்கு ஆக்ரூரன் வருகை

பாம்பணையில் பள்ளிகொள்ளும் பரந்தாமா! நாரதரிடம் இருந்து மகாவிஷ்ணுதான் கண்ணனாக கோகுலத்தில் குடிகொண்டிருப்பதை அறிந்த கம்சன் அச்சத்தால் மனம் நடுங்கி காந்தினியின் மகனாகிய அக்ரூரன் என்பவனை, ஒரு சிறப்பான வில்லுக்கு நடைபெறும் பூசனை விழாவில் கலந்து கொள்வதற்காக வருகை தருமாறு அழைப்பதற்காக அனுப்பி வைத்தான். (4)

அக்ரூரன் உமக்கு அடியவன் கம்சனிடத்தில் வைத்திருந்த அச்சத்தால் உம்மை நெருங்காமல் இருந்து வந்தான் அரசனே உம்மைச் சந்திப்பதற்கு ஒரு வாய்ப்பு, அளித்ததைக் கண்டு அவன் மெத்த மகிழ்ச்சி அடைந்தான். (2)

அக்ரூரன் அடியவர்களிலே மிகவும் ஆசீர்வதிக்கப் பட்டவன்; உம்மைத் தவிர வேறொன்றிலும் நாட்டம் இல்லாதவன்; உம்மைப் பற்றிய நினைவுகள் தனது நெஞ்சில் நடமாட அவன் ஒரு இரதத்தில் ஏறிப் புறப்பட்டு வந்தான். தங்கள் எதிரியான கம்சனுடைய ஆளாகத் தான் வருவதால் தங்களைச் சந்திப்பதற்கு எத்தகைய தடையும் ஏற்படக்கூடாது என்று நெஞ்சில் வேண்டிக் கொண்டே உமது இருப்பிடம் நோக்கி வந்தான். (3)

"பல்லாயிரம் நாமங்கள் பகன்று வேதங்கள் பூஜிக் கின்ற பிரமனைச் சந்திக்கும் பேறு எனக்குக் கிட்டுமா? அவரைத் தொட்டுத் தழுவ முடியுமா? என்னோடு அவர் உரையாடுவாரா? கோகுலத்தின் எந்தப் பகுதியில் சென்று அவரைச் சந்திப்பேன்" என்ற எண்ணங்கள் அலை மோத அவன் பயணம் செய்து வந்தான். அவன் மனம் முழுவதிலும் நீரே நிறைந்திருந்தீர். (4)

தங்களது பாதம்பட்டுப் பவித்திரம் அடைந்ததும், பிரமனும் சிவனும் பெருமைப்படத்தக்கதும் ஆகிய பிருந்தாவனத்துக்குள் நுழைந்ததும், அவனுடைய உள்ளத்தில் எல்லையில்லா ஆனந்தம் எதிரொலித்தது. ஆகா! எத்தகைய ஆன்மீக உணர்ச்சிகள் அவன் மனதில் எழுந்தன? (5)

நீங்கள் ஓடி விளையாடிய இடங்கள் ஒவ்வொன்றை யும் தன் உடலின் எட்டு அங்கங்களும் பூமியில் படிய விழுந்து வணங்கினான். தங்கள் பாதம் பட்ட புழுதி மண்ணில் படுத்துப் புரண்டு ஆனந்தித்தான். அவனுடைய நிலையை எடுத்துரைக்க வார்த்தை இல்லை. ஆனால் ஒன்று மட்டும் உண்மை அக்ரூரனைப் போன்ற பக்தி பூண்டவர்களைக் காண்பது அரிதினும் அரிது! (6)

தங்கள் புகழ்பாடிக் கொண்டிருந்த ஆயமக்களின் இல்லங்களைக் கடந்து, அக்ரூரன், மாலைப்பொழுதில்

உங்களது இல்லத்தை அடைந்தான். ஆன்மீக நிறைவு பெற்ற அவற்றின் சுழலில் அகப்பட்ட அந்த சுழற்சியில் ஈர்க்கப்பட்டு உம்மை அடைந்தான் என்று உரைப்பதே சாலப்பொருத்தமாகும். (7)

யாண்டும் நிறைந்தவரே! பசுக்களிடம் இருந்து பால் கறக்கும் காட்சியை தங்கள் சகோதரர் பலராமனுடன் சேர்ந்து தாங்கள் கவனித்துக் கொண்டிருப்பதை அக்ரூரன் கண்டான். அக்ரூரனைப் போன்ற ஒரு பெரிய அடியவரின் வருகைக்காக தாங்கள் காத்திருப்பது போலத் தோன்றியது. அடியவர் உள்ளத்தில் நிறைந்து கரை புரளும் பிரமானந்தத்தின் மறுவடிவாகவே காட்சியளித்தீர். (8)

கவர்ச்சிமிக்க புன்முறுவல் பூத்த முகங்களுடன் தங்களையும் பலராமரையும் கண்டான். நீராடிப் புது மணத்துடன் பட்டுப் பீதாம்பரம் அணிந்து, ஆபரணங்கள் அணிந்து புது வனப்போடு பொலிவதைக் கண்டான். (9)

அடியவரில் சிறந்தவனான அக்ரூரன், தங்களைக் கண்டவுடன், தொலை தூரத்திலேயே தன்னுடைய தேரை நிறுத்திவிட்டு தரையில் வீழ்ந்த அவன் உள்ளத்தை ஆனந்தத்தால் குளிர்விக்கும் வகையில் வாரியெடுத்து மார்போடணைத்துத் தழுவிக் கொண்டீர். நலமா என்று உசாவிய பின்னர், அவனைக் கையைப் பிடித்து அழைத்து கொண்டு, பலராமனுடன் இல்லத்திற்கு சென்றீர். (10)

யதுகுலத்தைச் சேர்ந்தவனுக்கு உரிய மரியாதைகள் அனைத்தையும் அளித்த பின்னர், அவன் வந்த காரணத்தை நந்தகோபனுடன் சேர்ந்து செவிமடுத்தீர். அக்ரூரன் மூலம் கம்சன் விடுவித்துள்ள அழைப்பைப் பற்றி மற்ற ஆயப்பாடி மக்களுக்கு எடுத்துக் கூறினீர். அந்த இரவு முழுவதும் பல்வேறு விஷயங்களைப் பற்றி அவனுடன் உரையாடிக் களித்தீர். (11)

அந்த இரவு நீங்கள் கோபியரைக் காணச் செல்ல வில்லை. அது குறித்து "அவர் ஏன் நம்மைக் காண வர வில்லை. சந்திரா, சந்திரபாகை, ராதை அல்லது மித்திர விந்தை என்ற தனக்குப் பிரியமானவருடைய இல்லத்தி லேயே இரவு முழுவது தங்கி விட்டாரோ" என்று கோபியர்கள் சந்தேகத்துடன் பேசிக் கொண்டனர். அத்தகைய குருவாயூரப்பனே! அடியேனைக் காப்பாற்றி அருள் புரிய வேண்டுகிறேன். (12)

# தசகம் - 73

## மதுரைப் பயணம்

அக்ரூரனுடன், மதுரைக்குப் புறப்பட்டுச் செல்வதை அறிந்த கோபியர் மனதில் பொங்கும் துயரத்தையும் கவலையையும் அடக்க முடியாமல் ஒன்று கூடினர். தங்கள் விதியை எண்ணிக் கலங்கினர். (1)

நந்தகுமாரன் கருணையின் உறைவிடம் என்று சொல்வார்களே! எப்படி அவர் எங்களை மறந்து அவனையே ஊனுடல் உயிர் என்று கருதி வாழும் எங்களைத் துறந்து போகிறார்? இதுதான் விதி நமக்களிக்கும் அதிரடியோ என்று அஞ்சி வருந்தினர். உள்ளத்தை உம்மீது வைத்து மனம் உருகி அழுது அரற்றினர். (2)

இரவின் கடைசி ஜாமம் நெருங்கியது. நந்தனுடனும் ஆயர்குலத்தோன்றல்கள் பலருடனும் புறப்படத் தயா ராகி விட்டீர். அதற்கு முன் கோபியரின் துயரைத் தீர்க்க உமது தோழன் ஒருவனையும் அனுப்பி வைத்தீர். (3)

"நான் கூடிய விரைவில் திரும்பி விடுவேன். என் னோடு உல்லாசமாக பொழுது போக்கும் வாய்ப்பு

உங்களுக்கு விரைவில் கிடைக்கும். அப்போது உங்களை அமரத்துவமான ஆனந்தத்தில் மூழ்கடிப்பேன்'' என்று அந்த மனம் நொந்த மங்கையருக்கு ஆறுதல் கூறினீர். (4)

நெடுந்தூரம் போகும் வரையில், பாசத்தால் உம்மைப் பிணித்த அந்த மங்கையரின் பார்வை உம்மை விட்டு விலக வில்லை. கடைக்கண்ணால் வருத்தமுற அவர்களைப் பார்த்த வண்ணம், அக்ரூரனுடைய தேரில் உமது அன்புச் சகோதரர் பலராமனுடன் ஏறி அமர்ந்து புறப்பட்டுச் சென்றீர். (5)

ஆயர்களின் எண்ணற்ற தேர்கள் உம்மைப் பின் தொடர்ந்தன. ஆயமங்கையரின் எண்ணற்ற இதயங்களும் பின்தொடர்ந்தன. கானகத்து மரங்களையும் விலங்கு களையும் கணநேரத்தில் பிரிந்து பயணம் செய்தீர். தங்கள் புறப்பாட்டால் நிலைக்குலைந்து மனம் நடுங்கி அல்லல்பட்டு ஆற்றாது அரற்றிய சோகக் கதைகள் எத்தனை. யமுனை நதிக்கரையைச் சென்றடைந்தீர். (6)

காந்தினியின் மகனான அக்ரூரன், தன் காலைக்கடன் முடிக்க யமுனையில் நீராடியபோது, ஆற்றுப்பெருக் கிடையே உமது ஆனந்த தரிசனம் கண்டான். அதே நேரத்தில் கரையில் இருந்த தேரிலும் ஆரோகணித் திருந்தீர். எத்தகைய விந்தையிது? ஒரே நேரத்தில் இரண்டு இடத்தில் எப்படிக் காட்சி தரமுடியும்? எங்கும் நிறைந்த வரே! உம்மை ஒவ்வொரு இடத்திலும் காணக்கிடைக்கும் போது இதிலே வியப்பென்ன? விந்தையென்ன? (7)

மீண்டும் நீரிலே மூழ்கினான். உத்தம புருஷராகிய உம்மை பாம்புப்படுக்கையில் அனந்தசயனத்தில் வீற்றிருக் கும் அலங்காரக் காட்சியைக் கண்டான். சங்கு, சக்கரம், கதாயுதம், தாமரை ஆகியவை உமது கரங்களை அலங்

கரித்தன. கந்தர்வரும் கின்னரரும், கிம்புருடரும், தேவர்களும் தேவதையரும் உம்மை சுற்றி வழிபட்டு நின்றனர். (8)

சர்வோத்தமனாகிய உமது அளப்பரிய ஆனந்தத்தில் திளைத்தான். தோத்திரப் பாடல்கள் பல பாடிப் போற்றினான். சகுணப் பிரமமாகவும் நிர்க்குணப் பிரமமாகவும் உம்மைக் கண்டு ஆனந்தித்தான். கண்ணில் தெரிந்த காட்சி மறைந்த பின்னரும்கூட, அவன் அனுபவித்த அளவில்லாத ஆனந்தம் அவன் இதயத்திலே நிரந்தரமாகக் குடிகொண்டிருந்தது. மயிர்க் கூச்சலெடுத்த உடலோடு அவன் உம்மை நெருங்கி வந்தான். (6)

அவனைப் பார்த்து ''தண்ணீர் அவ்வளவு குளிர்ச்சியாகவோ இருக்கிறது? உனது ரோமங்கள் சிலிர்த்து நிற்கின்றனவே'' என்று ஒன்றும் அறியாதவர்போல அவனைப் பார்த்துக் கேட்டீர். ஓ குருவாயூரப்பா! எல்லையில்லா ஆனந்தத்தில் மூழ்கியிருந்தவனால் உமது கேள்விக்கு ஒரு பதிலும் கூற முடியவில்லை. என்னைக் காப்பாற்றி அருள் புரிய வேண்டுகிறேன். (10

# தசகம் - 74

## மதுரைக்குள் புகுதல்

நண்பகலில் மதுரையை நண்ணியதும், ஊருக்கு வெளியே இருந்த ஒரு சிறு வனத்தில் உணவுண்டு மகிழ்ந்தீர். உமது தோழர்களும் உடன் இருந்தனர். பின்னர் நகர் வலம் வர முடிவு செய்து நகரத்தின் தலைவாயிலைச் சென்றடைந்தீர். மதுரை நகரத்து மக்கள் செய்த மாபெரும் புண்ணியத்தால், உம்மைப் பற்றிக் கேள்விப்பட்டு மட்டும் இருந்தவர்கள், உம்மைக் காணும் பேறு இதுகாறும் பெறாதவர்கள், ஆண்களும் பெண்களுமாக ஆயிரம் ஆயிரமாக

கட்டி இழுக்கப்பட்டு வந்தவர்களைப்போல அந்தத் தலை வாயிலில் கூடிக் குவிந்தனர். (1)

உம்மைக் காணவந்த மெல்லியலார், பலவகைகளிலும் உம்மை ஒத்திருந்தனர். பாதங்களில் பரவியிருந்த செவ்வரிச் சுடர் அந்த மங்கையரின் வதனத்திலும் நாணத்தால் குடி கொண்டிருந்தது. நீலமேகச் யாமள வண்ணம் உன் மேனி யில் அவர்கள் உடலில் அதே வண்ணத்தில் பூரித்து எழுந்த மதுக்கலசங்கள். விழிகள் ஆடி அசைந்ததைப்போலவே அவர்கள் மனதிலும் ஆசைகள் ஓடி விளையாடின. மலர் மாலை சூழ்ந்த நின் மார்பை அவர்களும் தம் உடலால் அலங்கரிக்க ஆசைப்பட்டனர். வதனத்தில் பூத்த கள்ள மில்லாப் புன்முறுவல் போன்ற அவர்கள் உடலிலும் உள்ளத்திலும் கள்ளமில்லாத தூய்மை படைத்தவர்கள். மயில் பீலி அணிந்த நின் கொண்டையைப் போலவே அந்தக் கோதையர் குழலிலும் எண்ணற்ற ஆபரணங்கள். (2)

கடைக்கண் பார்வையால் காரிகையரை களிப்படையச் செய்த வண்ணம், மக்கள் கூட்டத்தை வியப்பால் மயங்கச் செய்த வண்ணம் வந்த நீர், வழியில் எதிர்ப்பட்ட ஒரு வண்ணானிடம் நல்லாடை கேட்டு நின்றீர். அவனோ மாடுமேய்க்கும் இடையனுக்கு புத்தாடை அளிப்பார் என்று கேலி பேசினார். அவன் சிரத்தைக் கொய்து அவனுக்கு உடனே முக்தி அளித்தீர். (3)

அந்த நேரத்தில் தையல்காரன் ஒருவன் உமக்கு உகந்த உடைகளை கொண்டு வந்து சமர்ப்பித்தான். ஆகா! என்னே உம் கருணை அவனுக்கு உடனே உமது வைகுந் தத்தில் இடம் அளித்து அருள் பாலித்தீர். ஆன்மாக்களின் பக்தியை எடை போடுவதில் உம்மைத் தவிர வல்லவர் எவரேனும் உண்டோ? பூக்காரன் ஒருவன் வண்ண மலர் மாலைகளும்; பூச்செண்டுகளும் மனமுவந்து அணித்து உம்மைத் தோத்தரித்துப் பாடிய அவனுக்கு மறுகணமே

அவனுடைய பக்திக்கு அடிபணிந்து, அடியவனாக பெற்ற தோடல்லாமல், அளப்பரிய செல்வத்தையும் ஈந்து மகிழ் வித்தீர். (4)

அழகு முகம் படைத்திருந்தாலும் கூன் முதுகுடைய வளான மங்கை ஒருத்தியை வழியில் கண்டீர். சந்தனம் புனுகு அளித்து உம்மை அபிஷேகித்தாள். அவள் உம்மீது கொண்ட அளவற்ற காதலை அங்கீகரித்து, அவள் உள்ளத் தில் கூன் இல்லாதபோது உடலில் மட்டும் அப்படி இருப்பது நியாயமில்லை என்று கருதி, கூன் நீக்கி அழ குருவம் பெறுவதற்கு அருள் செய்தீர். கைதொட்டு இழுத்து கவின் படிவம் செய்த மாயவனே! உம் புகழ் ஓங்குக! ஒப்பற்ற அழகு படைத்த அவளைக் கண்டு மதுரா நகரமே அதிசயத்தது. (5)

எங்கும் எதிலும் நிறைந்துள்ளவரே! பாவம் செய்யாத மானிடர், பவித்திரமான உள்ளம் படைத்தவர், ஒவ்வொரு வரும் வழியெல்லாம் உமது பூ, மாலை, தாம்பூலம் மற்றும் தங்களுக்குக் கிடைத்த பொருள் ஒவ்வொன்றையும் உமக்குச் சமர்ப்பித்து மகிழ்ந்தனர். அந்தோ! நான் பாவி யிலும் பெரும்பாவி; பரமனே! அந்தப் பாதை ஓரத்தில் நின்று பக்தியுடன் கரம் கூப்பித் தொழும் பாக்கியம் எனக்குக் கிட்டவில்லை. மலரெடுத்து உனை வணங்கும் வாய்ப்புக் கிடைக்கவில்லை. அதனால்தான் இந்தக் கொடிய துன்பத்தில் ஆட்பட்டு அல்லல் படுகிறேன். (6)

பின்னர் வருகிறேன் என்று உறுதி கூறிப் புனுகு சந்தனம் அளித்தவளைப் புறத்தே போக விட்டீர். அவளும் நகரத்தில் நீங்கள் செல்லும் அழகைத் தன் கண்ணுக் கெட்டிய தூரம் வரை காதலோடு பார்த்து நின்றாள். ஆனால் ஊருக்குள்ளே நுழைவதற்கு முன்னரே உமது புகழ் மணம் பரப்பி உமக்கு முன்னதாக வழி ஒதுக்கி வெகுதூரம் முன்னேறிவிட்டது. உமது தாயார் தேவகி கொங்கை பூரித்து உமது வரவை எதிர்நோக்கிப் பால் சுரக்கக் காத் திருந்தது. (7)

விழாக்கோலம் பூண்ட நகருக்குள் புகுந்ததும் அதன் காவலர் உட்பட அங்கிருந்த அத்தனை மக்களும் பாதையில் இருபுறமும் ஒதுங்கி இருந்து வழிபட்டனர். ஆனந்தத் திருவுருவைக்கண்டு மனம் மயங்கி அதிசயித்துப் பேச்சற்று மூச்சற்று செயலற்று அவர்கள் நின்றனர். மலர்கள் கட்டப்பட்டு வழிபாட்டுக்கென வைக்கப்பட்டிருந்த வில், இருந்த மண்டபத்தை அணுகினீர். அதன் பக்கத்தில் இருந்தவர் தடுக்க நினைக்கும் முன் அந்தப் பெரிய வில்லை எடுத்து நாணேற்றி முறித்து விட்டீர். (8)

உடைந்த வில் எழுப்பிய ஓங்கார ஒலி கேட்டு தேவர்கள், கம்சன் அழிவுக்கு எதிரொலி என்று இறுமாந்திருந்தனர். அந்த ஓசைக்கேட்டுக் கம்சனின் உடல் துடித்துத் துவண்டது. அத்துடன் உடைந்த வில்லால் உம்மால் அடிபட்ட காவலர்களின் அழுகுரலும் எதிரொலித்தது. (9)

உற்றவர்க்கும் மற்றவர்க்கும் உமது பெருமையை உணர்த்திய ஆண்டவனே! அடியவர் உள்ளத்தில் பக்தியையும் கொடியவர் உள்ளத்தில் பயங்கரமான அச்சத்தையும் ஒரே நேரத்தில் உண்டு பண்ணக்கூடிய உத்தமரே, நகரத்தின் அழகிய காட்சிகளைப் பார்வையிட்டு மாலை செய்யும் நேரத்தில் நகரத்திற்கு வெளியே உமக்காக அமைந்திருந்த பாசறைக்கு வந்து சேர்ந்தீர். குருவாயூர்க் கோமானே! ராதையின் பிரிவால் உமக்கு ஏற்பட்ட துயரத்தை உமது அருந்தோழன் ஸ்ரீராமனிடம் உரைத்தபடி உமது அவதாரத்தின் நோக்கத்தை முடிக்க வேண்டிய நேரம் நெருங்கிவிட்டது என்று அறிந்தவண்ணம் உறங்கியவனே! என்னைக் காப்பாற்றி அருள்புரிய வேண்டுகிறேன் (10)

# தசகம் - 75

## கம்சனுக்கு முக்தியளித்தல்

அதிகாலைப் பொழுதில், அச்சமுற்ற கம்சனின் ஆணைப்படி முரசறைந்து மல்யுத்தப்போட்டிகளை அறிவித்தனர். அதனைக் காண்பதற்கு நந்தகோபனும் மற்ற தலைவர்களும் முன்னணியில் வீற்றிருக்க, மேடையில் ஏறிக் காட்சி தந்தான் கம்சன்; நீரும் அலங்கார ஆடை பூண்டு பலராமருடனும் உமது மற்ற தோழர்களுடனும் களத்திற்கு வந்தடைந்தீர். அங்கே குவலய பீடம் என்ற பெரிய யானை உம்மை வழிமறித்துத் தடுத்து நின்றது. கம்சனின் ஆணைப்படி உம்மைத் தாக்கி அழிப்பதற்காக அந்த யானை அங்கே வந்திருந்தது. (1)

வழியை விட்டு விலகிச் செல்லுமாறு பணிக்கப்பட்ட அந்த யானை பின் மாவுத்தன் கோபத்துடனும் குரோதத்துடனும், விரைந்து பாய்ந்து உம்மைத் தாக்குமாறு அந்த மத யானைக்கு ஆணையிட்டான். துதிக்கையால் அந்த யானை உம்மைச் சுற்றி வளைத்துக் கொண்டது. ஆனால் விரைந்து உம்மை விடுவித்துக் கொண்டு, பலம் கொண்ட மட்டும் ஓங்கி அதன் மத்தகத்தில் ஒரு குத்து விட்டீர். கோபியரின் கொங்கைகளோடு போட்டியிடும் பூரித்து நின்ற அந்த மதயானையின் மத்தகத்தைச் சாடியபடி பின்னர், அதன் கால்களைப் பற்றித் தொங்கியபடி சிரித்த முகத்துடன் சிங்காரமாக வெளியே வந்தீர். (2)

யானையின் பிடிக்கு அருகில் இருந்தாலும் அதனுடைய பிடிக்கு அகப்படாமல், அதனை நோக்கிப் பாய்ந்து வந்து கால் தடுமாறிக் கீழே விழுவது போல் பாவனை செய்தீர். உடனே அந்த யானை உம்மைத் தாக்கத் தலைப்பட்டது. அந்த யானையின் தந்தங்களை வலிய கரங்களால் பற்றி வேரோடு பிடுங்கி வெளியே எறிந்தீர். அதனுள்ளே

புதைந்து கிடைத்த விலைமதிப்பற்ற முத்துக்களை உமது நண்பர் ஸ்ரீதாமரின் கரத்தில் தந்து அவைகளைக் கொண்டு ராதைக்கு அழகியமாலை செய்துதருமாறு பணித்தீர். (3)

ஆண்டவரே! தாங்களும் பலராமனும், யானையின் தந்தத்தைத் தோளில் சுமந்தபடி களத்தில் புகுந்ததும் அதனை நேரில்கண்டமக்கள் ஆர்ப்பரித்து, "நந்தகோபன் மகாபாக்கியசாலி. இல்லை இல்லை ஆயர்குல பெண்களே புண்ணியம் செய்தவர்கள். அவர்களும் அல்ல அவனை வளர்த்த யசோதையே எல்லோரையும் விடப் பெரிய பாக்கியசாலி, ஆனால் அவர்கள் அனைவரைக் காட்டிலும் இந்த நகரத்து மாந்தராகிய நாம்தான் மாதவம் செய்தவர்கள் ஏனெனில் மாவீரச் செயலைப் பார்க்கின்றபேறு எவருக்குக் கிட்டும் என்று பலவாறு கூறி களிப்போடு முழங்கினர். (4)

ஆனால் அந்த நகர மாந்தர் எவருக்கும் ஆயர் குடிசையில் அவதரித்த நீர், பரப்பிரமம் என்று உண்மை சிறிதும் தெரியாது. சச்சிதானந்தத்தின் மறு உருவம் என்பதை அறியார். அவர் பூர்வபலன் கனிந்து, ஒரு சிலர் உம்மைப் பிரமசொரூபன் என்று உணர்ந்தனர். மனிதருக்கு அப்பாற்பட்ட மகத்தான செயல் பற்றித் துதி பாடினர். (5)

களத்தில் புகுந்த உமக்கு, கம்சனின் ஆணையை ஏற்று சாணூரன் என்ற மாமல்லனும் பலராமருக்கு முஷ்டிகன் என்ற மாமல்லனும் சவாலுக்கு அழைத்தனர். அவர்களுடைய பயங்கரமான மோதல்கள் நிறைந்த தாக்குதல்களுடன் மல்யுத்தம் துவங்கியது. மரணத்தைத் தழுவுவதற்கு முன்பே, சாணூரனுக்கு உலகப் பிடிகளிலிருந்து விடுதலை கிட்டியது. (6)

அந்தோ பரிதாபம்! என்ன கொடூரம்! அறியாச் சிறுவர் ஒரு புறம் அனுபவம் வாய்ந்த கைதேர்ந்த

மல்லர்கள் மறுபுறம்! இது எப்படிச் சரியான போட்டியாகும் நான் இந்த அநீதியைப் பார்த்துக் கொண்டு இருக்கக் கூடாது. உடனே இந்த இடத்திலிருந்து வெளியேற வேண்டும் என்று நகர மாந்தர் பலர் கூக்குரலிட்டனர். ஆனால் அவர்கள் பேசி முடிப்பதற்குள் சாணூரனைத் தூக்கி எறிந்து சுற்றிச் சுழற்றிப் பூமியிலே வீழ்த்தி மரணம் அடையச் செய்தீர். அதே நேரத்தில் முஷ்டிகனும் பலராமனின் தாக்குதலுக்குத் தாக்குப் பிடிக்காமல் கீழே விழுந்து இறந்து போனான். மற்ற மல்லர்கள் குதிகால் பிடரியில் பட ஓடி மறைந்தனர். (7)

அடுத்து என்ன செய்வது என்ற அறியாது திகைத்து மயங்கிய கம்சன், குழப்பத்துடன் கலவரத்துடனும், முரசங்களையும் எக்காளங்களையும் முழக்கக் கூடாது என்று உத்தரவிட்டான். தன்னுடைய ஆட்களை அனுப்பி உமது பெற்றோர்களைக் கொன்று விட்டு எங்கும்நிறைந்தவரான உம்மை கண்ணுக்குத் தெரியாத தூரத்தில் கொண்டு போய் விட்டு வரும்படி ஏவினான். கம்சனின் கொடூரமான இந்த உத்தரவைக் கேட்டுக் கொதித்து எழுந்தீர், தன் அரண்மனையின் உப்பரிகையில் அரியாசனத்தில் உயரே வீற்றிருந்து கம்சனை நோக்கித் தாவினீர். கருடனைப்போல் இழுத்தீர். வாளெடுத்துச் சுழற்றியும் தடுக்க முடியவில்லை. (8)

உயரத்திலிருந்து அவனுடைய அங்கங்கள் சிதறி விழும்படி பூமியின் மீது வீசி எழுந்தீர். அதே உயரத்திலிருந்து அவனது உடல்மேல் தாவிக் குதித்தீர் வானத்தில் இருந்து மகிழ்வுற்ற தேவர்கள் பூமாரி பொழிந்தனர். அதிசயத்திலும் பெரிய அதிசயம் என்ன தெரியுமா? உம்மை வெறுத்து ஒதுக்கியிருந்தாலும் கம்சனின் கொடிய மனம் சர்வ நேரமும் உமது சிந்தனையிலேயே ஆழ்ந்திருந்தது. அதனால் அவன் உம்மைச் சேர்ந்தான். முக்தி பெற்றான். உச்சத்தின் உச்சமே! உயர்ந்தவரே! கம்சன் பூர்வப்

பிறப்பில் காலநேமி என்ற அரக்கனாக இருந்தவன். அப்போது உம்மால் கொல்லப் பட்டவன், மீண்டும் கம்சனாகப் பிறந்து உம்மைப்பற்றிய அச்சத்தாலும் அவதூறாலும் உம்மையே சரண் அடைந்து விட்டான். (9)

அடுத்துக் கம்சனின் எட்டுச் சகோதரர்களும் கொல்லப் பட்டனர். உமது பெற்றோரான வாசுதேவருக்கும் தேவகிக்கும் அஞ்சலி செய்தீர். யதுகுலத்தைச் சார்ந்த உக்கிரசேனன் என்பவனுக்கு முடிசூட்டினீர். அதன்மூலம் யாதவகுலத்திலிருந்து கம்சனால் அபகரிக்கப்பட்ட அரசாட்சி மீண்டும் யாதவ குலத்தினரே அடைந்து அகம் மகிழ்ந்தனர். குருவாயூர்க் கோமானே! பின்னர் பிருகஸ்பதியால் நீதி நெறிமுறைகள் கற்பிக்கப்பட்ட உத்தவர் உமது நண்பராகவும் பெற்று, நகரத்தில் மகிழ்ச்சியோடு இருந்தீர்— என்னைக் காப்பாற்றிக் கருணைக்காட்டி அருள் புரிய வேண்டுகிறேன். (10)

# தசகம் - 76

## கோபியருக்கு சேதி அனுப்புதல்

அதன் பிறகு, பலராமனுடன் சாந்திபனி முனிவரிடம் சென்று 64 நாட்களில் பலவகையான கல்விகளைக் கற்றுக் கொண்டீர். முடிவில் குருதட்சணையாக அவரது இறந்த மகனை யமலோகத்திலிருந்து மீட்டு உயிர்பிழைக்கச் செய்தீர். சங்கை முழங்கியபடி நகரத்துக்குத் திரும்பி வந்தீர். தங்கள் குருவின் மகனை மீட்பதற்காகச் சென்ற போது கைப்பற்றிய பாஞ்சசன்யம் உமது சங்காகும். (1)

தங்களது நினைவால் நிரந்தரம் துயரில் உழன்ற நினைவு பூண்டு, உம்மைப் பற்றிய முதல் காதலில் மூழ்கி வேதனையுற்ற அவர்கள் மீது கருணை கொண்டு, உமது நண்பர் உத்தவரை ஒரு சேதி கொண்டு போகும்படி

கூறினீர். அவர்கள் மேல் கொண்ட அடக்க முடியாத காதலை உலகத்திலே இதுவரை இல்லாத சொற்கள் மூலமாக உமது நண்பருக்கு எடுத்துக்காட்ட விரும்பினீர். (2)

தாங்கள் வசித்து வந்திருந்ததால் என்றும் செழிப்போடு விளங்கிவரும் கோகுலத்திற்கு உத்தவர் வந்தார். அப்பொழுது மாலைப்பொழுது உம்மைப்பற்றிய செய்திகளைக் கூறி நந்தகோபரையும் யசோதையையும் மகிழ்வித்தார். காலையில், அலங்கரிக்கப்பட்ட இரதத்தைக் கொண்ட கோபியா ஆவலுடன் வந்து பார்க்க உத்தவர் வந்த சேதி அறிந்து தங்கள் வேலைகளை விட்டு அவரைச் சந்திக்க ஓடி வந்தனர். (3)

தங்களைப் போலவே ஆடை அலங்காரங்களுடன் இருந்த உத்தவர் மீண்டும் மீண்டும் அவர்கள் உள்ளத்தில் உம்மைப்பற்றிய பழைய நினைவுகள் யாவும் கிளர்ந்தெழச் செய்தார். ஈடிணையற்ற உம் காதல் லீலைகளை எண்ணிச் சிலநேரம் பேச்சற்று நின்றனர். பேச்சு வந்ததும், விருந்தினருக்கு அதுவும் மதுரா நகரிலிருந்து அரச தூதுவராக வந்திருக்கும் உத்தவருக்கும் தமக்கும் உள்ள பேதத்தை உணராமல் தட்டுத்தடுமாறி மயங்கித் தயங்கி அவரிடம் கேள்வி கேட்கத் தலைப்பட்டனர். (4)

இரக்கமற்ற கண்ணன், தன் தந்தையையும் தாயையும் மட்டும் காணவே உங்களை அனுப்பியிருக்கிறார், எங்களை பற்றிய எண்ணம் ஒரு சிறிதும் இல்லையே. நகரத்தில் வாழ்கின்ற நாகரிகம் தெரிந்த நங்கையரால் கவரப்பட்டு இப்போது எங்கே தங்கியிருக்கிறார் எங்கள் காதலைக் கொண்டவர்? ஹரி! ஹரி! அமரப் பிரபுவே! எங்களைக் காப்பாற்று. உமது அன்புத் தழுவல்களையும் அதர பானங்களையும் எப்படி மறக்க முடியும். மகிழ்விக்கும் மனோகரமான விளையாட்டுக்களையும் வேடிக்கைப் பேச்சுக்களையும் யாரால் மறக்க முடியும்?'' என்று கூவினர். (5)

''கருணைக்கடலே! ஒருமுறையாவது உமது உருவத்தைக் காட்டும். ராசலீலையில் வியர்த்திருக்கும் உமது உடலை ஒருமுறையாவது ஆரத்தழுவி ஆனந்தம் அடைவோம். கலைந்த கேசத்தைக் கண்டு மகிழ்வோம் உலகங்களை மயக்கி ஆள்பவனே!'' என்று உம்மேல் அளவில்லா அன்பு பூண்ட கோபியர் காதல் மயக்கத்தில் அரற்றினர். (6)

ஆன்மீகத் தத்துவம் ஆழப் பொதிந்துள்ள உமது சேதியை உத்தவர் அவர்களுக்கு எடுத்துரைத்தான். தங்கள் நிலை எண்ணிக்கலங்கிப் பேச்சுத் தடுமாறி விம்மல்களுக்கும் விசும்பல்களுக்கும் இடையே பேச்சுதிர்த்த கோபியருக்கு ஆறுதல் கூறினார். அவர்கள் ஆத்துமத்தின் ஆத்துமமாக நீர் குடியிருப்பதை அனுபவித்த கோபியர், நிம்மதி அடைந்தனர். உமது அலகிலா விளையாட்டுக்களைப்பற்றி அவர்களுடன் உரையாடிச் சில நாட்கள்ளக் கழித்தார். (7)

உமது லீலைகளைப் பாட்டாக இசைத்தவாறு நாள் தோறும் அந்த நங்கையர் தமது அலுவல்களை செய்து வந்தனர். எப்போதும் தங்களுக்குள்ளே உம்மைப்பற்றியே பேசிக்கொண்டிருந்தனர். உறக்கத்திலும் உம்மைப்பற்றி உளறினர். உம்மைத் தம்மோடு இணைத்து ஒவ்வொரு அசைவிலும் கண்டனர். அந்தக் காட்சி உமது அடியவர்களில் பெரியவரான உத்தவரையும் ஆச்சர்யத்தில் ஆழ்த்தியது. (8)

'இது எனது ராதைக்கு மிகவும் பிரியமானது என்று நண்பர் எந்நேரமும் என்னுடன் உரையாடிக் கொண்டிருப்பார். உணர்ச்சிமிக்க அந்த மங்கையை போல் ஏன் மவுனமாக இருக்கிறாய்? என்று என்னைக் கேட்பார். இப்படித்தான் தனிமையில் ராதையே உன்னைப் பற்றிக் கண்ணன் என்னிடம் பேசிக்கொண்டிருப்பார். இவ்விதமான உரையாடல்களை எடுத்துக்காட்டி அந்த ஆரணங்குகளின் இதயத்தை உத்தவர் களிப்பில் ஆழ்த்தினார். (9)

''நான் சீக்கிரம் திரும்ப வேண்டும். கடமை என்னை இங்கே கட்டிப்பிணித்திருக்கிறது. வருந்தாதே. பிரிவுதான் காதலைப் பலப்படுத்தும். விரைவில் பிரமானந்தத்தை அடைவாய். அப்போது பிரிவும் சேர்க்கையும் ஒரே மாதிரியான ஆனந்தத்தை அளிக்கும் இத்தகைய சேதிகளைக் கூறிக் கோபியரை உத்தவர் சமாதானப்படுத்தினார் (10)

இதற்கு இணையான தெய்வீகக் காதலை உலகங்கள் எவற்றிலும் எவரும் கண்டதில்லை. வேதங்களை ஓதுவதாலும் விரதங்களைக் காப்பதாலும் யாது பயன்? அவை பற்றி எதுவும் அறியாமலேயே இந்தக் கோபியர் பக்தியின் உச்சக் கட்டத்தை எட்டி உமது அன்புக்குப் பாத்திரமாகி விட்டனர். அவற்றை முழுக்கக் கற்று முறையோடிப் பவர்களில் எத்தனைபேர் அந்தக் கட்டத்தை எட்டியிருக்கின்றனர். எனவே அந்தக் கோபியரே நமது வணக்கத்துரியவர்கள். குருவாயூரில் குடிகொண்டுள்ள கோவிந்தா! மேற்கண்ட சொற்களைக் கூறிக் கோபியரிடம் தாம் கொண்ட மதிப்பை உணர்த்திய உத்தவரைப் பெருமகிழ்ச்சியோடு வரவேற்றீர். என்னையும் கடும் பிணியிலிருந்து காப்பாற்றி அருள் புரிய வேண்டுகிறேன். (11)

## தசகம் - 77

### ஜராசந்தன் படையெடுப்பு

காதலால் கட்டிழந்த சைரந்திரி (பணிப்பெண்) உம்மைப் பற்றிய நினைவுகளால் ஆக்கிரமிக்கப்பட்டு, எவ்வளவோ நாட்களாக உமது வருகைக்காக ஆவலுடன் ஏங்கிக் காத்திருந்தாள். உம்மை வரவேற்கவும், மகிழ்வூட்டவும் ஆடை அலங்காரங்களுடன் காத்திருக்க ஒரு நாள் உத்தவருடன் அலங்கரிக்கப்பட்ட இல்லத்திற்கு வருகை தந்தீர். (1)

தனிமையில் அவளுடன் விளையாடி மகிழ்வு தந்தீர். நீண்டநாள் விருப்பம் ஈடேறியது. கண்டு களிப்படைந்த கன்னிகை, மார்பகங்கள் மகிழ்ச்சியால் பொங்கியெழுந்து விம்மிப் பூரித்து தணிந்து விளையாட தமக்குப் பல்வேறு வகைப் பரிசுகள் அளித்து வரவேற்றாள். (2)

விரும்பி வரம் ஒன்றைக் கேள் என்று அவளிடம் சொல்ல, அளவற்ற அந்த ஆரணங்கு இன்றுபோல் பல இரவுகள் உம்மோடு கழிக்க அருள் புரிய வேண்டும் என்று வேண்டினாள். ஞானம் பெற்றவரால்தான் உம்மோடு இரண்டற கலக்கும் சாயுஜ்யம் என்ற பதவியை நாடிக் கேட்க முடியும். ஆனால் எப்போதும் உமது அருகிலேயே இருக்கக்கூடிய சாமீப்யம் என்ற வரத்தையாவது கேட்டிருக்கலாமே! எல்லாம் இறைவன் செயல்! (3)

பரமனே! பின்னர் சில இரவுகளை அவளுடன் கழித்தீர். அவளுக்கு ஆனந்தத்தில் உச்சகட்டத்தை அளித்தீர். உபாசலோகன் என்று மகன் அவளுக்குப் பிறந்தான். அவன் சத்வத சம்ஹிதை என்ற நூலில் விற்பன்னன் ஆகினான். நாரத முனிவரிடம் இருந்து அது பற்றிய உபதேசம் பெற்றான். அத்தகைய பேறு பெறுவதற்குரிய வரத்தைப் பெறும்படி சைரந்திரியை இறைவனல்லவா வழிநடத்தி இருக்கிறான்! (4)

பிறகு, பலராமனுடன் அக்ரூரன் இல்லத்தை அடைந்தீர். ஆவலுடன் தோத்திரம்பாடி வழிபட்டு உம்மை அக்ரூரன் வரவேற்றான். அவனைக் குருவம்சத்தினரின் தலைநகருக்கு அனுப்பி காட்டிலிருந்து திரும்பி வந்துள்ள பாண்டவர்களைப் பற்றியும், தீயமனம் படைத்த மக்கள் தவறாக நெறிப்படுத்தப்பட்ட திருதராஷ்டிரனின் செயல்களைப் பற்றியும் அறிந்து கொண்டீர் (5)

கம்சனின் மாமனாரும் நெருங்கிய நண்பனும் ஆகிய மன்னன் ஜராசந்தன் கம்சனுடைய மரணத்தைப் பற்றிக்

கேள்விப்பட்டு அடக்க முடியாத ஆத்திரத்துடன் பெரிய படைத் திரட்டி வந்து மதுரா நகரத்தை முற்றுகை யிட்டான். உம்மிடத்தில் இருந்த படை சிறியது என்றாலும் அத்துடன் வானவரால் அனுப்பப்பட்ட இரதங்களும் பல்வேறு வகையான ஆயுதங்களும் இருந்தன. அவற்றுடன் பலராமன் உதவியுடன் இருபத்திமூன்று அக்ரோணி படைகளுடன் வந்த ஜராசந்தனை முறியடித்தீர். (ஒரு அக்ரோணி என்பது 21870 யானைகள் அதே அளவு இரதங்கள், 65,610 குதிரைப்படை மற்றும் 1,09,350 காலாட்படை கொண்டதாகும்.) (6)

பலம் மிக்க ஜராசந்தன், பலராமனால் சிறைப் பிடிக்கப்பட்டு கட்டி வைக்கப்பட்டான். உமது அவதாரத் தின் நோக்கம் ஈடேற வேண்டும் என்பதற்காக அவனை விடுதலை செய்தீர். அவன் மீண்டும் படை திரட்டிப் போருக்கு வந்தான். அந்தக் காலத்தில் வாழ்ந்த மன்னர் அனைவரையும் முறியடித்து வெற்றி கண்ட ஜராசந்தனைப் போலச் சக்தி வாய்ந்த வீரர் எவரும் இல்லை. (7)

போரில் முறியடிக்கப்பட்டுத் தோல்வியுற்று அவமானப்பட்டாலும், அவன் உம்மைப் பதினாறு முறை படையெடுத்து வந்து தாக்கினான். அவனுக்குப் பல சிற்றரசர்கள் உதவினர். மகாவிஷ்ணுவே! இந்தப் போர் களில் அவனுடைய படைகளில் 391 அக்ரோணி படைகள் உம்மால் நாசமாக்கப்பட்டன. (அதாவது சுமார் 4¼ கோடி மக்கள்; யானை, குதிரை போன்ற மிருகங்கள் மற்றும் இருபத்தி ஓராயிரம் இரதங்கள்) (8)

மூன்று கோடி யவனர்கள் கொண்ட படையுடன் யவனன் ஒருவன் தலைமையில் பதினெட்டாம் முறையாகப் போர்புரிய வந்தபோது, கடலிடையே உள்ள ஒரு தீவில் விஸ்வகர்மா ஒரு புதிய நகரத்தை உருவாக்கிக் கொடுத் தான். உமது அதீத சக்தியால் உமது மக்கள் அனைவரை யும் அங்கே குடியேறச் செய்தீர். (9)

தாமரை மலர்மாலை மார்பை அலங்கரிக்க, கால் நடையாக நகரத்தை விட்டு வெளியேவந்து போருக்கு ஆயத்தமானீர். உமது கரத்தால் மரணம் அடையும் பேறு பெறாத அந்த யவனத் தலைவன் உம்மைத் தொடர்ந்து வர; நீர் ஒரு மலைச் சரிவில் மாயமாய் மறைந்தீர். அங்குள்ள குகையில் உறங்கிக் கொண்டிருந்த முகுந்தன் எனும் அரசனை தவறாக நீர் என்று நினைத்துக் காலால் எட்டி உதைத்தான். விழித்தெழுந்த அரசனின் உக்கிரமான பார்வையாலே தகிக்கப்பட்டு சாம்பலாகினான். அப்போது அந்தப் பக்திமானான அந்த அரசனுக்கு அருட்காட்சி அளித்தீர். (10)

“இக்ஷ்வாகு வம்சத்தில் பிறந்த நான் அரசகுல வாழ்வை உதறித் தள்ளிவிட்டு துறவு பூண்டு உம்மையே நினைத்து கடைத்தேறக் காத்திருக்கிறேன். உமது அருள் வேண்டி நிற்கிறேன்” என்று அந்த மன்னர் உரைத்த மொழி கேட்டு, அரச கடமையாற்றும்பொழுது அறிந்தும் அறியாமலும் செய்த பாவச் செயல்களை மாற்றுவதற்காக பக்தி பூண்டு விரதம் காக்குமாறு அருள் புரிந்தீர். பக்தியே முக்திக்கு சமமானதாகும் அடுத்த பிறவியில் அவனுக்கு முக்திகிட்டும் என்று அருள் பாலித்தீர். (11)

மதுரைக்குத் திரும்பியபின்னர், யவனன் திரட்டி வந்த படையை நீர் மூலமாக்கினீர். துவாரகையில் உள்ள உமது இல்லத்திற்கு திரும்பிச்செல்லும் வழியில் மகத நாட்டு மன்னவனாகிய ஜராசந்தன் தாக்க வந்தான். அவனுடைய அகங்காரத்தை அதிகரிப்பதற்காக, இறுதி வெற்றியை அவனுக்கே அளிப்பதுபோல் பாவனைச் செய்து தீவிலுள்ள உமது இல்லத்திற்கு ஓடி ஒளிந்து கொண்டீர். வியத்தகு செயல் பல புரிந்த குருவாயூரப்பனே! என்னைக் காப்பாற்றி அருள் புரிய வேண்டுகிறேன். (12)

# தசகம் - 78

## ருக்மிணியின் தவம்

உமது வனப்பாலும் வலிமையாலும் கடல் சூழ்ந்த புதிய நகரத்தின் கவின்மிகு வனப்பு அதிகரித்தது. தேவ தச்சனாகிய விசுவகருமன் உருவாக்கிய நகரம் அல்லவா அது! அத்துடன் தேவர்கள் அந்த நகரை அழகுப்படுத்தத் தேவைப்பட்ட பரிசுகளை அனைத்தையும் அளித்திருந்தனர். (1)

பிரமதேவனின் ஆணைப்படி, ரேவத நாட்டு மன்னன் தன்மகள் ரேவதியை பலராமருக்கு மணம் முடித்துக் கொடுத்தான். ஆயர் பலர் புடை சூழ அந்தத் திருமணத்திற்கு வருகை தந்தீர். விழாவெடுத்தீர். (2)

விதர்ப்ப நாட்டு மன்னன் மகள் ருக்மிணி; உம்மீது மாறாக் காதல் கொண்டவள்; ஆனால் தீயவனான அவளுடைய அண்ணன் ருக்மி என்பான் தன் தந்தையைக் கூடக் கேட்காமல் அவளை சேதி நாட்டு மன்னன் சிசுபாலனுக்கு திருமணம் முடித்துத் தர முடிவு செய்தான். அவன் மிகவும் கொடியவன் ஆனால் நெருங்கிய நண்பன். (3)

இளகிய இதயம் படைத்த ருக்மிணி, உம்மீது நெடு நாட்களாகக் காதல் பூண்டிருந்தக் காரணத்தால், தான் ஆசை, நிராசையாகப் போய்விடுமோ என்று அச்சப் பட்டாள். கொடுமையான காமன் கணைபட்டுத் தனக்கு ஏற்பட்டுள்ள துன்பத்தை ஒரு அந்தணன் மூலமாகத் தங்களுக்கு தூது அனுப்பி வைத்தாள். (4)

சிரமம் எதுவுமின்றி தீயவர் அடைய முடியாத உமது நகரத்தை அடைந்த அந்த அந்தணன், தாங்கள் அவருக்கு அளித்த பெரிய வரவேற்பில் அகம் மகிழ்ந்தான். சம்சாரத்தில் உழலும் மக்களைக் கரை சேர்ப்பவன் நீர் அல்லவோ! (5)

அவள் கூறினாள், "குண்டின நகரத்தில் அழகி
கற்பிலும் சிறந்த இளவரசி ருக்மிணி இருக்கிறாள். அ
மிடத்தில் பூண்டுள்ள ஆழமான காதலால், வெட்கத்
விட்டு எம்மூலம் உனக்கு அனுப்பியுள்ள சேதி என்
தெரியுமா? கேட்பீராக!" (

பன்னெடுங்காலமாக என் இதயத்தைக் கவர்ந்து உ
சிறப்பான குணங்களாலும் செயல்களாலும் இட
பிடித்துக் கொண்டீர். ஆனால் என் உடலை சிசுபால
கொள்ளை கொண்டு விடுவானோ என்று அஞ்சுகிறே
லோகநாயகனே! கருணையின் உறைவிடமே! என்னை
கொடிய இந்த நிலையிலிருந்து காப்பாற்றும்" என்ப
அவளது வேண்டுகோளாகும் என்றான். (

"அதரவற்ற இந்த அபலைப் பெண்ணைக் கைவிட்
விட்டீரானால், மரணத்தைத் தவிர வேறு முடிவு எது
எனக்கு இல்லை" இத்தகைய செய்தியின் மூலம் நல்
மனம் படைத்த அந்த அந்தணன் உம்மைச் சஞ்சலத்தி
ஆழ்த்தி விட்டான். (

உடனே அந்த அந்தணனிடம், "அவளுடை
உள்ளத்தில் உண்டான காதல் நோயைக் காட்டிலும் எ
மனத்தில் அதிகமான துன்பம் ஏற்பட்டுள்ளது. நண்ப
நானே அங்கே நேரில் வந்து அந்த ஆரணங்கைக் கை
பிடித்துக் காப்பாற்றுகிறேன்" என்று பதில் உரைத்தீர். (9

குருவாயூரப்பனே! தான் வந்த காரியம் வெற்றியடை
தது என்ற களிப்புடன் திரும்பிய அந்தணன் உடன் நீரு
இரதம் ஏறிப் புறப்பட்டு குறுகிய காலத்தில் குண்டின
நகரத்தை அடைந்தீர். எனக்கு ஏற்பட்டுள்ள
துன்பத்திலிருந்து என்னையும் காப்பாற்றி அருள் புரிய
வேண்டுகிறேன். (10

# தசகம் - 79

## ருக்மிணி திருமணம்

படையுடன் பலராமர் பின் தொடர்ந்து வந்த உமக்கு குண்டின நகரத்து மன்னன் பீஷ்மன் நல்வரவு கூறி உப சரித்தான். நீர் நேரிலே புறப்பட்டு வந்தது கேட்டு எல்லை யில்லாக் களிப்பில் ஆழ்ந்த ருக்மிணியும் அந்த அந்தணனை பலவாறாக உபசரித்தாள். (1)

உலகை மயங்கச் செய்யும் உமது அழகுத் திருவுரு வத்தைக் கண்டும் ருக்மி எடுத்துள்ள முடிவைக் கேட்டும் ஆறாத் துயரில் மூழ்கிய குண்டின மக்கள் கண்களில் நீர் சொரிய கவலையுடன் இதைப்பற்றித் தமக்குள்ளே பேசிக் கொண்டிருந்தனர். (2)

மறுநாள் காலை, மதிவதனம் படைத்த ருக்மிணி, மணப்பெண்ணுக்குரிய அலங்காரங்களுடன், காவலர்கள் புடை சூழ்ந்து வர தெய்வத் தாயாரை வணங்கக் கோவிலுக்குச் சென்றாள். அவளுடைய மனம் பூரணமாக உமது பாதார விந்தங்களில் சரணடைந்திருந்தது. (3)

உயர்குல மங்கையர் உடன்வர, ருக்மிணி பக்தியுடன் தெய்வத்தாயை வணங்கி அவரது காலடியில் வீழ்ந்து, நீர் தான் அவளை மனைவியாக வரிக்க வேண்டும் என்ற தனது ஒரே ஆசையை வெளியிட்டாள். (4)

ருக்மிணியைக் காண்பதற்காக மகிழ்ச்சியுடன் கூடி யிருந்த பல நாட்டு அரசர்களும் எதிர்பார்த்துக்காத்திருந் தனர். தனித்தும், அமைதியாகவும் நீரும் காத்திருந்தீர். வர்ணிக்க முடியாத அழகு படைத்த ருக்மிணி அந்த இடத்தையே தனது அழகால் ஒளி வீசச் செய்தாள். (5)

கண்கவர் வனிதையின் பேரழகு, கூடியிருந்த மன்னர் களின் நெஞ்சங்களில் மயக்க மூட்டியது, அவள் அவ்வப்

போது வீசிய கடைக்கண் பார்வைகள் உமது மனத்திலேயே ஆசையைத் தூண்டியது. (6)

''மதிவதன மங்கையே! எங்கே போகிறாய்?'' என்று கேட்டு, அவளைக் கரம்பற்றி அழைத்துச் சென்று உமது தேரில் ஏற்றிக் கொண்டு கவர்ந்து செல்ல முயற்சி செய்தீர்! உடனே அதற்குப் பலத்த எதிர்ப்புப் பல திசைகளில் இருந்தும் தோன்றியது. (7)

''இந்த ஆயபாடிச் சிறுவன் எப்படி வந்தான்?'' என்று கூடியிருந்த மன்னர்கள் கோபக்குரலில் கூவினர். ஆத்திரத்துடன் பழித்துரைக்கும் சொற்களுடனும், பலராமன் தலைமையில் வந்திருந்த யாதவப் படையுடன் மோதினர். அந்தக் கொடியவரின் கொக்கரிப்பால் நீர் சஞ்சலம் கொள்ளவில்லை. குரைக்கும் நாய்களைப் பார்த்துக் கொற்றம் செலுத்தும் சிங்கம் சிந்தை கலங்குமோ? (8)

ருக்மிணியின் அண்ணன் ருக்மி போருக்கு வந்தபோது அவனைக் கொல்லாமல், கட்டிப் போட்டு தலைமொட்டை அடித்து, மீசையை அகற்றி அலங்கோலப்படுத்தி அவனைப் பலராமர் தண்டித்தார். அவனுடைய அகங்காரம் குலைந்தது. அவனை கட்டுகளிலிருந்து விடுவித்து விட்டு திருமகளான உமது மனைவி ருக்மிணியுடன் துவாரகை வந்து சேர்ந்தீர். (9)

தனிமையில் ருக்மிணிக்குப் பல்வகையாகவும் மகிழ்ச்சி ஊட்டினீர். அவளது மதிவதனம் மந்தகாசத்தில் ஒளி வீசிச் சிரித்தது. நாணத்திடையே மலர்ந்த மோகனப் புன்சிரிப்பு காதல் மயக்கத்தால் தூண்டப்பட்ட உணர்ச்சிகள் பொங்கி வர தன் கணவனைக் கொண்டாடும் கலாப மயிலாகக் காட்சி தந்தாள். (10)

இரவும் பகலும் இன்பமூட்டிக் கிளுகிளுக்க வைக்கும் கதைகளாலும் வேடிக்கைப் பேச்சுக்களாலும் இன்பமூட்டினாலும், இரட்டுற மொழியும் பேச்சால், அவளைப்

புறக்கணிப்பதைப் போன்ற எண்ணத்தை உண்டாக்கி அவளுடைய பூவினும் மெல்லிய இதயத்தில் புயலையே உண்டாக்கி விட்டீர். (11)

ஆனால், உடனே அவளை அரவணைத்துக் காதல் விளையாட்டில் களிப்பித்தீர். பன்மடங்கு மகிழ்ச்சி பொங்கி அவளது இதயத்தில் வழிந்தது. பரமனே! என்னைப் பற்றியிருக்கும் இந்தக் கடுமையான நோயிலிருந்தும் என்னைக் காப்பாற்றி அருள் புரிய வேண்டுகிறேன். உமது பெருமைகளைப் பாராட்டிப் பாடுகின்ற என்னைக் காப்பாற்றி அருள் புரிவாய் ஆண்டவனே! (12)

## தசகம் - 80

### சியமந்தகமணியின் கவர்ச்சி

பிரபுவே! பேராசை கொண்டவனைப் போல ஒரு முறை சத்ரஜித் என்பவனிடம் இருந்து வியத்தகு விண்ணுலக மணியான சியமந்தகமணியை கொடுவென்று யாசித்தீர். அவன் அதை சூரிய பகவானிடம் இருந்து பெற்றிருந்தான். இதற்குப் பல காரணங்கள் உண்டு. உம்மிடத்து மையல் பூண்டிருந்த அவனுடைய மகளை மணப்பதற்கு ஒரு உபாயமாக அந்த மணியை அவனிடம் இருந்து கேட்டீர் என்று நான் நினைக்கிறேன். (1)

ஆனால் அற்பப் புத்தி படைத்த அவன் அந்த மணியைச் கொடுக்க முன் வரவில்லை. ஒருநாள் அவனுடைய தம்பி பிரசேனன் என்பவன், அந்த மணியை கழுத்தில் அணிந்து கொண்டு வேட்டைக்குச் சென்றான். அந்த மணியைச் சதைப்பிண்டம் என்று கருதிய ஒரு சிங்கம், பிரசேனனைக் கொன்று அந்த மணியை எடுத்து சென்று விட்டது. கரடி அரசன் ஜாம்பவான் அந்தச் சிங்கத்தை அழித்து அந்த மணியை தன் குழந்தையிடம் கொடுத்தது. (2)

சத்ராஜித் பரப்பிய வதந்திகளிலிருந்து அந்த மணி உம்மால் களவாடப்பட்டு விட்டது என்ற புகார் கிளம்பியது. ஒழுக்கசீலர்களின் வாழ்வில் ஏற்படும் சிறு பிழைகூட, மக்கள் ஆசையுடன் வேண்டி அருந்தும் அமுதமாகி விடுகிறது. யாவும் அறிந்திருந்தும் நீர் அந்த மணியைத் தேடிக் கண்டுபிடிக்கப் புறப்பட்டீர். வழியில் பிரசேனனுடைய உடலையும் சிங்கத்தின் சடலத்தையும் கண்டறிந்தீர். அந்தத் தடயங்கள் கரடி அரசனின் குகைக்கு உம்மை அழைத்துச் சென்றன. (3)

வயது முதிர்ந்த ஜாம்பவான், தங்களை யார் என்று அடையாளம் தெரியாமல் "ஆண்டவனுக்கு சரண் புகுந்து அடியவராக வாழும் என்னைத் தாக்க வருபவர் யார்? ரகுவம்சத் தலைவனே ராமா! பாவத்தை அழித்து ஒழிக்கும் பரந்தாமா! வெற்றி பெறுக! வாழ்க! என்று தொழுத வண்ணம், அடியவர்களில் மாமணியாக அந்த முதியவர் உம்மோடு மல்லுக்கு நின்றார். உம்மீது அடிகளையும் குத்துக்களையும் பொழிந்தார். (4)

கடைசியில் உம்மை யார் என்று அடையாளம் கண்டு கொண்டவுடன், ஜாம்பவான் அந்தச் சியமந்தகமணியை உமக்குக் கொடுத்ததோடு தன் மகளாகிய மற்றொரு மணியையும் அளித்தார். அவற்றைப் பெற்றுக் கொண்டு அடியவரை ஆசீர்வதித்து, விரைந்து திரும்பி வந்து சியமந்தகமணியை சத்ராஜித்திடம் ஒப்படைத்தீர். (5)

அறிவாளியான சத்ராஜித், தன்னுடைய நடத்தைக்காக தானே வெட்கப்பட்டு வருத்தமடைந்தான். அத்தகைய ஒப்பற்ற மணியை வைத்திருப்பதால் ஏற்படக்கூடிய அபாயத்தை உணர்ந்து அதனை உமக்கே கொடுத்து விட்டான். அத்துடன் தனது அழகு மகள் சத்தியபாமாவையும் உமக்கு அளித்தான். தொலைநோக்குடைய நீர், மகளை மட்டும் ஏற்றுக் கொண்டு அந்த மணியை அவனிடமே திருப்பிக் கொடுத்து விட்டீர். (6)

நாணம் கொண்ட நங்கை சத்தியபாமையுடன் மகிழ்ச்சியுடன் வாழ்ந்து வருகையில் அரக்கு மாளிகையில் குந்தியின் புத்திரர்கள் (பாண்டவர்கள்) எரிக்கப்பட்ட செய்தியைக் கேள்விப்பட்டு குருவம்சத்தினர் கோலோச்சிய பிரதேசத்திற்கு சென்றீர். அதனைக் கேள்விப்பட்ட சததன்வன் ஏற்கெனவே தனக்கு நிச்சயிக்கப்பட்ட சத்தியபாமையை இழந்த கோபத்தால் அக்ரூரன் மற்றும் கிருதவர்மன் ஆகியவரின் தூண்டுதலின் பேரில் சத்ரஜித்தைக் கொலை புரிந்தான். (7)

தந்தையின் கொலையால் துயரத்தில் மூழ்கிய சத்திய பாமா உம்மைத் தேடிவந்து நடந்ததைக் கூறியதும் அவளுக்கு ஆறுதல் கூறி சததன்வனை அழித்தீர் அவன் அஞ்சி ஓடியும் பயனில்லை. சியமந்தகமணி காணாமல் போனதால் ஏற்பட்ட கெட்ட பெயரால் மனம் வருந்திய பலராமன் துவாரகையை விட்டு வெளியேறி மிதிலை மன்னன் அரசவையை அடைந்தார். அங்கே துரியோதனனுக்கு கதை எடுத்துப் போர் புரியும் வித்தையைக் கற்றுக் கொடுத்தார். (8)

அக்ரூரன் உமக்கு அடியவன்; அதனால் உமது உள்ளுணர்வால் தூண்டப்பட்டே அவன் சத்ரஜித்தைக் கொன்றிருக்க வேண்டும். அக்ரூரன் செல்வம் பெற வேண்டும் என்பதற்காக அவனிடம் இருந்து அந்த மணியை மீட்பதற்கு நீர் முயற்சி எடுக்கவில்லை. இப்படித்தான் ஞானியர் உரைக்கின்றனர். (9)

உம்மிடத்தில் அணுவளவும் அகலாது பக்தி பூண்டு வந்தவன் அக்ரூரன். அப்படியிருக்க சத்ரஜித்தைக் கொலை செய்ய வேண்டும் கொடிய எண்ணம் அவனுடைய உள்ளத்தில் எப்படி தோன்றியது? இது மிகவும் சிக்கலான கேள்வி. கண்டிப்பாக அது உம்முடைய விருப்பமாக இருந்திருக்கவேண்டும். அறிவைப் பற்றியும் பலத்தைப்பற்றியும்

அவன் கொண்டிருந்த கர்வத்தை அடக்குவதற்காக அப்படி செய்திருக்க வேண்டும். (10)

சத்ராஜித் கொலைப்பழிக்கு அஞ்சி, அக்ரூரனும் கிருதவர்மனும் ஓடிவிட்டனர். அவனை கூப்பிட்டனுப்பி அவனால் மறைத்து வைக்கப்பட்டிருந்த சியமந்தக மணியைக் காட்டும்படி செய்தீர். பின்னர் அதனை நற்குணங்கள் பல படைத்த காரணத்தால் அவனிடமே திருப்பிக் கொடுத்து வைத்துக்கொள்ளும்படி கூறிவிட்டீர். அத்தகைய குருவாயூரப்பனே! அதற்குப்பின் சத்தியபாமையுடன் ஆனந்தத்தில் களித்தவனே! என்னைக் காப்பாற்றி அருள்புரிய வேண்டுகிறேன். (11)

# தசகம் - 81

## நரகாசுரன் வதம்

அழகு மங்கை சத்தியபாமாவுடன் உறவாடிய பலநாட்கள் கழிந்த பின்னர், அவருடன், யக்ஞசேனனின் மகளான பாஞ்சாலியின் திருமணத்திற்குச் சென்றீர். அதன் பின்னர், பாண்டவர்களை மகிழ்ச்சிப்படுத்த அவர்களுடன் அத்தினாபுரத்தில் சில நாட்களைக் கழித்தீர். அப்பொழுது பாண்டவர்கள் வசிப்பதற்காக இந்திரப்பிரஸ்தம் என்ற புதிய நகரத்தை உருவாக்கினீர். பின்னர் தங்கள் இருப்பிடம் சேர்ந்தீர். (1)

கற்பில் சிறந்த தங்கள் சுபத்ராவை தனக்கு மணமுடித்துத்தர வேண்டும் என்று கௌரவர்களில் ஒருவனான துரியோதனன் கேட்டான். ஆனால் தங்களது ஆலோசனைப்படி அவளை சந்நியாசி வேடம் பூண்ட அர்ச்சுனன் கவர்ந்து சென்று விட்டான். இது கண்டு கோபம் கொண்ட பலராமன் தங்களால் சமாதானம் அடைந்து இந்திரபிரஸ்தத்திற்கு அழைத்துச் செல்லப்பட்டார். அர்ச்சுனன் ஆனந்தம் கொண்டான். (2)

யமுனை நதியின் முக்கிய தெய்வமான காளிந்தியை ஆற்றங்கரையில் கண்டீர். அங்கு விளையாடி மகிழ்ந்த நீர், காளிந்தியை உமது துணைவியாக ஏற்றுக் கொண்டீர். காண்டவ வனத்தை அழித்து தனது பசியைத் தீர்த்துக் கொள்ளுமாறு அக்னியை ஏவினீர். பின்னர் நகரம் திரும்பினீர். அவந்தியின் அரசகுமாரியான மித்திரவிந்தை உம்மோடு பூண்டிருந்த காதலின் காரணமாக மன்னர் பலர் கூடி இருந்த அவையில் கவர்ந்து சென்றீர். (3)

அடுத்து அயோத்தியின் மன்னன் நக்னஜித் என்பவன் மகளான சத்யாவை மணந்து கொண்டீர். ஏழு காளைகளை ஒன்றாகப் பிடித்து அடக்கி வெற்றி கொண்டு அவளை அந்த வெற்றிப் பரிசாகப் பெற்றீர். உமது தந்தைக்கு உறவு முறையான பத்ரா என்பவளை அவளது சகோதரன் சந்தர்தனனும் மற்றவர்களும் மணம் செய்து கொடுத்தனர். (4)

பாண்டவர் உட்பட மற்ற அரசகுமாரர்களால் வீழ்த்தப்படாத மச்சயந்திரத்தை நீரில் பார்த்தபடி வீழ்த்தி மத்ரா நகரின் மன்னரின் மகளான இலக்குமணை என்பவளை மனைவியாகப் பெற்றீர். இப்பொழுது உமக்கு எட்டு மனைவியர். தேவேந்திரன் மூலம் நரகாசுரன் என்ற அரக்கனின் கொடும் செயல்களைப் பற்றி கேள்விப் பட்டீர். (5)

தாங்கள் எண்ணியவுடன் தங்களது தெய்வீக வாகனமாகிய கருடன் பறந்து வந்தது. அதன் மடியில் சத்தியபாமையுடன் ஏறி அமர்ந்து எதிரியின் நகரத்திற்குள் எளிதாகப் புகுந்தீர். கோட்டை கொத்தளங்களைத் தவிடு பொடியாக்கிய பின்னர், உம்மை தாக்க வந்த படைகளை அழித்தீர் வெட்டுண்ட அவர்கள் உடலில் பெருகிய இரத்தத்தால் அந்த நகரை சோனிதபுரம் அதாவது இரத்தம் ஓடும் நகரம் என்று மாற்றி விட்டீர். (6)

நரகனின் அடியாட்களில் ஒருவரான முரன் என்பவன் ஐந்து முகங்களைக் கொண்டவன். சிங்கம் போன்றவன்; கடலையே காடாகக் கருதிக் குடியிருப்பவன் உம்மைச் சந்தித்துப் போரிட வந்தான். உமது சக்கராயுதத்தால் அவன் தலை வெட்டுண்டு வீழ்ந்தது பின்னர் நரகன் நான்கு தந்தங்கள் உடைய யானைப்படைகளுடன் தானே போருக்கு வந்தான். கடுமையான போருக்குப் பின்னர் நரகனுடைய தலையை வெட்டி அவன் நரகத்துக்குப் போகாமல் முக்தி அளித்தீர். (7)

நரகனின் தாயாகிய பூமிதேவி உம்மைத் தோத்தரித்து பாடினாள். அவளுடைய பகதத்தனை அரசனாக்கி சிம்மாசனத்தில் அமரச் செய்தீர். நரகனுடைய நான்கு தந்தங்கள் கொண்ட யானையை அவனுக்குக் கொடுத்து விட்டு, மற்ற யானைகளையும் செல்வங்களையும் எடுத்து கொண்டு ஊர் திரும்பி வந்தீர். நரகனால் சிறையில் வைக்கப்பட்டிருந்த பதினாயிரம் பருவ மங்கையரையும் சிறை மீட்டுக் கொண்டுவந்தீர். அவர்கள் அனைவரும் உம்மீது காதல் கொண்டனர். (8)

தேவர்களின் தாயான அதிதியிடம் இருந்து நரகன் திருடிச் சென்றுவிட்ட காதணிகளை மீட்டுக் கொடுப்பதற்காக, சத்தியபாமையுடன் விண்ணுலகம் சென்றீர். பாமாவின் அழகைப் பார்த்து விண்ணுலகம் வெட்கித் தலை குனிந்தது. மாபெரும் வரவேற்பு அளிக்கப்பட்டது. இருப்பினும் சத்தியபாமாவின் விருப்பத்தின்பேரில் தேவலோகத்தில் உள்ள கல்பதருவை எடுத்துச் செல்ல முனைந்தபோது, எதிர்த்த இந்திரனை அடக்க வேண்டி நேர்ந்தது. கர்வத்தால் விளையும் கேட்டால் மதிகெட்டு விடும் என்பதனை இந்திரனுக்கு மெய்ப்பிப்பதற்காக அப்படிச் செய்தீர். (9)

சத்தியபாமாவின் தோட்டத்தில் கல்பதருவை நட்டு விட்டு, நரகனுடைய சிறையில் இருந்து விடுவிக்கப்பட்ட பதினாயிரம் பருவமங்கையர்களையும் மனைவிகளாக

ஏற்றுக் கொண்டீர். பல்வேறு உருவங்கள் பூண்டு ஒவ்வொருவர் இல்லத்திலும் ஒரே நேரத்தில் தோன்றி விளையாடி மகிழ்வுற்றீர். அந்த மனைவியின் ஒவ்வொருவருக்கும் பத்துக் குழந்தைகள் பிறந்தன. குருவாயூரப்பனே! மனித முயற்சிகளுக்கு எட்டாத லீலைகள் புரிந்தவனே! என்னைக் காப்பாற்றி அருள் புரிய வேண்டுகிறேன். (10)

# தசகம் - 82

## பாணாசுரன் வதம்

ருக்மிணியின் மகன் பிரத்யுமனன்; அவன் உமது தெய்வீக சக்தியின் மறுவடிவம். சம்பரன் என்ற அசுரன் தனது மாய சக்தியால் அவனைக் குழந்தையாக இருக்கும் போதே கடத்திக் கொண்டு சென்று விட்டான். பிரத்யும்னன் வளர்ந்து பெரியவனானவுடன் சம்பரனைக் கொன்று விட்டு தன் மனைவி ரதியுடன் துவாரகைக்குத் திரும்பினான். தனது மாமன் ருக்மியின் மகளான ருக்மாவதியை சிறையெடுத்துச் சென்று விட்டான்; பிரத்யும்னனின் மகன் அனிருத்தன் என்பான், ருக்மிணியின் பேத்தியை மணந்து கொண்டான். இந்தத் திருமணக் களியாட்டங்களின் போது நடந்த சூதாட்டத்தில் ஏற்பட்ட சண்டையின் விளைவாக, பலராமர் ருக்மியைக் கொன்று விட்டார். (1)

பலியின் மகன் பாணாசுரன், சிறந்த சிவபக்தன்; அவனுக்கு உஷா என்று ஒரு மகள். அனைவரின் போற்றுதலுக்கும் உரியவள்; அவளுக்குத் தங்களுடைய பேரன் அனிருத்தன்மீது காதல் பிறந்தது. அந்தப் பிரிவுத் துயரால் பெரிதும் வருந்தினாள். அவள் ஒருமுறை அவனைக் கனவில்தான் கண்டிருக்கிறாள். நேரில் கூடப் பார்த்ததில்லை. (2)

அவளுக்குச் சித்ரலேகா என்று ஒருதோழி; பெயருகேற்ப சித்திரங்களை வரைவதில் கெட்டிக்காரி; யோகசித்திகளும் பெற்றவள்; புகழ் பெற்ற இளைஞர்களின் ஓவியங்களை அவள் வரைய அவற்றிலிருந்து அனிருத்தனை அடையாளம் கண்டு கொண்டாள் உஷா; தனது யோக சக்தியால் அவனை உமது அரண்மனையிலிருந்து சித்ரலேகா கொண்டு வந்து உஷாவிடம் சேர்த்தாள். (3)

அதன்பின், மகளிர் வசிக்கும் பகுதியில் அனிருத்தன் மகிழ்ச்சியாக வாழ்ந்து வந்தான். ஒருமுறை அவனை பாணாசுரண் கண்டுபிடித்துக் கைகால்களைக் கட்டிச் சிறையில் இட்டு விட்டான். நாரதர் மூலம் அனிருத்தனின் செய்தி அறிந்து கோபத்துடன் பொங்கி எழுந்து பின்னர் யாதவர் படை திரட்டிக்கொண்டு பாணாசுரனின் நகரை நோக்கிப் படை எடுத்தீர். (4)

பர்வதகுமாரியின் கணவரான சிவபிரான் தமது பூதகணங்களோடு அந்த நகரத்தைத் தாக்குதலில் இருந்து காப்பாற்ற முனைந்தார். பாணாசுரன், யுத்தானைகளையும், குகன் பிரத்யும்னனையும் சிவபெருமான் தங்களையும் போரில் சந்தித்தனர். (5)

சிவன் தொடுத்த பாணங்கள் அனைத்தையும் தடுத்து நிறுத்தி அவரைத் தாக்கி மயக்கம் அடையச் செய்தீர். அதனால் பயமுற்ற பூதகணங்கள் சிதறி ஓடிவிட்டன. யாதவர்கள் பிருகளத்தில் வெற்றி முழுக்கமிட்டனர். குகனும் தோற்றோடி விட்டார். கும்பாண்டன் என்ற பாணாசுரனின் அமைச்சர், பலராமரால் உடைத்து நொறுக்கப்பட்டான். (6)

பாணாசுரன் தனது ஆயிரம் கைகளிலும் ஐநூறு விற்களையும் அம்புகளையும் தாங்கிப் போருக்கு வந்தான். அவனுடைய ஆயுதங்கள் யாவும் நாசமாக்கப்பட்டன. அதனால் போரில் பின்வாங்க நேர்ந்தது. உடனே சைவ

நோய் அனைவரையும் பற்றிக்கொண்டது. அதனை உடனே வைஷ்ணவ சுரம்முறியடித்தது. உமதுபெருமையை அறிந்து உமது புகழ் பாடினர். உமது மகிமையை எடுத்து ரைப்பவர்களைத் தாக்கக்கூடாது என்ற அறிவுரையுடன் சிவபடை திருப்பி அனுப்பப்பட்டது. தாமஸகுணத்தின் காரணமாக, சிவனுடைய அடியாட்களை ஞானம் பெற்ற வர்களாக இருந்தாலும் பயங்கரமான காரியங்களில் ஈடுபட்டு வந்தனர். (7)

அகம்பாவத்தால் கெட்ட பாணாசுரன், மீண்டும்தாக்க வந்தான், அழிவுக்கான பல ஆயுதங்களை கொண்டு வந்ததால் அவனைச் சமாளிப்பது மிகவும் கடினமாக இருந்தது. ஆனால் அவனுடைய கர்வத்தை அடக்கி தோல் வியுறச் செய்தீர். தன்னுடைய அடியவனான பாணாசுரன் சார்பில் சிவபெருமான் வேண்டி கொண்டதற்கு இணங்க அவன் மரணத்திலிருந்து காப்பாற்றப்பட்டான். ஆயிரம் கைகளில் இரண்டைத் தவிர மற்றவை வெட்டப்பட்டு விட்டன. (8)

மீண்டும் மீண்டும் இந்திரனை வெற்றிக் கண்டீர். நந்தகோபனைக் காப்பாற்றி ஒருமுறை வருணனை முறியடித்தீர். தங்கள் குருவின் புதல்வர்களைக் காப்பாற்ற யமனைத் தோற்கடித்தீர். காட்டு நெருப்பை அருந்தி அக்னியைப் புறமுதுகிட்டு ஓடச் செய்தீர். கன்றுகளைத் திருடிய பிரமனையும், பாணாசுர யுத்தத்தில் சிவனையும் வெற்றிக் கண்டீர். பரமனே! இந்த அவதாரத்தில் தேவர் களையும் கடவுளர்களையும் வெற்றி கொண்ட மகிமை சுடர்விட்டுப் பிரகாசித்தது. (9)

பிராமணர் கோபத்தால் பச்சோந்தியாக மாறக் கடவது என்று சபிக்கப்பட்ட நிருகு என்பான், தங்களால் தூய்மைப்படுத்தப்பட்டு விண்ணுலகத்திற்கு அனுப்பப் பட்டான். குருவாயூரப்பா! புனிதமானவர்கள் அறியும்படி அருள்புரிந்தவனே! என்னைக் காப்பாற்றி அருள் புரிய வேண்டுகிறேன். (10)

# தசகம் - 83

## பௌண்ட்ரகன் முக்தி

துவாரகை விட்டு நீங்கி கோகுலம் வந்தடைந்த பலராமர், தமது கலப்பையால் யமுனை ஆற்றைத் திசை திருப்பி நீர் விளையாட்டுகளுக்கான வழிவகை செய்தார். அப்பொழுது தருஷ நாட்டின் மன்னன் பௌண்ட்ரக வாசு தேவன் என்பவரிடம் இருந்து ஒரு தூதன் வந்தான். (1)

நான்தான் பூவுலகில் அவதரித்துள்ள நாராயணன். என்னுடைய தெய்வீகச் சின்னங்களான சங்கு சக்கரம் ஆகியவற்றை நீங்களும் தாங்கி இருப்பதாகத் தெரிகின்றது. அவற்றைக் கைவிட்டு என்னிடம் அடங்கி வாழ வேண்டும் என்று அந்தத் தூதன் உம்மிடம் கூறியதைக் கேட்டு கூடியிருந்த அனைவரும் நகைத்தனர். (2)

தூதுவன் விடைபெற்றுச் சென்றபின், யாதவர் படையுடன் பௌண்டரகன் தலைநகரம் சென்றீர். அங்கே தங்களைப் போலவே போலியாக உருவம் பெற்றிருந்த பௌண்ட்ரகனைக் கண்டீர். தங்களது மார்பில் உள்ள ஸ்ரீவத்ஸம்என்ற மருவைப்போலவே அவனுடைய மார்பில் தீயினால் ஏற்பட்ட வடு ஒன்று இருந்தது. கௌஸ்துப மணிமாலைக்குப் பதிலாக அவனுடைய கழுத்தைச் சுற்றிலும் விலை உயர்ந்த மணிமாலை இருந்தது. காதுகளில் மகர குண்டலங்களுடன் பீதாம்பரம் தரித்திருந்தான். (3)

தனது இரும்பாலான சக்கரத்தை தங்கள் மீது பௌண்ட்ரகன் எறிந்ததும், தங்களது சுதர்சனச் சக்கரத்தால் அவனுடைய சிரசைத் துண்டித்தீர். விண்ணும் மண்ணும் அதிர நெருப்புப் பொறிகள் பறக்க சுதர்சனம் சுழன்றது. அவனுடைய படையை நிர்மூலம் செய்ததுடன் அவனுக்குத் துணை வந்த காசிராஜன் தலையையும் வெட்டி காசியிலே போய் விழச் செய்தீர். (4)

முட்டாள்தனமாக, சிறுவர்களின் விளையாட்டுப் பேச்சை மெய்யென்று நம்பி, அவன் தன்னை உண்மை யாகவே வாசுதேவன் என்று நினைத்துக்கொண்டான். நெடுநாட்களாகவே உறுதியாக அவன் அப்படி நம்பிக் கொண்டிருந்தான். அப்படி உம்முடனே ஒன்றுபட்ட நினைப்பால் அவன் சாயுஜ்ய பதவியை அடைந்தான். ஒரு வருக்குப் பலன் தரக்கூடிய நல்ல செயல்கள் எவ்வளவு இருக்கின்றன என்பது எவருக்குத் தெரியும். (5)

தன் தந்தை காசிராஜன் மரணத்தால் கோபம் கொண்ட அவன் மகன் சுதக்ஷினன் சிவனை வந்தித்து உபதேசம் பெற்று உம்மை அழிப்பதற்காக அபிசார யாகம் செய்தான். மிகவும் கொடிய சக்தி ஒன்று அந்த யாகத் திலிருந்து புறப்பட்டது. பாணாசுர யுத்தத்தில் தோற் றோடிப் போன பூதகணங்களும் அங்கிருந்து புறப்பட்டன. (6)

பனைமரம் போல் உயர்ந்த கால்களுடைய கிருத்யா என்ற கொடிய சக்தி வழியில் தென்பட்ட யாவற்றையும் எரித்து அழித்து வருவதைக் கண்ட நகர மக்கள் பீதியுடன் இந்த அபாயத்தைப் பற்றி தங்களிடம் தெரிவித்தனர். பகடையாடிக் கொண்டிருந்த நீர் சிறிதும் சலனப்படாமல் அருகில் இருந்த உமது சுதர்சன சக்கரத்தை ஏவினீர். (7)

சொல்ல முடியாத ஒளிவீசி வரும் சுதர்சன சக்கரத் தைக் கண்ட அந்த கொடிய சக்தி அரண்டு அரற்றி திரும்பி ஓடி அந்தச் சுதக்ஷினனையே எரித்து அழித்துவிட்டது. (8)

ராமாவதாரத்தின்போது, அரக்கர்களை அழிக்க உமக்கு உதவி செய்த விவிதன் என்ற வானரம் உமது மற்றொரு அம்சமானபலராமரால் கொல்லப்படவேண்டும் என்று விரும்பியது. அதனால் கொடியவன் வடிவம் தாங்கி துவாரகைக்கு அருகில் உள்ள மக்களுக்குத் தீங்கு செய்தது. அதனால் அதனுடன் போர் புரிய வந்த பலராமன் தமது கரத்தால் ஓங்கி அடித்து அதனைக் கொன்று விட்டார். (9)

அத்தினாபுரத்தை அழித்து விடுவதாக அச்சுறுத்து வதன் மூலம் கௌரவர்களால் சிறை வைக்கப்பட்டிருந்த சம்பரன் என்பானை விடுதலை செய்யுமாறு பலராமன் செய்தார். துரியோதனின் மகள் இலக்ஷ்ணையின் சுயம் வரத்தின்போது, சம்பரன் அவளை சிறையெடுத்தவன். கௌரவர்கள் பாண்டவர்களால் அழிக்கப்படவேண்டிய வர்கள் என்பதால் அவர்களுக்கு எதிராக யாதவ சேனையை நீர் அனுப்பவில்லை. உம்முடைய விளையாட்டு களின் தன்மை என்னவென்று யாரால் கூறமுடியும்? குருவாயூரப்பா! என்னுடைய கடும் பிணிகளைப் போக்கிக் காப்பாற்றி அருள் புரிய வேண்டுகிறேன். (10)

## தசகம் - 84

### சமந்த பஞ்சகத்திற்கு யாத்திரை

ஒருமுறை, சூரியகிரகணத்தின்போது, துவாரகையை கிருதவர்மன் மற்றும் பிரத்யுமனன் ஆகியவரின் பொறுப் பில் விட்டு, யாதவ குல மக்களுடனும் மகளிருடனும் சமந்தபஞ்சகம் என்ற புனித இடத்திற்குச் சென்றீர். (1)

அங்கே கூடியுள்ள மக்களின் நன்மைக்காக அங்கே நீராடி அந்த நீராடும் இடத்தை புனிதப்படுத்தினீர். அந்தணர்களுக்கு அளவற்ற செல்வத்தைத் தானமாகக் கொடுத்தீர். பின்னர் அங்கே வந்திருந்த தங்கள் நண்பர் களான பாண்டவர்கள் கௌரவர்கள் மற்றவர்கள் ஆகியோருடன் கலந்து உரையாடினீர். (2)

அங்கே பாண்டவர்களின் பத்தினியாகிய திரௌபதி, உமக்கு மிகவும் நெருங்கிய அடியவள், உமது மனைவி யருடன் மற்ற பெண்களுடனும் கலந்து எப்படி எப்படி எல்லாம் அவர்களை மணம் புரிந்து வந்தீர் என்ற செய்தி களை எல்லாம் கேட்டு மகிழ்ந்தாள். (3)

ஆயர்களைக் கண்டு அவர்களை மகிழ்ச்சியுடன் நெருங்கி அன்புடன் உரையாடினீர். தங்கள் பிரிவால் பெரிதும் மெலிவுற்ற கோபியர்களைச் சந்தித்துப் பேசி மகிழ்ந்தீர். (4)

உங்களைப் பிரிந்ததால் ஏற்பட்ட வருத்தம், உங்களைக் கண்டவுடன் பறந்தோடி விட்டது. உள்ளத்தில் பொங்கி எழும் உவகையால் அவர்களுடைய மார்புக் கச்சுகள் இற்று விழுந்தன. அவர்கள் கொங்கைகள் பூரித்து எழுந்தன. அவற்றை ஆசையுடன் இறுக அணைத்துக் கொண்டீர் (5)

அடிக்கடி பகைவர்களுடன் போர்புரியச் செல்வதால் உங்களை சந்திக்க முடிவதில்லை என்று கூறியபடி உமக்கு மிகவும் இனியவளான ராதையைத் தழுவினீர். அடக்க முடியாத காதலால் அவளும் உங்களுடன் ஒன்றி விட்டாள். (6)

தங்களைப் பிரிந்ததால் துயருற்றிருந்த கோபியரின் ஊடலைப் போக்கியதும் தங்களைப் பற்றிய உண்மையை அறியும் அறிவு பெறுமாறு அவர்களை ஆசீர்வதித்தீர். அவர்களுக்குள்ளேயே என்றும் உறைந்து கொண்டிருக்கும் பரம்பொருள் நீர் தான் என்பதனை அவர்களுக்கு அறிவுறுத்தினீர். ஆகவே என்றும் பிரிவில்லை; ஒருங்கிணைந்து இருக்கிறோம் என்ற உணர்வு பெறச் செய்தீர். (7)

முன்னொரு முறை உத்தவர் மூலம் அளித்த உபதேசப்படி, பிரிவால் ஏற்படும் காதல் துயரமும் களிப்பை ஊட்டக் கூடியதே என்பதை உணர்ந்தனர். ஆனால் இன்றைய உபதேசப்படி பிரமத்தாரும் பிரிவிலும் இணைப்பிலும் ஒன்றியிருக்கும் பேறு பெற்ற பெருமை அடைந்தனர். (8)

தங்களது தந்தையான வாசுதேவர் பாவங்களை களைவதற்கு எத்தகைய நற்சடங்குகள் செய்யப்பட வேண்டும் என்று முனிவர்களைக் கேட்டார். உம்மை

மகனாகப் பெற்றவரிடம் தோன்றிய ஐயத்தைப் பற்றி முனிவர்களுக்குச் சிரிப்பு வந்தாலும், அத்தகைய காரியங்களுக்காக செய்யப்பட வேண்டிய முறையான வேள்விகளைப் பற்றி அவருக்கு எடுத்துரைத்தனர். (9)

அத்தகைய வேள்விகள் மூன்று மாதங்கள் தொடர்ந்து நடைபெற்று முடியும் வரையில் ஆயர்குடி மக்கள் யாதவர்களின் விருந்தினராக அங்கேயே தங்கி இருந்தனர். மற்ற நண்பர்களும் உறவினரும் விழாக்கோலம் பூண்டு அங்கே கூடி மகிழ்ந்தனர். உம்முடைய உறவு முன்பு போல அவர்களுக்கு மீண்டும் கிடைத்தது. (10)

விடைபெற்றுச் செல்லும்போது, ராதையைக் கட்டி அணைத்தபோது, பிரிவுத் துயரம் அவள் உள்ளத்தை விட்டு நீங்கிவிட்டதை உணர்ந்தீர். ஏனெனில் என்றும் அவள்உள்ளத்தில் நீர் குடியிருப்பதை உணர்ந்து விட்டாள். நகரத்துக்குத் திரும்பிச் சென்ற குருவாயூரப்பனே! என்னைக் காப்பாற்றி அருள் புரிய வேண்டுகிறேன். (11)

## தசகம் - 85

### ராஜசூய யாகம்

பரமனே! அரச குடும்பங்களைச் சேர்ந்த இருபதினாயிரத்து எண்ணூறு பேர், ஜராசந்தனுடைய சிறையில் அல்லல்பட்டுக் கொண்டிருந்தனர். அடக்கப்பட்டவர்களுக்கும் ஒடுக்கப்பட்டவர்களுக்கும் ஒரே கதியான உம்மிடத்தில் மகத நாட்டு மன்னன் ஜராசந்தனை அழித்துக் காப்பாற்றும்படி வேண்டுகோள் விடுக்கப்பட்டது. (1)

மகத நாட்டு மன்னனுக்கு எதிராக நடவடிக்கை எடுப்பதற்கு முனைந்திருந்தபோது மகாமுனிவர் நாரதர் ராஜசூயம் நடத்துவதற்கான முயற்சியில் யுதிஷ்டிரர் (தருமா) ஈடுபட்டிருப்பதாகச் சேதி சொன்னார். இவ்விரண்டில் எதைச் செய்வது என்று புரியாது திகைத்து இருந்தீர். இரண்டையும் ஒரே சமயத்தில் முடிக்கலாம் என்று உத்தவர் உரைத்த ஆலோசனையின் பேரில் உமது படையினருடன் யுதிஷ்டிரரின் தலைநகரம் சென்றடைந்தீர். ராஜசூய யாகமே எதிரிகள் அனைவரும் முறியடித்த பின்னரே நடத்தப்பட வேண்டியதாகும். (2)

தாங்கள் தங்களது பதினாறாயிரத்து எட்டு மனைவியருடன் யுதிஷ்டிரரின் தலைநகரம் போய்ச் சேர்ந்தீர். தங்களது அருட் பார்வையால் அதிகம் பலம் பெற்ற தருமரின் சகோதரர் அக்கம்பக்கத்திலுள்ள நாடுகளையும் அளவற்ற செல்வங்களையும் கைப்பற்றி யாகத்திற்கு வேண்டிய முன்னேற்பாடுகளைச் செய்து விட்டார். அடியார்க்கு அடியவனான உம்மைத் தமது சகோதரர்கள் அருச்சுனன் பீமன் ஆகியவருடன் சேர்ந்து மகத நாட்டை சார்ந்த ஜராசந்தனை அடக்குமாறு தருமர் கேட்டார். (3)

பரமனே! அவர் கேட்டுக் கொண்டபடியே, அர்ச்சுனன் பீமன் ஆகியவருடன் சேர்ந்து ஜராசந்தனின் தலைநகரமான கிரிவிரஜம் என்ற நகரத்திற்கு சென்றீர். மூன்று பிராமணர்களைப் போல் உருமாறி ஜராசந்தனிடம், காண்பவர், களிக்கும் ஒரு போட்டியை நடத்துமாறு வேண்டினீர் தங்கள் கரத்தால் மரணமுறும் பேறு கிட்டாத ஜராசந்தன், தன்னோடு மோதுவதற்குப் பீமனைத் தேர்ந்தெடுத்தான். நீங்களும் அர்ச்சுனனும் பார்வையாளராக இருந்தீர்கள். அரச குலச் சிம்மங்களான அவ்விருவரும் பொருதுவதைக் காண்க காத்திருந்தீர்கள். (4)

நீண்ட நேரம் நடைபெற்ற பயங்கரமான அந்தச் சண்டையில் ஜராசந்தன் எக்களிப்போடு ஈடுபட்டான். அப்போது ஒரு குச்சியை இரண்டாக உடைத்து பீமனுக்குச் சாடைக் காட்டினீர். ஜராசந்தனை இருகூறுகளாகப் பிளந்தால்தான் அவனைக் கொல்ல முடியும் என்பதே அதன் அர்த்தம். பீமன் அப்படியே செய்து அவனைக் தரையில் வீழ்த்தினான். சிறையில் இருந்த மன்னர்கள் அனைவரும் விடுவிக்கப்பட்டனர். பக்தி அவர்களுக்கு அருளப்பட்டது. அதனால் உலக விஷயங்களில் அவர்களுக்கு ஈடுபாடு குறைந்தது. எனினும் உலகில் தர்மத்தைக் காப்பதற்காக அவரவர்கள் நாடுகள் அவரவர்களுக்கு அளிக்கப்பட்டது. (5)

தருமர், ராஜசூய யாகத்தை துவங்கினார். அங்கு வந்திருந்த அரசர்கள் அனைவரும் மிகுந்த மகிழ்ச்சியுடன் தங்களுக்கு இடப்பட்ட ஏவல்களைச் செய்தனர். விருந்தினராக வந்திருந்த அந்தணர்களுக்கு பாத பூஜை செய்யும் பணி உமக்கு அளிக்கப்பட்டது. தருமருக்கு எத்தகைய நல்ல அதிர்ஷ்டம் கிடைத்தது. (6)

வேள்வியின் முக்கிய கட்டமான, சகாதேவனுடைய ஆலோசனைப்படி உயர்ந்தோருக்குப் உரிய அக்ரபூஜைக்கு உகந்த நபராக உம்மைத் தேர்ந்தெடுத்துப் பூஜையை துவக்கினர். அந்த பூஜையினால், உலகில் உள்ள ஆன்மாக்கள் அனைத்தும் மனநிறைவு பெற்றன. (7)

செடிகளின் அரசனான சிசுபாலன், தனது ஆசனத்திலிருந்து குதித்து எழுந்து ஆயுதம் தாங்கிய கையோடு உம்மை இழித்தும் பழித்தும் பேசலானான் ''முனிபுங்கவர்களும் மாமன்னர்களும் கூடியுள்ள இந்த மண்டபத்தில், எந்த மடையன், இந்தக் குள்ள உருவம் படைத்தவனை, இடையனை மற்றும் ஊழலின் மொத்த

உருவமானவனை, மரியாதைக்குரியவன் என்று தேர்ந்தெடுப்பான்? இதைக்கேட்ட பாண்டுவின் மைந்தர், அவனை எதிர்த்து முன் வந்தனர். (8)

துணை புரிய வந்த பாண்டவரைப் புறத்தே ஒதுக்கி விட்டு, எதிரியை நோக்கிச் சென்ற நீர், உமது தெய்வீகச் சக்ராயுதத்தால் அவனது சிரசை அறுத்துத் தள்ளி விட்டீர். எதிர்ப்பின் மூலம் உம்மைப் பற்றிக் கண நேரமாவது நினைக்கின்ற பேறு பெற்றதால், இரண்யகசிபு, இராவணன் மற்றும் சிசுபாலன் என்று மூன்று பிறவிகளில் உம்மைத் எதிர்த்துத் தூய்மை பெற்றதால், உம்மோடு ஒன்றிவிட்டான். மகாயோகிகளுக்கு கூட அத்தகைய பேறு கிடைப்பதரிது. (9)

மிகவும் புனிதமானதும் வேள்விகளிலேயே மிகவும் உயர்ந்ததும் ஆகிய ராஜசூய யாகம் முடிவடைந்த பின்னர், அனைவரும் தங்களையும் தருமரையும் பாராட்டிய வண்ணம் சென்றனர். ஆனால் தன் எதிரிகளின் கீர்த்தியைப் பார்த்துக் கெட்டமனம் படைத்த துரியோதனன் பொறாமையால் வெந்து மனம் புழுங்கினான். அத்துடன் பாண்டவர்களுக்காக தேவதச்சன் மயனால் கட்டப்பட்ட மண்டபத்தில், நீருக்கும் நிலத்திற்கும் வேறுபாடு தெரியாமல் திகைத்து மனம் குழம்பியதால் ஏற்பட்ட வெறுப்புணர்ச்சி வேறு அவனை ஆக்கிரமித்தது. (10)

பரமனே! அந்தக் குழப்பத்தில் கால் இடறி நீரில் விழுந்த துரியோதனனைப் பார்த்து பீமனும் துரோபதியும் வாய்விட்டு உரக்கச் சிரித்தனர். அவர்களது சிரிப்பைக் கடைக்கண் பார்வை அசைவால் அங்கீகரித்தவனே! குருவாயூரப்பனே! இந்த அடியவனை பிணிகளிலிருந்து காப்பாற்றி அருள் புரிய வேண்டுகிறேன். (11)

# தசகம் - 86

## குருக்ஷேத்திர யுத்தம்

சால்வர்களின் அரசன், மந்திர தந்திர யுத்தத்தில் வல்லவன். ருக்மிணி சிறை எடுக்கப்பட்ட போது யாதவர்களால் யுத்தத்தில் தோற்கடிக்கப்பட்டவன், சிவபெருமானைத் தவம் செய்து வேண்டி விண்ணில் விரைந்து செல்லும் சௌபா என்ற தேரைப் பெற்றவன். ராஜசூய யாகத்திற்காக நீங்கள் சென்றிருந்தபோது அவன் துவாரகை மீது படை எடுத்துத் தாக்கினான். பிரத்யும்னன் தலைமையில் போரிட்ட யாதவர் படை எதிர்த்துக் கடுமையாகப் போராடியது. இருபத்தியேழு நாட்கள் நீடிதத அந்த யுத்தத்தில் சால்வனின் முதல் அமைச்சரான த்யும்நன் என்பவன் கொல்லப்பட்டான். (1)

படையெடுத்து வந்தவர்களில் பெரும்பாலானோர் அழிக்கப்பட்டு விட்டனர். பலராமருடன் துவாரகைக்கு விரைந்து வந்த நீர், மந்திர தந்திர யுத்தத்தில் வல்லவனான சால்வனைச் சந்தித்தீர். தனது மந்திர சக்தியால், அவன் தங்கள் கரத்தில் இருந்த சாரங்கம் என்ற வில்லை மறையச் செய்தான். தங்கள் தந்தையைப் போன்ற ஒரு உருவைச் செய்து அதன் சிரசைத் துண்டித்தான். மாயாவாதியான நீரே அவனது மாயையால் பீடிக்கப்பட்டுவிட்டீர் என்று சிலர் சொல்வர். ஆனால் அதனை வியாச முனிவர் பாகவதத்தில் மறுத்திருக்கிறார். (2)

விண்வெளி ரதமான சௌபா, கதையால் தாக்கி உடைக்கப்பட்டு கடலில் வீழ்த்தப்பட்டது. சால்வனின் தலை தங்களது சுதர்சனச் சக்கரத்தால் துண்டிக்கப் பட்டது. உடனே சிசுபாலனின் நண்பனான தந்தவக்ரன்

என்பவன் தன்னுடைய கதாயுதத்தால் தங்களைத் தாக்கினான். ஆனால் தங்களுடைய கதை கோமோதகியால் அவன் தாக்கி அழிக்கப்பட்டான். சிசுபாலனைப் போல அவனும் கொலலப்பட்டான். கொல்லப்பட்டவர்கள் அனைவரும் உம்மிடத்திலேயே சங்கமம் ஆகினர். கிருஷ்ணாதவாரமே, தங்களிடத்தில் அன்பு அச்சம் அல்லது வெறுப்பு ஆகிய ஏதேனும் ஒன்றின் மூலம் உம்மிடத்திலே தத்தம் மனதைச் செலுத்தியவருக்கு முக்தி அளிப்பதற்கென்றே எடுக்கப்பட்டதாகும் என்றால் இதனின்றும் வேறு விந்தையுண்டோ? (3)

இந்திரப் பிரஸ்தத்திலே இருந்து தாங்கள் திரும்பி வந்த பிறகு, பாண்டவர்களுக்கும் கௌரவர்களுக்கும் இடையே சூதாட்டம் நடைபெற்றது வஞ்சனையான ஆட்டத்தால் பாண்டவர்கள் தங்கள் சொத்து சுதந்திரம் உரிமை உடைமைகள் ஆகியவற்றையும் சூதில் இழந்தனர் தங்கள் மனைவியான திரௌபதியையும் சூதில் தோற்றனர். கௌரவர் திரௌபதியைப் பலபேர் கூடியுள்ள சபையில் துகிலுரிந்து அவமானப்படுத்தினர். பெருங் குரலெடுத்து அழுத பாஞ்சாலி தங்களிடத்திலே உதவி செய்யுமாறு முறையிட்டு அழுதாள். உமது உதவியால் உரிக்க உரிக்க அவளுடைய துகில் வளர்ந்து கொண்டே இருந்த பின்னர் கானகத்தில் பெரிய கூட்டத்துடன் உணவுக்காக வந்த துருவாச முனிவரின் சாபத்திற்கு பாஞ்சாலி படைக்க உணவில்லையே என்று பரிதாபத்துடன் தங்களை வேண்டினாள் மீதம் இருந்த ஒரு பருக்கை உணவை உண்டு அதன் மூலம் முனிவரையும் அவருடன் வந்திருந்த பெருங்கூட்டத்தையும் பசி நீக்கிப் பாஞ்சாலியைக் காப்பாற்றினீர். (4)

காட்டிலிருந்து பாண்டவர்கள் திரும்பி வந்தவுடன், போருக்கும் சமாதானத்திற்கும் முயற்சிகள் எடுக்கப்பட்டன. அர்ச்சுனனின் வேண்டுகோளை ஏற்று

பாண்டவர்களுக்கு துணையாக இருக்க ஒத்துக் கொண்டு, உமது படைகளை கௌரவர்களுக்கு உதவியாக அளித்தீர் கௌரவர்களின் தலைநகரமான அத்தினாபுரத்திற்குச் சமாதானத் தூது சென்றீர். பீஷ்மர், துரோணர் போன்ற பெரியவர்கள் அதனை ஏற்றுக் கொண்டாலும், துரியோதனன் ஏற்க மறுத்தான். அந்த நேரத்தில் விஸ்வரூபம் எடுத்துக் காட்சி தந்து அத்தினாபுரத்தையே கிடுகிடுக்க வைத்தீர். (5)

கண்ணா! அர்ச்சுனனின் தேரோட்டியாக, சகோதரர் களுக்கு இடையே ஏற்படும் யுத்தத்தின் கோரத்தை எண்ணி மனம் தளர்ந்த பார்த்தனுக்கு, "நண்பனே! ஆத்மா என்பது என்றென்றும் அழியாது நிலைத்து நிற்கக் கூடியதாகும். எனவே கொல்பவன் கொல்லப்படுபவன் என்று எவரும் இல்லை. மரணத்தைப் பற்றியும் உயிர்க் கொலையைப் பற்றியும் அச்சம் கொள்வதே வீண். என்னைச் சரண் புகுந்து, நேர்மையான இந்த யுத்தத்தில் ஈடுபடுவாயாக! என்று உபதேசம் செய்தீர். அவனுக்கு உமது மகத்தான விசுவரூப தரிசனம் காட்டி மனச் சாந்தி அடையச் செய்தீர். (6)

யுத்தம் துவங்கியவுடன், உலகத்தின் பாரத்தைக் குறைப்பது என்ற உமது நோக்கத்தை நிறைவேற்றுவதற் காக, பீஷ்மர், நாள்தோறும் பத்தாயிரத்துக்கும் மேற்பட்ட அரச குல வீரர்களை வதம் செய்தார். அவரை எதிர்த்துப் போராடிய அருச்சுனன், மயங்கிச் சாய்ந்தான். போரில் ஆயுதம் ஏற்கமாட்டேன் என்று செய்துள்ள சபதத்தை மறந்து விட்டது போலக் கோபத்துடன் உமது சுதர்சனச் சக்கரத்தைக் கையில் ஏந்தி பீஷ்மரைக் கொல்ல கிளம்பி னீர். ஆனால் பீஷ்மர் தலைகுனிந்து உம்மை வணங்கிக் கிடந்த நிலையைக் கண்டதும் பின்வாங்கினீர். உம்மைக் காட்டிலும் உமது அடியவரின் சபதம் வெற்றி பெற்றது கண்டு மெத்த மகிழ்ச்சி அடைந்தீர். (7)

துரோணர் போருக்குத் தலை தாங்கி வந்தபோது, பகதத்தன் ஏவிய வைஷ்ணவை ஏவுகணையைத் தங்கள் மார்பில் தாங்கிக் கொண்டீர். அவன் நான்கு தந்தங்களை உடைய யானையின் மீது பாதுகாப்பாக அமர்ந்து கொண்டு போர் புரிந்தான் அபிமன்யுவை வஞ்சகமாகக் கொன்ற சிந்து நாட்டு மன்னன் ஜயத்ரதனை அர்ச்சுனன் கொல்லும் பொருட்டுத் தங்கள் சுதர்சனச் சக்கரத்தால் சூரியனை மறைத்து செயற்கையாக மாலைப்பொழுதை உண்டாக்கினீர். கர்ணன், அருச்சுணன்மீது நாக பாசத்தைச் செலுத்தியபோது, தாங்கள் கால்பெரு விரலால் அழுத்தி பூமிக்குள் புதையும்படி செய்து, அந்த நாகபாசம் அருச்சுணனின் கிரீடத்தை மட்டுமே தாக்கும் படி செய்தீர். அவன் தலை தப்பியது. துன்பம் நேர்ந்த போது பாண்டவர்களுக்காக நீர் செய்யாத உதவி ஏதேனும் உண்டா? (8)

போர் துவங்கப்பட்ட சமயத்தில் தீர்த்தயாத்திரை புறப்பட்டிருந்த பலராமர், முதலில் நைமிசாரண்யம் சென்று அங்கே தன்னை மதிக்காத சுதர்சனைக் கொன்றார். சுதனுடைய மகனை அந்தப் பீடத்தில் அமர்த்தினார். ஒவ்வொரு பௌர்ணமியின் போதும் அஷாவா அன்றும் முனிவர்களின் வேள்விக்கு இடைஞ்சல் செய்து வந்த பல்லவன் என்ற அசுரனை அழித்தார். பல்புண்ணிய துறைகளுக்குச் சென்று போர் முனையில் குருக்ஷேத்திரம் வந்து சேர்ந்தார். பீமனுக்கும் துரியோதனுக்கும் இடையே முடிவில்லாமல் சண்டை நடைபெறுவதைப் பார்த்து விட்டு துவாரகைக்கு திரும்பிச் சென்றார். (9)

தீயமனம் படைத்த அசுவத்தாமன், துரோணரின் மகன்; போர் முடியும் நிலையில் தங்கள் பாசறையில் உறங்கிக்கொண்டிருந்த திரௌபதியின் மக்களை கொன்று விட்டான். அசுவத்தாமனைத் தேடிக் காலையில் புறப் பட்ட அருச்சுணன், தங்கள் உத்தரவுப்படி போரில்

இருந்து மீண்டு வந்தான். அவன் விடுத்த பிரமபாசம் அவனுடைய சிகாமணியைத் துன்புறுத்தித் திரும்பி வந்தது, மீண்டும் பிரம்மபாசத்தை விடுத்தான் பாண்டவரின் மருமகளான உத்தரையின் கருவில் இருந்த சிசுவை அழிப்பதன் மூலம் பாண்டவரின் வம்சாவளியையே நிர்மூலமாக்குவதற்காக அப்படிச் செய்தான். ஆனால் தாங்கள் கட்டை விரல் வடிவில் உத்தரையின் கருப்பைக் குள் சென்று சுதர்சனச் சக்கரத்துடன் காத்திருந்தீர். (10)

யுதிஷ்டிரருக்கு தருமத்தைப் பற்றிய உபதேசங்களை செய்த பீஷ்மர் விரும்பிய நேரத்தில் மரணத்தை அடையும் சக்தியை பெற்றவர் உமது முன்னிலையில் பக்தி நெறியின் உச்சகட்டத்தில் உயிர் துறந்து பிரிக்கப்பட முடியாத பிரம நிலையை அடைந்தார். மூன்று பெரிய அசுவமேத யாகங்களைச் செய்யுமாறு யுதிஷ்டிரருக்கு உதவி செய்த பின்னர் துவாரகைக்குத் திரும்பினீர். அத்தகைய பெருஞ் செயல்கள் அனைத்தும் புரிந்த குருவாயூரப்பா! அடியேனைக் காப்பாற்றி அருள் புரிய வேண்டுகிறேன். (11)

## தசகம் - 87

### குசேலர் சரிதை

காந்தீபனி என்ற குருகுலத்தில் உங்களோடு குசேலன் என்ற பிராமணன் கல்வி பயின்றான். கிரகஸ்தனாக மாறிய குசேலர் எப்பொழுதும் உம்மையே நினைத்துப் பக்தி பூண்டு வந்தார். செல்வம் பற்றிச் சிறிதும் கவலைப் படாமல் புலன்களை அடக்கி தன் மனதை உம்மிடத் திலேயே ஒருமுகப்படுத்தி வைத்திருந்தார். (1)

அவரது மனைவியும் அவரைப் போலவே குணநலன் களும் பக்தியும் உடையவளாக இருந்தாலும் ஆசையை

அடக்கி வாழக் கற்கவில்லை. வாழ்க்கைப் பொருளுக்காக லட்சுமியின் நாயகனாகிய கண்ணனை அணுக வேண்டும் என்று தன் கணவனைக் கேட்டுக் கொண்டிருந்தாள். (2)

பசிகொண்ட மனைவியின் சொற்களைக் கேட்ட குசேலர் செல்வத்தால் அடையும் சிறுமையையும் கர்வத்தையும் உணர்ந்திருந்தாலும் உம்மைச் சந்திக்க வேண்டும் என்ற ஆவலால் உந்தப்பட்டு நீர் இருக்கும் இடத்தை நாடி வந்தார். உமக்கு ஒரு பிடி அவலும் காணிக்கையாக எடுத்து வந்தார். (3)

அழகிய தலைநகரத்தை அடைந்ததும், தங்களது மனைவி மித்திரவிந்தையின் மாளிகைக்கு வந்தார் வைகுந்தத்தில் இருப்பதைப் போன்ற மன அமைதியை அடைந்தார். அவள் வரவேற்று நீங்கள் உபசரித்தவுடன் விவரிக்க முடியாத ஆனந்தம் கொண்டார். (4)

இன்முகம் கூறி வரவேற்கப்பட்ட குசேலர் சௌகரியமான ஆசனத்தில் அமர்ந்திருக்க, உமது மனைவி அவருக்கு விசிறி வீசிப் பணி புரிந்தார். அவரது கரங்களை உமது கரத்தால் பற்றியபடி கடந்தகால நிகழ்ச்சிகளை நினைவுக்கு கொண்டு வந்து நேரம் போவது தெரியாமல் இருவரும் பேசிக் கொண்டிருந்தீர்கள். குருபத்தினிக்காக விறகு கொண்டு வர கானகம் சென்று கடும் மழையில் சிக்கி நனைந்ததைப் பற்றி விரிவாக உரையாடிக் கொண்டிருந்தீர்கள். (5)

வெட்கத்தால், கொண்டு வந்த ஒரு பிடி அவலைக் கொடுக்கத் தயங்கியவரிடம் இருந்து பிடுங்கி ஒரு பிடி உண்டு மறுபடியும் உண்ணப்போகும் முன் ருக்மிணி, ''போதும், போதும் உங்கள் தாராளம்'' என்று தடுத்து விட்டார். (6)

ஓரிரவு முழுவதும் துவாரகையில் மகிழ்ச்சியுடன் இருந்து அடியவர்க்கு அடியவனாகிய உம்மால் மற்றும் உமது மனைவியராலும் பெரிதும் உபசரிக்கப்பட்ட குசேலர், மறுநாள் காலையில் எவ்விதப் பரிசும் உம்மிடத்தில் இருந்து பெறாமல் ஊருக்குப் புறப்பட்டார். உமது அடியவருக்கு நீர் ஆசி வழங்கும் முறைகளே வினோதமானவைகளாகும். (7)

'செல்வம் வேண்டும் என்று நான் கேட்டிருந்தால், மறுக்காமல் கண்ணன் எனக்கு வழங்கியிருப்பார்; என் மனைவிக்கு என்ன பதில் கூறுவது? என்ற சிந்தனையில் ஆழ்ந்தபடி குசேலர் மெல்ல நடந்தார். அவரது நினைவில் உமது உல்லாசப் பேச்சுக்களே நிறைந்திருந்தன. சிரித்த முகமும் சிங்கார விளையாட்டும் மனதில் குடிகொண்டிருந்தன. நடந்தபடி அவர் ஒரு பெரிய மாளிகையைச் சென்றடைந்தார். (8)

ஒரு கணம் வழிதவறி வந்து விட்டோமோ என்று திகைப்படைந்தார். ஆனால் அந்த மாளிகை தமது இல்லம்தான் என்று தெளிவு பெற்று உள்ளே நுழைந்தார். உள்ளே சென்றதும் பாங்கிமார் புடை சூழ விலை உயர்ந்த ஆபரணங்கள் பல அணிந்திருக்கும் தமது மனைவியைக் கண்டு அதிர்ச்சியுற்றார். பிறகு அனைத்தும் உமது அருளால் கிட்டியவை என்று மனத் தெளிவடைந்தார். (9)

இதுகாறும் ஏழ்மையில் குடிசையில் உழன்ற குசேலர், அழகிய முற்றங்கள் நிறைந்த மாட மாளிகைக்குச் சொந்தக்காரரானார். ஆனால் அவருடைய மனம் எப்போதும் போல் இறைவனுடைய நினைப்பிலேயே ஆழ்ந்திருந்தது. அதனால் விரைவில் விடுதலை பெற்றார். அடியவர்களின் வேட்கையை அவ்வப்போது நிறைவேற்றி வைக்கும் கோவிந்தா குருவாயூரப்பா! அடியேனையும் காப்பாற்றி அருள் புரிய வேண்டுகிறேன். (10)

# தசகம் - 88

## மாண்ட குழந்தைகளை மீட்டல்

தங்கள் குருவின் மாண்ட குழந்தைகளை உயிர் பிழைக்கச் செய்ததைப் பற்றிக் கேள்விப்பட்ட தங்கள் தாய், தங்களுக்கு முன்பிறந்த ஆறு குழந்தைகளையும் காட்ட வேண்டும் என்று விரும்பினார். அதனால் சுதல லோகம் சென்றீர். பலி உங்களை வரவேற்று மரியாதை செய்தான். அந்த ஆறு குழந்தைகளும் முதலில் மாரீசிக்குத் தோன்றியவர்கள். பிரமனுடைய சாபத்தால் முதலில் இரண்யகசிபின் மக்களாகப் பிறந்து பிறகு வசுதேவர் மூலமாக தேவகியின் வயிற்றில் பிறந்தனர். அவர்கள் அனைவரும் பிறந்தவுடன் கம்சனால் கொல்லப்பட்டனர். அந்தக் குழந்தைகளைப் பெற்றெடுத்த தேவகியுடன் காட்டிய பின்னர் வைகுண்டம் சேர்ந்தனர். (1)

சுருததேவன் என்ற புகழ்பெற்ற அந்தணனுக்கும் பக்தியில் மேம்பட்ட பகுலஸ்வன் என்ற மன்னவனுக்கும் ஒரே நேரத்தில் அருள் புரிய வேண்டுமென்பதற்காக, முனிவர்களுடன் மிதிலை சென்றடைந்தீர். (2)

ஒரே மாதிரியான இரண்டு வடிவங்களை எடுத்துக் கொண்டு ஒரே நேரத்தில் அவர்கள் இருவர் முன்னும் தோன்றினீர். மன்னன் விலை உயர்ந்த காணிக்கைகளைக் கொடுத்தான். அந்தணனோ தன்னால் அன்றைய தினம் சேகரிக்கப்பட்ட பழங்கள் சமைத்த அன்னம் ஆகியவற்றை அளித்தான். இரண்டையும் மகிழ்ச்சியுடன் ஏற்றுக் கொண்டு இருவருக்கும் முக்தி அளிக்கப்பட்டது. (3)

துவாரகையில் ஒரு பிராமணனுக்கு ஒன்றன்பின் ஒன்றாய்ப் பிறந்த குழந்தைகள் அனைவரும் மாண்டு விட்டனர். அழுகுரல் எடுத்து அரற்றிய அந்தத் தந்தைக்குப் பரிகாரம் ஏதும் அளிக்காமல் இவையாவும் விதியின் செயல்

அதை வெல்ல முடியாது என்று ஆறுதல் கூறினீர். உலகத்தின் நாயகனாகிய நீர் விரும்பியதை விரும்பிய வண்ணம் செய்யக் கூடும்; அருச்சுனனின் அகங்காரத்தைப் போக்கி அவனுக்கு மெய்யறிவு ஏற்பட வேண்டும் என்பதற்காக அப்படிச் செய்தீர். உம்மைச் சாதாரண மனிதன் என்று நினைத்து வந்தவனுடைய உள்ளத்தில் வைகுந்தத்தையே உமது தெய்வீக சக்தியால் காட்டியதன் மூலம் அவனுடைய மெய்ஞ்ஞானத்திற்குத் தடையாக இருந்தவை அனைத்தும் அகற்றப்பட்டு விட்டன. (4)

தொடர்ச்சியாக எட்டுக் குழந்தைகளை இழந்த பின்னரும் அந்தப் பிராமணனுக்கு தாங்கள் எவ்வித உதவியும் செய்யவில்லை என்பதுபற்றி ஊரில் பலவாறாகப் பேசிக் கொண்டனர். அந்த நேரத்தில் அருச்சுனனின் நட்புரிமையில் தங்களைக் காண்பதற்காகத் துவாரகைக்கு வந்தான். தனது ஒன்பதாவது குழந்தையும் மரண முற்றத்தைக் குறித்து ஓலமிட்டு அழுத பிராமணனுடைய குரலைக் கேட்டு, 'அடுத்த குழந்தை இப்படி இறக்காமல் தடுப்பேன். அப்படி இல்லையெனில் எரி தீ மூழ்கி என்னை மாய்த்துக் கொள்வேன்' என்று சபதம் செய்தான். (5)

தங்களுக்குத் தெரிவிக்காமல் அகங்காரம் படைத்த அருச்சுனன் அந்தப் பிராமணனுடைய இல்லத்திற்குச் சென்றான். அப்போது அவனுக்குப் பத்தாவது குழந்தை பிறக்க இருந்தது எனவே எவரும் உள்ளே நுழையாமல் தடுக்க அந்தப் பிரசவ அறையைச் சுற்றிலும் தன் அம்புகளால் பாதுகாப்பாகச் சுவர் எழுப்பினான். அந்தோ! பரிதாபம்! இம்முறை அக்குழந்தையும் மாண்டதோடு அதன் உடலும் மாயமாக மறைந்துவிட்டது. தனது யோக சக்தியைப் பயன்படுத்தி அருச்சுனன் அந்தக் குழந்தையைத் தேட முற்பட்டான். யமலோகம் இந்திர லோகம் ஆகிய இடங்களில் அந்தக் குழந்தையைத் தேடியும்

கிடைக்காத காரணத்தினால் சபதம் செய்தபடி எரி தீ மூட்டி அதில் பாய்ந்து தன்னை அழித்துக் கொள்ள முற்பட்டான். புன்முறுவலுடன் அப்படிச் செய்யாது அவனைத் தடுத்து விட்டீர். (6)

அருச்சுனனுடன் தேரேறி மேற்கு திசையில் விரைந்து சென்று லோக லோகம் என்ற மலைச் சரிவைத் தாண்டி எப்போதும் இருண்ட பிரதேசம் இருக்கிறது. தங்களது தெய்வீகச் சுதர்சன சக்கரத்தால், அந்த இடத்தில் ஒளி வீசச் செய்தீர். அந்த ஒளியைக் காண முடியாத அருச்சுன னுக்கு அஞ்ஞானம் என்ற இருளால் மூடப்படாததும் சொற்களால் விவரிக்க முடியாததும் ஆகிய உமது இருப்பிடத்தைக் காட்டினீர். (7)

ஆதிசேஷனுடைய பாம்பணைமேல் பல்வேறு தெய்வீக ஆபரணங்கள் அணிந்து ஆயுதங்கள் தரித்துப் பட்டுப் பீதாம்பரம் தரித்து, திருமகளை தம் மார்பில் தாங்கி, நீலமேக வண்ணத்தில் அங்கே காட்சி தந்தார். மும்மூர்த்தி களுக்கும் மேலானவர் வேதவேதாந்தங்களின் காரமும் முடிவும் அவரே. முக்தியில் உருவானவரும் உம்மோடு அடையாளம் கண்டு கொள்ளப்படக் கூடியவரும் ஆகிய அவர் முன் தாங்களும் அருச்சுனனும் அடிபணிந்து வணங்கினீர்கள். (8)

''ஒன்றின் மற்றொன்றாகவும் அடங்கியும் தோன்று கின்ற நீங்கள் இருவரும் என்னுடைய இருவேறு வடிவங் களே உங்கள் இருவரையும் ஒன்றாகக் காண வேண்டும் என்பதற்காகவே நான் அந்த அந்தணனுடைய குழந்தை களை எடுத்துக் கொண்டேன். அவர்களை உங்களுடன் இப்போதே மீட்டுச் செல்லலாம்'' என்று கூறி வைகுண்ட வாசனாகிய ஆண்டவர் அந்தக் குழந்தைகளைத் திருப்பிக் கொடுத்தார். அவற்றை அந்த பிராமணனிடம் கொடுத்து விட்டு அருச்சுனன் தங்கள் புகழ் பாடி நின்றார். (9)

உலகத்தை மேற்கண்டவாறு பல்வேறு திருவிளையாடல்களால் மகிழ்வித்தும், விஷ்ணிகளின் குலத்தை மகாபலம் பொருந்தியதாக மாற்றியமைத்தும், பல யாகங்களை நடத்தியும், மகளிர் குலத்தை மனங்கவரும் லீலைகளால் மகிழ்ப்படுத்தியும், அண்டியிருப்பவர்களுக்கும் அடியார்களுக்கும் முக்தியை அளித்தும், அழிவில்லாப் பிரம்மாகிய தாங்கள் விஷ்ணிகளிடையே மனித உருவில் சுடர் விட்டுப் பிரகாசித்தீர். (10)

உமக்குப் பணிசெய்யும் ஆனந்தத்திலே மூழ்கித் துவாரகையிலே இருந்து வந்த நாரத முனிவரிடம், தங்களது பெருமைக்குரிய தந்தையார் ஆன்மபோதமும் ஞானமும் பெற்றார். உமது அடியவர்களில் முதல்வரான உத்தவர், அறிவில் சிறந்தவர், உம்மிடம் இருந்து நேரடியாக உபதேசம் பெற்ற ஞானம் பெற்றார். உலகத்தின் நன்மைக்காக இன்றும் உத்தவர், பத்ரிகாஸ்ரமத்தில் தங்கி இருப்பதாகக் கூறப்படுகிறது. (11)

கிருஷ்ணாவதாரத்தில் தனித்தன்மையுடனும் மிகவும் பெருமையுடனும் பிரகாசிக்கின்றீர். உலக பந்தங்களிலிருந்து மனிதர் கூட்டம் உம்மால் விடுவிக்கப்பட்டது. நட்பு, அச்சம், காதல், வெறுப்பு, காமக்கவர்ச்சி என்று பல்வேறு இயற்கை வெளிப்பாடுகளுக்கு ஏற்ப ஆத்ம ஞானம் போதிக்கப்பட்டது. அத்தகைய கண்ணா! குருவாயூரின் கோமானே! அடியேனுடைய துன்பங்களைப் போக்கிப் பக்தியில் பூரணத்துவம் பெற அருள் புரிந்து காப்பாற்ற வேண்டுகிறேன். (12)

# தசகம் - 89

## விஷ்ணு என்ற தோற்றத்தின் தனித்தன்மை

திருமகளின் நாயகனே! இவ்வுலகில் உமது அடியவர்களுக்கு எளிதில் செல்வசுகம் கிட்டுவதில்லை. ஏனெனில் வளமான வாழ்வு மனதில் அகங்காரத்தைத் தோற்றுவிக்கின்றது. அகங்காரம் பக்தியின் வளர்ச்சியைத் தடுக்கிறது. கர்வமும் தற்பெருமையும் கொண்டவர்களுக்கு அமைதியான விருப்பு வெறுப்பற்ற மனநிலையை உண்டாக்கிய பின்னரே, அவர்களுக்கு விரும்பத்தக்க பொருட்கள் அளிக்கப்படுகின்றது. ஏற்கெனவே விருப்பு வெறுப்பற்ற மனநிலையைப் பெற்று விட்டவர்கள், உடனுக்குடன் அவற்றைப் பெறுகின்றனர். உமது அடியவருக்கு என்றும் துன்பம் இல்லை; வீழ்ச்சி இல்லை. *(1)*

பரமனே! தங்களது சித்தம் செலுத்திய பாதையில் செல்பவர்களில் பலர், பிரமன், சிவன் ஆகியவரை தொழுது வருகின்றனர். வணங்குவதற்கு உகந்தவர்களாக இருப்பதைப் போலவே எளிதில் சீற்றம் அடையக் கூடியவராகவும் அவர்கள் உள்ளனர். அத்தகைய குறுகிய புத்தியில் வீழ்ந்து விடுகின்றனர். அதற்கு விருகாசுரன் ஒரு சிறந்த உதாரணம் ஆவான். *(2)*

சகுனியின் மகனான விருகாசுரன், எளிதில் வணங்குதற்குரிய கடவுள் எவர் என்று நாரதரைக் கேட்டான். அவர் உம்மைக் காட்டாது சிவனை வணங்கும்படி கூறினார். ஏனெனில் நீர் தீயவர்களை ஒருபொழுதும் ஆதரிப்பதில்லை. *(3)*

கடுமையான விரதம் பூண்டு ஏழு நாட்கள் தவம் செய்தும் சிவனைக் காண முடியாததால் கோபம் கொண்ட அசுரன், தன் சிரசைத் துண்டித்து வேள்வித்

தீயில் ஆகுதியாக அளிக்க முன் வந்தபோது, சிவபெருமான் அவன் முன் தோன்றினார். யார் தலைமேல் தான் கை வைத்தாலும் அவர் எரிந்து சாம்பலாகி விடவேண்டும் என்று கீழ்த்தரமான வரத்தைக் கேட்டான். உம்மை வணங்க மறுப்பவர்களிடம் இருந்து நல்லறிவை எப்படி எதிர்பார்க்க முடியும்? (4)

கூண்டிலிருந்து விடுவிக்கப்பட்ட சிம்மம் தன்னை விடுவித்தவனை நோக்கியே முதலில் பாய்வதைப் போல தனக்குக் கிடைத்த வரத்தை சிவனிடமே பரிசோதனை செய்து பார்க்க விரும்பினான். அந்த அசுரனிடம் இருந்து தப்புவதற்காக, பின்தொடர்ந்து வரும் அசுரனை அடிக்கடி திரும்பிப் பார்த்தபடியே சிவன் பல லோகங்களின் வழியாக ஓடினார். திகைப்புற்று இந்தக் காட்சியை உலகங்கள் யாவும் கவனித்து வந்தன. தொலைவில் இருந்து அதைக் கண்ட தாங்கள் அழகிய மோகினிப் பெண் வடிவெடுத்து அவன் முன்னால் காட்சி தந்தீர். (5)

மயக்கும் மொழிகளால் அந்த அசுரனைப் பார்த்து, பைசாசகணத்தின் வார்த்தைகளை நம்பிக் கொண்டு ஏன் வீணாக அலைகின்றாய். உனக்குச் சந்தேகமிருந்தால் உன் தலையின்மீதே உன் கைகளை, வைத்துப் பரிசோதித்துப் பார்ப்பதுதானே? என்று கூறினீர். அந்தச் சொற்களால் மயங்கிய அந்த மடையன், தன் தலையின் மீதே கைகளை வைத்து வேரற்ற மரம் போல எரிந்து விழுந்தான். மற்ற கடவுளரை வணங்குவோரின் நிலை அதுதான். சிவனுக்குக் கூட இறுதியில் சரண்புகும் கடவுள் நீர் தான். (6)

சரஸ்வதி நதிக்கரையில் வசிக்கும் முனிவர்கள், ஒரு முறை, மும்மூர்த்திகளில் எவருக்கு மிகுந்த புனிதமும் ஆன்மீக சக்தியும் இருக்கிறது என்பதைச் சோதனை செய்து பார்க்க பிரமாவின் குமாரரான பிருகு முனிவரை

அனுப்பினார்கள். பிரமன் முதலில் பிருகு முனிவரிடம் தனக்கு மரியாதை செலுத்தாததற்காகக் கோபம் கொண்டாலும், தன்னைக் கட்டுப்படுத்திக் கொண்டான். சிவனிடத்திலும் பிருகு முனிவர் அதே மாதிரி நடந்து கொள்ளக் கோபம் கொண்ட சிவன் அவரைக் கொல்ல வர பார்வதியால் தடுத்து நிறுத்தப்பட்டார். கடைசியில் உம்மை வந்தடைந்தார். (7)

தாமரைக் கண்ணனாகிய உம்மை பிருகு முனிவர் மார்பில் எட்டி உதைத்தார். திருமகளின் மடியில் தலை வைத்து உறக்கத்தில் இருந்த நீர், மகிழ்வோடு எழுந்து நின்று, அதிதியை முறைப்படி உபசரிக்காததற்காக மனம் உருகி வருத்தப்பட்டீர். உமது மார்பில் அந்த முனிவர் உதைத்த அடையாளம் என்றும் மாறாது எப்பொழுதும் அலங்கரிக்கும் என்றும் கூறினீர். (8)

பிருகு முனிவரின் அனுபவத்திலிருந்து சரஸ்வதி நதி தீரத்தில் வாழும் முனிவர்கள், நீரே மிகுந்த தெய்வீகத் தன்மை உடையவர் என்று அறிந்தனர். உம்மிடத்தில் இடையறாது பக்தி பூண்டு அவர்கள் முக்தி பெற்றனர். அழியாப் பரம்பொருளே! தத்துவ உணர்வாகிய உம்மை, அழியாப் பெருஉருவை நானும் வழிபட்டு வணங்குகிறேன். (9)

எங்கும் நிறைந்தவரே! முடிவேதும் இல்லாதவரே! குருவாயூரில் கொற்றம் செலுத்துகின்றவரே! படைப்பின் ஆரம்பத்தில் மன்னர்களை நல்லிசையால் இசைவாணர் துயிலெழுப்புவதைப் போல, வேதங்கள் உமக்குத் துதிபாடின. உம்மையே ஒன்றுபட்ட சச்சிதானந்தம் என்று போற்றினர். அப்படிப் பாராட்டப்பட்டவரே! பிருந்தாவனத்தில் உள்ள கோபியரின் ஆன்ம ஞானத்தின் உறைவிடமே அடியேனையும் உள்ளத்திலும் உடலிலும் பீடித்துள்ள பிணிகளிலிருந்து காப்பாற்றி அருள் புரிய வேண்டுகிறேன். (10)

# தசகம் - 90

## வேதத்தின் முடிவு நீயே

பரமனே! நின் புகழ் பிருகு முனிவர் விருகாசுரன், ரகினி, அம்பரீஷன் ஆகியவர்களின் சரிதங்களைக் டிலும் புகழ் பெற்றது. சிவன் முதலான கடவுளர் ளக் காட்டிலும் மேம்பட்டது. முழுமுதற் பொருளான றவனின் அம்சங்களான பிரமன் முதலானவரைக் டிலும் வேறல்ல; விளக்க முடியாதது என்று பெருமை ன் உன் திருவுருவம் திகழ்கிறது. (1)

பிரமன், விஷ்ணு, சிவன், ஈசுவரன், சதாசிவன் என்று வுளரை, ஐந்து வகையாக பிரித்துள்ளனர். சதாசிவன் ாத்ம வடிவுடையவர். ஈசுவரன் வைகுண்ட வாச ிய உம்மைக்குறிக்கும். சத்தியலோகம் பிரமன், ணு, உருத்திரன் என்று மூன்று பிரிவுகள் உடையது மன், விஷ்ணு, உருத்திரன் ஆகிய மூன்றும் ஒன்றென, கத் திகழ்கின்றனை. (2)

அந்த மும்மூர்த்திகளிலும், தூய சத்துவ குணம் டயதையே விஷ்ணு என்று கூறுகின்றனர். பிரமன் ஸ குணம் உள்ளவன். சங்கரன் தாமச குணம் வன். (3)

சுவரன் மும்மூர்த்திகளுக்கும் அப்பாற்பட்டு நிற்பவன். ஷாத்தமனாக விளங்குபவன்; உங்கள் இருவரையும் ற்றிற்கும் உரிய உருவமாகக் கருதியுள்ளனர். அப்படி ரில் அவையாவும் நீயே, உமது வடிவே என்று டக் கூடிய உண்மைகள் இருக்கின்றன. (4)

ஆதிசங்கரர், பிரமன், விஷ்ணு, உருத்திரன் ஆகிய ங்களான உம்மையே போற்றிப் பாராட்டினார். ர் நிலை தடுமாறவில்லை. உமது ஆயிரம் போற்றிக்கு

விளக்க உரை அளித்தவர்; உம்மை வழிபட்டு நற்கதி பெற்றவர்; முக்தி அடைந்தவர் ஆவார். (5)

மந்திரங்களின் துவக்கத்தில், மும்மூர்த்திகளுக்கும் மேம்பட்டவராக, அனைத்திற்கும் தலைவராக, காயாம்பூ நிறத்தை உடையவராக உம்மைச் சித்திரித்தார். பிரணவத்தின் உண்மைப் பொருளை விளக்கினார். தியாகத்தின் கருப்பொருளாக உம்மை நிலைப்படுத்தியுள்ளார். வேறு தெய்வத்தைப் பற்றி அவர் பேசவில்லை. (6)

புராணங்களின் சிறப்புக்களைக் கூறும் புராண சங்கிரகம் என்ற நூலில் உமது பெருமைகளை விளக்கமாகச் சந்தேகத்துக்கு இடமின்றிச் சொல்லப்பட்டுள்ளது. (7)

சிவ பக்தரான ஸ்ரீ மாதவர் ஹரி, சர்வமயமானவன் என்ற பெயர்களிட்டுப் புராணசாரம் என்ற தமது நூலில் போற்றியிருக்கிறார். பிரம்ம கற்பத்தில் உமது திருவுருவம் பிரமனுக்குக் காட்டப்பட்டது. (8)

தத்தம் தன்மைக்கேற்ப, சிவபக்தி கொண்டவர்களுக்கு அதற்குரிய பலன் கிட்டுகிறது. வியாச முனிவர் அதனால் சிவபெருமை கூறும் ஸ்கந்தத்தில் உங்களை இழிவு படுத்திக் கூறிவிட்டார். (9)

நடந்ததை நடந்தபடி கூறுவது, சொன்னதை விளக்கமாகத் திருப்பிக் கூறுவது, முரணாகக் கூறுவது என்று மூன்று வகையான அர்த்த வாதம் உள்ளது. அதற்காக சுவைப்படத் திரித்து கூற வேண்டியிருக்கிறது. அதனால் ஸ்கந்தத்தில் உமக்குத் தாமச குணம் என்று சொல்லியிருப்பது முரண்படக் கூறுதல் என்ற மூன்றாவது வாதத்தின்படி சொல்லப்பட்டதாகும். (எனவே அது உண்மையல்ல) (10)

பரமனே! அறிவற்றவனாக நான் இருந்தாலும் மந்திர சாஸ்திரங்களில் சொல்லப்பட்டவற்றை அப்படியே நான்

திருப்பிக் கூறுகிறேன். வியாச முனிவரின் பாகவத புராணம் உம்மைப்போற்றித் துதிக்கிறது. அத்தகைய சிறப்புகள் பெற்றவரே அடியேனுடைய துன்பங்களைப் போக்கிப் பக்தி வழியில் நடத்திக் காப்பாற்றி அருள் புரிய வேண்டுகிறேன். *(11)*

# தசகம் - 91

## பக்தியின் பெருமை

தேவதேவா! உலகங்களின் உயிரே! கண்ணா! உன் பாதங்களைப் பணிந்தால் அச்சம் விலகி ஓடுகிறது. நீ கற்றுக் கொடுத்தபடி வழிபடுபவன், கண்ணை மூடிக் கொண்டு சென்றாலும், மாயையால் அலைக்கழிக்கப்படு தில்லை. அஞ்ஞானத்தில் அகப்பட்டு அல்லல்பட்டு அகால மரணமடையும் மனிதனுக்கு உன் பாதம்தான் பயத்தைப் போக்கும் சாதனம் எனறு நம்புகிறேன். *(1)*

முழுமுதற்கடவுளே! உன்னுடைய சக்தி ஆக்கிரமிக்கும் மனம் என்னுடையது. எனவே சொல்லாலும் செயலாலும் சிந்தையாலும் இவ்வுலகில் புரிகின்ற அனைத்தையும் உமக்கே அர்ப்பணித்து விடுகிறேன். உன்னிடத்தில் சிந்தை, சொல், செயல், புலன்கள் ஆகியவற்றை ஒப்படைத்தவன், நீசனாக இருந்தாலும் நிர்மலமானவனாக இருக்கிறான். அப்படிப் பாதத்தில் பக்தி வைக்காதவன் பிராமணனாக பிறந்திருந்தாலும் உலகைத் தூய்மையாக்க முடியாது. *(2)*

ஈசுவரா! பயம் மற்றொரு இடத்திலிருந்து புறப்படு கின்றது. அந்த மற்றொரு இடமும் மனதின் கற்பனையில் எழுந்ததாகும். காரியம் காரணம் ஆகிய இரண்டும் ஒன்று என்று அறிந்தால், மனதை நிலைநிறுத்த முடியும். மாயை யால் கவரப்பட்டவன் இருவேறு உள்ளத்தால் குழம்பு

கிறான், ஆனால் மனதை உன்னிடத்தில் நிலைநிறுத்தி பக்தி செய்தால், அச்சம் அண்டுவதில்லை. (3)

தேவரே! பணத்தோடு பணம் சேருகிறது பக்தியோடு பக்தி சேருகின்றது. ஆகவே என்றென்றும் உன் அடியவர் கூட்டத்தில் இடம் பெற வேண்டும். உன் புகழ் பாட வேண்டும், கண்ணீர் சிந்தி அழ வேண்டும். அழுதும் சிரித்தும் அரற்றியும் கூவியும் பாடி ஆட வேண்டும். பற்றற்றுத் திரியவேண்டும். பித்தனாகிப் புலம்பவேண்டும். அந்த அருளை அளிக்க வேண்டும். (4)

முக்தியை அடையும் வழி பக்தியாகும். அவதார மகிமைகளை, அவதரித்த தலங்களை, லீலாவினோதங்களை திருநாமங்களைப் பக்தியுடன் பாடி பரவசப் படவேண்டும் பற்றற்றுப் பாடி ஆடிப் பித்தன் எனப் பிறர் எண்ணு வதையும் பொருட்படுத்தாது என்றென்றும் உம்மிடத்தி லேயே மனம் ஒன்றி இருக்க அருள் புரிய வேண்டும். (5)

லோக நாயகனே! பஞ்ச பூதங்களையும், படைத்த உலகங்களையும், பறவைகளையும விலங்குகளையும், மீன் களையும், மனிதரையும் பகைவரையும் நண்பரையும் உமது உருவம் எனக் கருதி தொழ அருள் புரிக. உன் சேவையில் ஈடுபட்டால், பற்றற்று, உறுதிபூண்டு பக்தி யுடன், வேறு முயற்சிகள் இன்றியே உம்மைப் பற்றிய மெய்யறிவு எனக்குக் கிடைக்கும் அல்லவா? (6)

என் மனம் உம்மிடத்தில் ஒன்றியுள்ளது; பசி, தாகத் தால் பாதிக்கப்படாமல், உன் திருவடியை நீங்காது தியானிப்பவனாக பற்றற்று விருப்பற்று, மாயையால் சிக்கி அலையாது, மதிமயங்காது, விருப்பும், வெறுப்பும் இன்பமும் துன்பமும் அற்றவனாக இருக்க அருள் புரிக. உமது பாதத்தின் பிரகாசத்தில் ஈடுபட்டு இடையறாத பக்தி கொள்ள வேண்டும். (7)

உயிர்கள் அனைத்திலும் நிறைந்தவரே! உம்மிடத்தில் பக்தியும் அடியவரிடத்தில் நேசமும், உம்மை அறியாத வரிடம் கருணையும் பகைவரிடம் வெறுப்பும் உண்டாகும் தகுதி பெற வேண்டும். அப்படி இல்லையெனில் உன் திருவுருவைத் தோத்தரிக்கும் பேறு பெற வேண்டும். அடியவர்களில் சிறந்தவனாக விளங்கும் பேறு அப்போது கிடைக்கிறது. (8)

ஜகந்நாதா! மாயையால் உன் மெய்யுருவம் புலப் படாமல், மண், நீர், காற்றாக மாறித் தோன்றுகிறது. கர்மப்பயனால், தம் வசம் இழந்த உயிர்கள் துன்பத்தில் உழல்கின்றன. அந்த மாயை என்னைக் கட்டுப்படுத்தாமல் இருக்க வேண்டும். அதற்கு ஒரே வழி இருக்கிறது. அதனை வெல்லுவதற்குள்ள ஒரே வழி உமது பாதத்தில் பக்தி கொள்வது என்று பிரபுத்தன் விதேக மன்னனுக்கு உப தேசம் செய்திருக்கின்றனர். (9)

உயிர்கள் பெறும் துன்பங்களைக் கண்டு அறிவு பெற வேண்டும். நற்குருவின் மூலமாக உமது உருவம் பற்றிய மெய்ஞ்ஞானம் பெற வேண்டும். உனது கல்யாண குணங் களையும் திருவிளையாடல்களையும் பக்தியுடன் பாடிப் பரவசம் அடைய வேண்டும். மகமாயைக் கடந்து திருவடி சரண்புகுந்து எல்லையில்லா ஆனந்தத்தை அடைய வேண்டும். குருவாயூரப்பா! அடியவனுடைய பிணிகளைப் போக்கிக் காப்பாற்றி அருள் புரிய வேண்டுகிறேன். (10)

# தசகம் - 92

## கர்மம் கலந்த பக்தி

ஈசனே! செய்யும் காரியங்கள் யாவும் பற்றற்றுச் செய்யப்பட வேண்டும் என வேதம் உரைக்கிறது. பலன் கருதாது பணிபுரிவதற்கேற்ற பக்குவ மன நிலையை உத்தம

அறிவை அளிக்க வேண்டும். மனம், மெய், மொழி ஆகிய மூன்றும் வேதத்தால் ஒதுக்கப்பட்ட செயலில் ஈடுபடக் கூடாது. அப்படிச் செய்ய நேர்ந்தால் அதனையும் உமக்கே அர்ப்பணித்து விடுவேன் இது சத்தியம். (1)

ஆண்டவரே! உம்மைத் தொழுவதே கர்மயோகம். அழகும் தூய்மையும் சத்துவ வடிவும் கொண்ட உருவத்தை கல்லில் மனதில் மணலில் அல்லது வேறொன்றில் தியானம் செய்ய வேண்டும். சக்திக்குத் தகுந்தவாறு, பூக்களாலும், நறுமணம் உள்ள பொருள்களாலும் நாள்தோறும் உமக்குப் பூசனை புரிந்து உமது அருளைப் பெறவேண்டும். (2)

பெண்களும் பேதமை படைத்தவரும் உம்மைப் புகழாமல், உம் கதை கேளாமல், இருக்கின்றனர். அவர்கள் பரிதாபத்திற்குரியவர்கள். பிராமணனாகவும், மன்னராகவும் மற்றவராகவும் பிறந்தவர்கள் உம் திருவடிப் பெருமை அறிந்தும் அறியாதவராக அணுகாதவராக உள்ளனர். பிழைப்பதற்காக யாகம் செய்கின்றனர். எடுத்து உரைத்தாலும் உம்மீது நாட்டம் கொள்வதில்லை ஆனால் குலப் பெருமையும் கர்வமும் கொண்டு அலைகின்றனர். அந்த நிலைக்குப் போகாமல் என்னைத் தடுத்துக் காப்பாற்று. (3)

பாவத்தை மறைப்பதற்காக ராமா, கிருஷ்ணா என்று கூவுகிறான். வெட்கம் கெட்டவன் பேச்சால் மெய்யாகக் கூற வேண்டியவற்றைக் கூற முடியாது போயிற்று. விஷ்ணுவை வழிபடும் வேலையற்றவன் என்று உண்மையான உமது பக்தர்களைத் தூற்றுகின்றனர். கேலிமொழி பேசிச் சிரிக்கின்றனர். அந்தக் கூட்டத்தில் என்னைச் சேர்க்க வேண்டாம். (4)

கிருதயுகத்தில் தவ முனிவனின் வெண்ணிறம் கொண்ட உமது வாமன வடிவைத் தவம் செய்து மகிழ்கின்றனர்.

திரேதாயுகத்தில் சிவந்த வடிவுடையவனாக நோற்கின்றனர். துவாபரயுகத்தில், சங்கு சக்கரம் உடைய நீல மேகச்யாமள வண்ணனாக உம்மைத் தொழுகின்றனர். இக்கலியுகத்தில் நீல வண்ணனாக உம்மைப் பாடித் துதிக்கின்றனர். (5

பரமனே! முரனைக் கொன்றவரே! கலியுகத்தில் உம்மைப் பாடித் தொழுவதே சுலபமான வழியாக இருக்கிறது. அதனால் விரைவில் உம் அருளைப் பெற முடிகின்றது. ஆகவே, மற்ற யுகங்களில் பிறந்தவர்கள் கூட கலியுகத்தில் பிறக்க விரும்புகின்றனர். வேண்டி யாவும் அளிப்பவனே; நான் செய்த புண்ணியம், இக்கலியுகத்தில் பிறந்துள்ளேன். சிற்றின்ப ஆசையைக் காட்டி என்னை ஏமாற்ற வேண்டாம். (6

ஆண்டவரே! பகவானே!! கலியுகத்தில் உமது காலம் பணியும் பக்தர்கள் நிறைய உண்டு. அதிலும் திராவிட மொழி பேசும் பகுதியில் கணக்கற்றவர் உள்ளனர். காவிரி வைகை, பொருணை ஆறுகளின் கரைகளிலும் மேற்கு நோக்கி ஓடும் ஆற்றின் கரையிலும் அவர்கள் மிகுதியாக உள்ளனர். நான் அந்தக் கரைகளில் ஒன்றில் பிறந்தவன். ஆகவே உம்மிடம் அளவற்ற பக்தி கொண்டிருக்கிறேன். என்னை ஆசை எனும் கயிற்றால் பிணைக்க வேண்டாம். உம்மீது கொண்டுள்ள பக்தி குன்றாமல் காப்பாற்று! (7

முன்னொரு சமயம் கலிபுருஷன், அறத்திற்கு தீங்கு செய்தான், அதனால் கோபம் கொண்ட பரீட்சித்து மன்னன் கலியைக் கொல்ல வாள் எடுத்தும், கலியின் குணத்தைக் கண்டறிந்து கொல்லவில்லை. கலியுகத்தில் உனக்குத் தொண்டு செய்வது நல்லப் பலன்களை அளிக்கும். பாவத்தால் பயன் கிட்டாது. கலிபுருஷம் உன் அடியவரை நெருங்குவதற்கு பயப்படுகிறான். அதனால் உன்னைத் தொழுவதற்கு முன்பாகவே அவர்களுக்கு பிணிகளை அளித்துத் துன்பப்படுத்துகிறான். அதற்காவேனும் அவனை நீர் தண்டிக்க வேண்டும் (8

புருஷோத்தமனே! கலியுகத்தில் முயற்சியின்றி முக்தியை அடைவதற்கு எட்டு வழிகளை முனிவர்கள் கூறி யுள்ளனர். அவை கங்கை சீதை, காயத்ரி, துளசி, கோபி சந்தனம், சானக்கிராம பூஜை, ஏகாதசி, இறைவனின் திருப்பெயரில் உள்ள எட்டு எழுத்துக்கள் ஆகியவை யாகும். அந்த எட்டிலும் பற்றுள்ளவனாக என்னை மாற்றுக. (9)

பெரியவனே! குருவாயூர்க் கோமானே!! எல்லாக் கருமங்களையும் துறந்து உம்மிடத்தில் சரண் புகுந்தவன், தேவர்களுக்கும் முனிவர்களுக்கும் பித்ருக்களுக்கும் கடன் பட்டவன் அல்ல; அடிமையல்ல. அவனுடைய உள்ளத்தில் குடிகொண்டு மறைகளால் ஒதுக்கப்பட்டவற்றைப் புரியாது தடுக்கின்றனை. இது உண்மை. அதனால் என் பாவத்தால் ஏற்படும் துன்பங்களைப் போக்கிப் பக்தியை உண்டாக்கிக் காப்பாற்றி அருள் புரிய வேண்டுகிறேன். (10)

# தசகம் - 93

## இருபத்து நான்கு ஆசிரியர்கள்

உறவினரிடமுள்ள உறவைக் களைந்து, உன்னருளால் உலகத்தை மாயை என்று உணர்ந்து கைவிடவேண்டும். மயக்கத்தால் ஏற்படும் விபரீதப் போக்கால், குணம் குற்றம் பற்றிய ஞானத்தால் விதி, மற்றும் விதிவிலக்கு தோன்று கிறது. உன்னிடத்தில் அன்பு கொண்டு கெட்ட புத்தி இல்லாதவனுக்கு விதியும் விதிவிலக்கும் எப்படி ஏற்படும்? (1)

பசி தாகத்தைத் தீர்த்துக் கொள்வதற்காகவே பல உயிர்கள் மனம் கொண்டு அலைகின்றன. பகுத்தறிவு படைத்த மனிதன் அந்த உயிர்களைக் காட்டிலும் சிறந்தவன். தனக்குத் தானே உறவாகவும் பகையாகவும் இருக்கிறான். உன்னிடத்தில் அன்பு கொண்டு துன்பத்தை துடைப்பதற்குரிய வழியை கண்டறிபவனே தனக்குத் தானே உறவாகவும் அப்படி இல்லாதவன் தனக்குத்தானே பகையாகவும் மாறுகிறான். (2)

ஈசனே! முழுமுதற்கடவுளே! பெரியோனே! உன் அருள் இருந்தால் உலகத்தில் எவனும் குருவாக ஆவான். நிலத்தில் அனைத்தும் இருந்தும் அசைவற்று பொறுமையாக இருக்கிறது. அந்தப் பொறுமையை நான் கற்க வேண்டும். பலவற்றோடு கலந்து வந்தும் பற்றிற்கு இயங்கும் காற்றைப் போலாக வேண்டும். உயிர்கள் எங்கும் பரவி இருந்தும் ஒன்றிலும் பற்றில்லாமல் இருப்பதை ஆகாயம் என்ற குருவிடத்தில் இருந்து கற்றுக்கொள்ள வேண்டும். (3)

உன் அருள் பெற்று தெளிவாகவும், தூய்மையாகவும், இனிமையாகவும் நீரைப்போல் இருக்க வேண்டும். தீ அனைத்தையும் உண்டாலும் குற்றமில்லாமல் இருப்பதைப் போல் நானும் இருக்க வேண்டும். மரக்கட்டைகளில் இருக்கும் தீயை போன்று எல்லா உடல்களிலும் என் உயிர் இருப்பதாகஉணரவேண்டும்.சந்திரனின் கலைகள் தேய்ந்து வளர்வதைப்போல் வளர்ச்சியும் தேய்வும் உடலுக்கே உண்டு, ஆனால் ஆன்மாவுக்கு இல்லை என்பதை அறிய வேண்டும். நீரில் சூரியனும் உடலில் உயிரும் வேறு வேறாகத் தோன்றினாலும் ஒன்றே என்று உணர வேண்டும். (4)

ஈசனே! வேடனால் கொல்லப்பட்ட தன் குஞ்சுகளை நினைத்து சஞ்சலப்படும் பறவையைப்போல் நான் இருக்கக்

கூடாது. மலைப்பாம்பைப்போல் கிடைத்ததை உண்டு பசியைத் தணித்துக்கொள்ள வேண்டும். கடலைப்போல் ஆழமாகவும் கம்பீரமாகவும் இருக்க வேண்டும். நெருப்பில் வீழ்ந்து மடியும் விட்டிலைப் போல் பெண் மோகத்தில் வீழாமல் இருக்க வேண்டும். மலரில் தேன் உண்ணும் வண்டைப் போலப் பக்தியெனும் தேனைச் சேகரிப் பவனாக இருக்க வேண்டும். செல்வத்தைச் சேர்த்தாலும் அழிவை நோக்கிச் செல்லாமல்இருக்க வேண்டும். (5)

ஆண்டவனே! பெண்ணாசையால் பீடிக்கப்பட்டுத் தடுமாறக் கூடாது. சேமித்து வைத்த செல்வத்தை மற்ற வன் கவர்ந்து செல்வான். அந்தச் சேகரிப்பிலும் கவர்வதி லும் என் மனம் செல்லக் கூடாது. மானைப் போலகீழ்த்தர மான பாடல்களில் மயங்கக் கூடாது.மீன்போல உணவைத் தேடி நாட்டம் கொண்டு அலையக் கூடாது. பங்களை என்பவளைப் போல ஆசையற்றுத் துயில வேண்டும். மீன் குத்திப் பறவைபோல் துன்பம் தராது இருக்க வேண்டும். (6)

இறைவனே! குழந்தையைப் போல் கர்வமற்றிருக்க வேண்டும். கன்னியின் கைகளில் மிஞ்சியுள்ள ஒரே வளை யலைப் போல தனித்தன்மையுடனும் சண்டை சச்சரவு இன்றியும் வாழ வேண்டும். அம்புகளைச் செய்யும் கொல் லன் அரசனையும் ஏறிட்டுப் பாராது இருத்தல் போல உம்மிடத்தில் பக்தி பூண்டு மற்றெதிலும் சிந்தையற்றிருக்க வேண்டும். எலி வளையில் குடிபுகும் பாம்பைப் போல மற்றவர் இல்லத்தில் வாழ வேண்டும். (7)

உன்னால் படைக்கப்பட்ட உலகம் உன்னிடத்திலேயே ஒன்றி விடுகிறது என்பதனை சிலந்தி பூச்சியிடம் கற்றுக் கொள்வேன். உன்னை எப்பொழுதும் நினைத்திருப்பது உன் உருவம் பெற வழி என்பதைக் குளவியிடம் அறிய

வேண்டும். என் உடல் இழிந்த பொருளாக சாம்பலாக மாறத் தக்கது. துன்பம் மூட்டும் பிணிகளால், ஞானமும் பற்றின்மையும் உண்டாகிறது. அதனால் என் உடலே என் குரு என்ற உண்மையை அறிகிறேன். (8)

குருவாயூரப்பா! தலைவனே! விந்தையிலும் விந்தை! என் உடல்மீது கொண்டுள்ள பாசத்தை விலக்க வேண்டும். உடல் மேல் கொண்ட இச்சையால், மனை, செல்வம், மனைவி என்று பற்றுக் கொண்டு நிலை தடுமாறி உமது திருவடியை மறக்கின்றனர். அந்த உடல் அழிந்த பின்னர் நாய்க்கும் நெருப்புக்கும் உணவாகிறது. நம்மால் கட்டுப் படுத்த முடியாத உடலின் ஏதேனும் ஒரு பகுதியாவது உம்மைநாடி செல்வதில்லை. (9)

தாமரைக் கண்ணா! குருவாயூர்க்கோமானே! உடல் பற்றை மாற்ற முடிய வில்லையெனில், இப்பிறவியிலேயே பிணிகள் அளித்து இவ்வுடலைக் குன்றச் செய்து, உன் திருவடித் தாமரைகளில் என் மனம் ஈடுபடச் செய்ய வேண் டும். பல பிறவிகள் எடுத்து பின்னர் பிராமணனாக பிறந்திருக்கிறேன். இதனைச் சிற்றின்பத்தில் தள்ள வேண் டாம். அடியேனைக் காப்பாற்றி அருள் புரிய வேண்டு கிறேன். (10)

## தசகம் - 94

## மெய்ஞ்ஞானத்தின் தோற்றம்

உன் உருவம் ஐம்புலன்களிலும் மாறுபட்டது எங்கும் நிறைந்தது. விருப்பு வெறுப்பின்றிச் செய்த கருமங்களா லும் நல்ல குருவாலும் ஞானம் பெற்றவர்கள் அதனை உணர்கின்றனர். பலவகை விறகுகளில் பல்வேறு வகை

யான தோற்றங்களில் நெருப்பு எரிகிறது. அதேபோல் பல் வகைத் தோற்றம் உடையவனாகத் திகழ்கின்றீர். அப்படி இருப்பது பிரக்ருதியின் கர்மங்களால் உண்டானதாகும். (1)

குரு என்கின்ற அடிக்கட்டை கொண்டு சீடன் என்ற மேல் கட்டையைக் கடைந்தால் மிகத் தெளிவான ஞானம் என்று தீப்பொறி பிறக்கிறது. அந்தத் தீ, கருமங்களின் தொகுப்பு, பற்று ஆகிய இரண்டையும் தோற்றுவித்த உடல் உலகம் என்ற மயக்கம் ஆகிய காட்டை எரிக்கின்றது எரிப்பதற்குரிய பொருள் இல்லையெனில் அத் தீ அணைந்து விடுகிறது. அந்நிலையில் உன் உருவம் தோன்று கிறது. (2)

துன்பங்கள் அனைத்தையும் போக்குவதற்குரிய ஒரே வழி உனைச் சரண் புகுவதாகும். ஆயுர்வேத மருந்துகளும் நீதிநூல்களும், அறவழிகளும், அஷ்டாங்க யோகமும் துன்பத்தை அடியோடு ஒழிப்பதில்லை. வேறு வழிகளும். செல்வம், காலம் ஆகியவையும் அப்படிச் செய்வதில்லை, கர்மத்தின் பலனைப் பெற்றவர்களும் கர்வத்தால் தாழ்ந்து விடுகின்றனர். அப்போது துன்பத்தை அடைகின்றனர்.(3)

பத்மநாபா! வரதா! எளியார்க்குரியவனே! அருட் கடலே! இரண்டாயிரம் கோடி ஆண்டுகள் முடிந்த பின் னும் பிரமன் அச்சத்தால் சத்தியலோகத்தில் மகிழ்வோடு வாழ முடியவில்லை. வைகுண்டத்தைக் காட்டிலும் அச்சம் இல்லாத உலகம் வேறில்லை. அறம் தவறியவர் அழி நரகில் உழல்வதை அறிவேன். என்னுடைய தளைகளை அறுத்து என்னை விடுவித்துக் காப்பாற்ற வேண்டும். (4)

இறைவனே! உன்னை நினைத்து உன்னிடத்தில் ஒன்றி விட்ட எனக்குப் பாசப் பிணைப்பும் முக்தியும் இல்லை

அவை உன் மாயையின் ஞானத்தில் உருவெடுத்தவையாகும். கனவுக்கும் நினைவுக்கும் நிகரானவை. பற்றுள்ளவனுக்கும் பக்திமானுக்கும் ஜீவன் முக்தனுக்கும் உள்ள வேறுபாடு அவ்விதமானதுதான். உடலெனும் மரத்தில் இருப்பவன் சிற்றின்பக் கனிகளைச் சுவைத்து அழிகிறான். ஜீவன் முக்தன் அத்தகைய சிற்றின்பச் சுவையில் ஈடுபடுவதில்லை. (5)

விஷ்ணுவே! ஜீவன்முக்தனின் நிலை இத்தகையது என்பதால் என்ன இலாபம்? மனத்தூய்மையற்றவனுக்கு அந்நிலை கிட்டாது. பக்தி ஒன்றே மனதைச் சுலபத்தில் தூய்மைப் படுத்தக்கூடியது. ஆகவே உன்னைச் சரணடைவதற்கு உறுதியாக பக்தி வேண்டும். அந்தப் பக்தியால் விரைவாக குரு உபதேசம் பெற்று ஜீவன் முக்தனாக வேண்டும். (6)

வேதங்களைக் கற்ற பின்னரும் பலர் உம்மை அறிய முடியவில்லை. கன்று ஈனாத மலட்டுப் பசுவைப் போல் வெறும்வேதச்சொற்களை உரைத்துப் பயனடைவதில்லை. மனங்கவரக் கூடியதும், பாவத்தைப் போக்கக் கூடியதும் உமது திருவிளையாடல்களை உரையாததும் திருஅவதாரங்களையும் சச்சிதானந்த சொரூபத்தையும் பற்றி உரைக்காத வேதத்தின் பின் செல்லாமல் என்னைக் காப்பாற்ற வேண்டும். (7)

முழுமுதற்கடவுளே! சிசுபாலனை அழித்தவனே! உன் உருவம் என்ன? பெருமை என்ன? என்பதை அறியேன், இருந்தாலும் உம்மை வழிபடுவதைத் தவிர வேறொன்றையும் விரும்பவில்லை. உமது ஆனந்த வடிவங்களையும் அடியார் பெருங்கூட்டத்தையும் பார்க்கப் பார்க்க, நானும் உம்மைத்தொட்டுப் பார்க்க ஆசைப்படுகிறேன். தொழுவதிலும், தொண்டு செய்வதிலும் போற்றிப் பாடுவதிலும் என் மனம் என்றென்றும் செல்ல வேண்டும். (8)

தேவாதிதேவனே! என்னுடையவை என்றுள்ள யாவையும் உமக்கே அர்ப்பணிக்கின்றேன். உனக்கு அடிமையாக ஏவல் செய்வேன். உம் கோவிலைத் தூய்மைப்படுத்திப் பல வகைத் தொண்டாற்ற விரும்புகிறேன். சூரியன். நெருப்பு, அந்தணன், உயிர் ஆகிய நான்கு கைகளோடு விளங்கும் உம் உருவத்தை வணங்குவேன். உள்ளத்தை உருகச் செய்யும் பக்தி யோகத்தில் ஈடுபட விரும்புகிறேன். (9)

கண்ணா! உம்மோடு இணையும் முக்தி, கொடை. யாகம், நோன்பு, நியமம், தவம் மெய்ஞ்ஞானம், யோகம் ஆகியவற்றால் அடைய முடியாதது. அது பேரின்ப வடிவானது. அதனை நற்செயல் பலபுரிந்த கோபியர் உமது உறவால் அடைந்தனர். பல பக்தர்கள் இருப்பினும், கோபியரின் பக்தியையே ஆட்கொண்டீர். உம்மிடம் எனக்குள்ள பக்தி உறுதிப்படுத்த என் பிணிகளை போக்கி அடியவனைக் காப்பாற்றி அருள் புரிய வேண்டுகிறேன். (10)

## தசகம் - 95

## தியான யோகம்

உலகத்திற்கு மூலமாக உள்ள முழுமுதற் பெருமானே! ஆரம்பத்தில் உயிருடன் கூடிய இரண்யகர்ப்பன் உடலை அடைகின்றீர். பிறகுஉயிரின் தன்மையை அடைகின்றனை. பிறகு மாயையால் ஈர்க்கப்பட்டு அலைக் கழிக்கப்படுகின்றீர். பிறகு பக்தியாக மாறிய சத்வ குணத்தால், ராஜஸம் தாமசம் ஆகியவற்றினின்றும் விடுபட்டு, இறுதியில் சமத்துவ குணத்தையும் கைவிட்டு, ஒன்றினாலும் கட்டுப்படாத நீயாகவே நான் இருக்க விரும்புகிறேன். (1)

பெரியோனே! சத்துவ குணத்தின் ஆக்கத்தால், சிற்றின்பத்தில் ஈடுபாடு குறைகின்றது. தாமச குணமும் ராஜஸ குணமும் மேலோங்கும் போது, சிற்றின்பச் சுவையும் ஈடுபாடும் கூடுகிறது. அதனால் மனமும் குணங்களும் கலந்து உறவாடுகின்றன. அவற்றைக் கடந்து, உம்மிடத்தில் உள்ள பக்தி நிலை மூலம் உம்மைச் சரண் புகுவதே உத்தமம் என்று பரமஹம்ச வடிவில் சனகன் முதலியவர்க்கு உபதேசம் செய்தீர். (2)

கண்ணா! கர்மத்திற்கேற்ப இன்பம் கிட்டும் என வியாசர் முதலியவர்கள் கூறியுள்ளனர். அவற்றால் கிடைக்கும் இன்பம் பெரிதல்ல. அதுவும் நிலையானதல்ல. உமது நண்பரான உத்தவருக்கு, "இன்பம் கிட்டுவதற்கு உரிய வழி பக்தி ஒன்றே" என்று உபதேசம் செய்தீர். சிற்றின்பத்தை நாடுவோர்க்கு உன் பக்தியால் கிடைக்கும் பேரின்பத்தைப் பற்றி என்ன தெரியும். (3)

நீருக்கு நடுவே உள்ளவனுக்குப் பார்க்கும் இடமெல்லாம் நீராகத் தெரியும். உம்மிடம் பூண்ட பக்தியால், ஆசையை ஒழித்து மனம் மகிழ்ந்திருப்பவனுக்கு இவ்வுலகத்தில் எல்லாத் திசைகளும் இன்பமயமாகவே இருக்கும். அத்தகைய பக்தனுக்கு இந்திரலோகத்தில் கிடைக்கும் இன்பங்கள் வேண்டாம். அது மட்டுமின்றி, தானாகவே வந்தடையும் முக்தியைக் கூட அவன் விரும்புவதில்லை. (4)

புலன்களைக் கட்டுப்படுத்தாத பக்தன் சிற்றின்பத்தில் அல்லல்படுகிறான். பக்தியால் பலம் பெற்றவனை விட்டுச் சிற்றின்பங்கள் சிதறி ஓடுகின்றன. எரியும் நெருப்பு மரக் கட்டைகளைப் பொசுக்குவது போல, உம்மிடம் பூண்ட பக்தி, பாவங்களை நாசம் செய்கின்றது. புலன்களின் ஆதிக்கம் அடக்கப்பட்டு விடுகிறது. (5

உள்ளத்தில் பரிவும், உடலில் துடிப்பும் கண்ணிலே நீரும் இல்லையென்றால் மனம் தூய்மை அடையாது. பக்தி யில்லை என்றால் தவமும் ஞானமும் பயன்படாது உம் வரலாற்றைச் சுவைப்பதே ஆன்மாவைத் தூய்மைப் படுத்துகிறது. உண்மைத் தத்துவத்தை அறியும் ஞானம் பிறக்கிறது. அதனைத் தர்க்க வாதத்தின் மூலம் அறிய முடியாது. (6)

உம்மைப் பற்றித் தியானம் செய்யக் கற்றுக்கொள்ள வேண்டும். உடலைச் சமநிலையில் இருத்தி, சுகாசனத்தில் அமர்ந்து, புருவ மத்தியில் கண்களை நிறுத்தி பூரகமாக மூச்சை அமைத்து ஒன்றன்பின் ஒன்றாக சூரியன் சந்திரன், தீ ஆகியவற்றை தியானிப்பேன் பின் நீருண்ட மேகம் போல் உள்ள உன் உருவத்தை அவற்றின் நடுவில் இருத்தி தியானிப்பேன். (7)

கறுத்து அழகிய கேசம் கவினுடன் காட்சி தருகிறது. காதுகளில் மகர குண்டலங்கள்; மார்பில் காட்டுப் பூக்களின் மாலை; முத்துமாலை கௌஸ்துப மணி ஒளி வீசிப் பிரகாசிக்கிறது. ஸ்ரீவத்சம் என்று மரு அடையாளமாக அமைந்துள்ளது, அழகிய நீண்ட கைகள் சிற்றிடை தரித் துள்ள பட்டுப் பீதாம்பரம்; வனப்பான தொடைகள்; கால்கள்; தாமரை போன்ற பாதங்கள் ; இத்தகைய அழகில் உம்மை தியானிப்பேன். (8)

உமது அங்கங்கள் ஒவ்வொன்றிலும் என் மனம் ஒன்றி யுள்ளது. புன்முறுவல் பூத்த அழகு வதனத்தைத் தாமரை மலரில் காண்கின்றேன். அந்த முகத்தில் ஒன்றிவிட்ட மனம் ஒப்பற்ற சச்சிதானந்த வடிவான பிரமத்தில் செல்லு கின்றது. அடிக்கடி உம்மை அப்படி தியானிக்கும் யோகத் தில் ஆழ்ந்திருப்பேன். (9)

முரஹரி! குருவாயூர்க் கோமானே! அஷ்டமாசித்திகளும் தொலைவில் உணர்தலும் ஒன்றையொன்று முந்திக் கொண்டு எனக்குக் கிடைத்து விடும். ஆனால் அவை உம்மை அடைவதற்கு தடையாக இருப்பதால் அவற்றை நான் பொருட்படுத்த மாட்டேன். இன்பம் நிறைந்த உம்மிடத்தில் ஈடுபட விரும்புகிறேன். அடியேனைக் காப்பாற்றி அருள்புரிய வேண்டுகிறேன். (10)

# தசகம் - 96

## இறைவன் பெருமை - ஞான யோகம்

பெருமை மிக்கவனே! லோக நாயகனே! நீரே உலகில் உயர்ந்த பிரமம்; எழுத்துக்களில் அகரம் மந்திரங்களில் பிரணவம்; மன்னர்களில் மனு; முனிவர்களில் பிருகு; தாரகன்; அரக்கர்களில் பிரகலாதன்; மிருகங்களில் காம தேனு; பறவைகளில் கருடன்; பாம்புகளில் அனந்தன் ஆறுகளில் கங்கை. (1)

அந்தண பக்தர்களில் பலிச் சக்கரவர்த்தி; யாகங்களில் ஜபயாகம்; வீரர்களில் அருச்சுனன்; பக்தர்களில் உத்தவர்;வல்லவர்களின் வலிமை; ஒளிமிக்கவர்களின் ஒளி, பெருமைக்கு எல்லையே இல்லை. திறந்த பொருட்கள் அனைத்தும் நீரே. உயிரும் நீர்; உடலில் முதல் காரணமும் நீர். நீவிர் இல்லாத பொருள் இவ்வுலகில் ஒன்றுமே இல்லை. (2)

நான்கு வருணங்கள், ஆசிரமங்கள், அறவழி நிற்கும் அறிஞர்கள் அனைத்தையும் உமக்கே ஒப்படைத்துள்ளனர். பக்தியுடன் செயல்படுகின்றனர்; பற்றின்மை ஏற்படும் போது அவற்றை விட்டு விடுகின்றனர். சச்சிதானந்த

வடிவமே! வேறு வேறாக தெரிகின்ற பொருள்கள் யாவும் வெவ்றோனவை அல்ல; யாவற்றிற்கும் காரண மாக இருப்பவர் நீர்; ஆனால் உமக்குக் காரணம் ஒன்று மில்லை. யாவற்றிலும் சிறந்தவர்; தூயவர்; இதனை அறிந்தவர் ஞானம் பெற்றவர்கள். (3)

உம்மை அடைய இவ்வுலகில் மூன்று மார்க்கங்கள் உண்டு; அவை, ஞான யோகம் கர்ம யோகம் மற்றும் பக்தி யோகம் ஆகும். சிற்றின்பங்களை வெறுத்து ஒதுக்கி யவர்களுக்கு ஞானயோகம் சிறந்தது. சிற்றின்பத்தை விட்டு விலக முடியாதவர்களுக்கு கர்மயோகம் ஏற்றது. சிற்றின்பத்திலும் அதிக ஈடுபாடு கொள்ளாதவர்களுக்கும் அதனைத் துறக்க இயலாதவர்களுககும் பக்தி யோகமே ஏற்றது. (4)

பகவானே! ஞானமும் பக்தியும் முற்பிறப்பில் செய்த நல்ல கருமங்களால் கிடைக்கின்றன. சுவர்க்கவாசியும் நரகவாசியும் உலகத்தில் பிறப்பதையே விரும்புகிறான். உடல் வாழ்க்கை எனும் கடலைக் கடப்பதற்குரிய படகாக இருக்கிறது. நல்வினையால் அதில் புகுந்துள்ள என்னை யும் படகோட்டியான குருவின்மூலம் காற்றாக இயக்கிக் கரை சேர்க்க வேண்டுகிறேன். (5)

அறிவை மட்டும் பயன்படுத்துபவர்கள், உபநிஷதங் களும் சாத்திரங்களும் விளக்கிக் கூற முடியாத ஒன்றைப் பிரமம் என்று ஆராய்ச்சி செய்து துன்பப்படுகின்றனர். அவர்கள் பேரின்பத்தை அடைவதற்கு பலப்பல பிறவி களை எடுக்க வேண்டியிருக்கிறது. கரும யோகத்தாலும் முக்தியைச் சுலபத்தில் எட்டிப் பிடிக்க முடியவில்லை. ஆரம்பத்திலிருந்தே பக்தியோகம் உள்ளம் கவர்ந்து உன்னை விரைந்து அடைவதற்கு வழிகாட்டுகிறது. அத்தகைய பக்தியோகம் என்னிடம் வளர்வதற்கு அருள் புரிய வேண்டும். (6)

அறிவுக்காக அரும்பாடுபடுவதை வியாசர் கண்டிக்கிறார். பிரமத்தின் உண்மையைக் கேட்டு உமது பாதங்களில் பக்தி பூண்டவனுக்கு எட்டும் தூரத்தில் சுவர்க்கம் காத்திருக்கிறது. உள்ளம் உறுதியாக இல்லை என்றால் பக்தியோகத்தாலும் பயன் இல்லை. உமது அருளாலும் அழகு வடிவாலும் முறையான பயிற்சியாலும் அதனை விரைவாகச் செய்ய முடியும். (7)

லோக நாயகனே! கருமயோகத்தில் மனம் ஈடுபடாமல் உமது புராணக் கதைகளிலே பற்றுக் கொண்டுள்ளேன். ஆனால் ஆசைகளை அகற்ற முடியவில்லை. அதனால் குற்ற நெஞ்சம் குறுகுறுக்க ஆசைகளுக்கு இடையே உம்மிடம் அன்பு கொண்டு நெஞ்சில் பக்தி செலுத்தி வருகிறேன். என் உள்ளத்தில் தாங்கள் நிறைந்திருக்கும் போது பற்றுகள் தாமாகவே விலகி விடும் அல்லவா? (8)

ஒரு சமயத்தில், ஒரு பிராமணன் மிகவும் கஷ்டப்பட்டு செல்வம் சேர்த்தான். அந்தச் செல்வம் அழிந்ததால் வெறுப்படைந்து தூய மனம் பெற்றான். மக்கள் கூட்டம் துன்பப்படுத்தியபோது, 'என் மனம்தான் துன்பத்திற்கு மூலகாரணம்; மக்களோ, காலமோ, கருமமோ கிரகங்களோ அல்ல. மனம்தான் யாவற்றையும் செய்யக்கூடியது. செய்கின்றது!' என்றான். பிறகு மனச்சாந்தி பெற்று உம்மை அடைந்தான். அந்த மன நிம்மதியை எனக்கும் அருள் புரிக! (9

குருவாயூர்க்கோமானே! ஒரு காலத்தில் புரூரவசு என்ற மன்னன், ஊர்வசியிடம் மையல் கொண்டான். அவளுடன் தொடர்பு கொண்டு நீண்ட காலம் இன்பம் பெற்றான். பிறகு காமம் நீங்கி, பெண்ணாசை மிகவும் கேவலமானது என்று தெளிவு பெற்றான். உம்மிடம்

பக்தி செலுத்தினான். வேண்டுவன பெற்று இன்பம் அடைந்தான். பற்றறுத்தப் பிரமனே! பக்த கோடிகளில் ஒருவனாக என்னை மாற்றி அருள் புரிய வேண்டுகிறேன். (10)

# தசகம் - 97

## மார்க்கண்டேயர் கதை

சத்துவம், ராஜசம், தாமசம் ஆகிய மூன்று குணங்களின் அடிப்படையில் அறிவு, பற்று, செய்பவன் செயல், இன்பம், உணவு ஆகியவை அமைந்துள்ளன. அவற்றிற்கு அதனால் பற்பல உருவங்கள் உண்டாகின்றன. உயர்ந்தவை தாழ்ந்தவை இடைப்பட்டவை என்ற நிலைகள் ஏற்படுகின்றன. உம்மையும் தூய்மையான தவங்களையும் வணங்குபவனுக்கு தீ குணங்கள் இருப்பதில்லை. அப்படி வணங்குவதால் அவன் விரைந்து முக்தி அடைகிறான் (1)

உம்மிடத்தில் மனதை வைத்து இயல்பாக உலா வருவேன். உமக்காகவே ஒவ்வொன்றையும் புரிவேன். உமது பக்தர்களால் அன்றும் இன்றும் அவர்கள் பெற்ற பேற்றை நானும் பெறுவேன். தீயவரிடமும், திருந்தியவரிடமும் மனிதரிடமும் விலங்கிடமும் உம்மையே காண்பேன். தொழுவேன். (2)

பகவானே! தீயவன், திருந்தியவன் விலங்கு ஆகியவரிடையே நீர் இருப்பது விளங்கும் வரையில் அப்படிச் செய்வேன். வழிபடுவேன். எங்கும் உயிர் ஒன்றே என்ற ஞானம் பெற்றவுடன், நான் நீயாகவே மாறி விடுகிறேன். தொடரும் இயல்பான கருமத்திற்கு அழிவு இல்லை.

அதனால் எவ்வகையாலும் உள்ளம் கவரும் பக்தி மார்க்கத்தை எனக்கு அருள வேண்கிறேன். (3)

பக்தி யோகத்தை உறுதிப்படுத்த நீண்ட ஆயுளும் ஆரோக்கியமான உடலும் பெற வேண்டியுள்ளது. உன் திருவடி மருந்து அதற்கு அருள் கூட்டும். மார்க்கண்டேயனுக்கு பன்னிரண்டு ஆண்டுகள்தான் வயது என்று ஜோதிடர் கணித்த முடிவு. இறைவனிடம் பக்தி கொண்டு செய்த பூஜையால் மாற்றப்பட்டதல்லவா? (4)

நீண்டநாள் உயிர் வாழும் பேறு பெற்ற மார்க்கண்டேயன் உமது பக்தன். ஒப்பில்லா இன்பத்திற்கு ஆசைப்பட்டு, புஷ்பத்திரை என்ற நதிக்கரையில் பல ஆண்டுகள் தவம் செய்தான். இந்திரனால் அவனது தவத்தைக் குலைக்க அனுப்பப்பட்ட மான், மனோகரமான தென்றல் தெய்வலோக மங்கையர் அவனை ஒன்றும் செய்ய முடிவதில்லை. யோகப் பெரு நெருப்பால் எவரையும் கண்டு மயங்கவில்லை. உமக்கு அடியவராக இருப்பவரை எவர்தான் வெற்றிக் கொள்ள முடியும்? (5)

நரன் என்று தோழனுடன் நாராயணன் ஆக நீரும் மார்க்கண்டேயனை நெருங்கினீர்கள் தவத்தில் இருந்த மார்க்கண்டேயன் மனதை பலவிதமான வரங்களை அளிப்பதாக உறுதி கூறியும் அசைக்க முடியவில்லை. பக்தி அவன் மனதை நிறைத்ததால் மற்றவைகளை அவன் விரும்பவில்லை. ஆனால் உமது மாயையைக் காண விரும்பினான் அதனால் ஏற்படக்கூடிய துன்பத்தை அறியாததால் அதனை வேண்டினான். (6)

விரைந்து நீங்கள் மறைந்ததும் ஊழிப் பெரு வெள்ளம் பெருக்கெடுத்து ஓடிவந்தது. வானம் சீறி மழை பொழிந்து ஏழு கடல்களும் நிரம்பி வழிந்தன. அந்த வெள்ளத்

தில் சிக்கித் தவித்தான் மார்க்கண்டேயன். அப்பொழுது ஆல் இலையில் சிறு குழந்தையாகப் பள்ளி கொண்டு கால் கட்டை விரலை வாயில் சுவைத்தபடி, ஒன்றுமறியாத வரைப் போல யோகத்தில் ஆழ்ந்திருப்பதை மார்க்கண்டேயன் கண்டான். (7)

சிறந்த முனிவரான மார்க்கண்டேயர், உம்மைக் கண்டு மெய்சிலிர்த்து, அருகில் வந்து நின்று, மூச்சுக் காற்றால் ஈர்க்கப்பட்டு உள்ளே சென்று அண்டசராசரங்கள் அனைத்தையும் கண்டு மீண்டும் வெளியே திரும்பி வந்து, உமதுக் கடைக்கண் அருள் பெற்று ஆரத்தழுவ விரும்பிய போது உமது உருவத்தை மறைத்துக் கொள்ள மீண்டும் தன் ஆசிரமம் சேர்ந்தார். (8)

உமது பக்தரான மார்க்கண்டேயரைக் காண்பதற்குச் சிவன் பார்வதியுடன் சென்றார். அவருக்கு முதுமை சிறப்பு இல்லாத பெரு வாழ்வை வரமாகத் தந்தார். உம்மைத் தொழுவதாகவே அப்படிச் சிவன் அருள் புரிந்தார். மும்மூர்த்திகளில் உருவம் ஆன நீவிர் அனைத்திற்கும் தலைவர் என்பது மெய்யாகிறது. (9)

குருவாயூரப்பனே! சத்தியலோகம், பிரமலோகம் விஷ்ணுலோகம், சிவலோகம் என்ற மூன்று கூறுகளை உடையது. அவை ஒன்றன் மீது ஒன்றாக உள்ளன. வைகுண்டம், மாயையாலும் அதன் விகாரங்களாலும் பீடிக்கப்படாமல் அவற்றுக்கு மேலே இருக்கிறது. வைகுண்ட உலகத்திலும், கோகுலத்திலும் தூய சத்துவ உருவமாகச் சச்சிதானந்த வடிவமாகக் காட்சி தருகின்றீர். அடியவனை எல்லாப் பிணிகளிலிருந்தும் காப்பாற்றி அருள் புரிய வேண்டுகிறேன். (10)

# தசகம் - 98

## பிரமத்தை வழிபடுதல்

கண்ணா! இந்த உலகம் உம்மால் தோற்றுவிக்கப் பட்டு காப்பாற்றப்பட்டு உம்மிடத்திலே ஒடுங்குகின்றது. உலகமாக இருக்கும் நீ உலகத்தினின்றும் வேறாகவும் காட்சி அளிக்கின்றீர். உமது ஒளியினால் உலகம் இயங்கு கின்றது சொல்லுக்கும் மனதுக்கும் எட்டாத தொலைவில் இருக்கின்றீர். தேவர்களும் முனிவர்களும் கூட உமது மெய்யான வடிவத்தைக் கண்டதில்லை மற்றவர்கள் எப்படி அறிவார்? அத்தகைய சிறப்புக்குரியவரே! சிறியேன் என் வணக்கம். (1)

மகாவிஷ்ணுவே! உமக்கு பிறப்பு, பெயர், கருமம் குணம் என்று ஒன்றும் இல்லை. உலகங்களைக் காப்பதற் காக அத்தகைய மாயையால் இயக்குகின்றீர். உருவம் தாங்கி செயல்படுத்துகின்றீர். முக்தியை அளிப்பவனாகப் பேரின்பம் தருபவனாக இருக்கும் முழுப் பொருளே! உம்மை வணங்குகின்றேன். (2)

ஞானிகள், "விலங்காக, பறவையாக, மனிதனாக, தேவனாக, அரக்கனாக, ஆணாகப் பெண்ணாக, பொரு ளாக, செயலாக, சாதியாக, குணமாக இல்லாதவன் நீ. இருப்பவனும் அல்ல. இல்லாதவனும் அல்ல." என்கின்றனர். இல்லை என்றாலும் எஞ்சி இருக்கின்றீர். பல உபநிஷதங்கள் உம்மை உருவாக்க முயற்சி செய்கின் றன. அந்த உருவம் பேரின்பமயமாக இருக்கின்றது அத்தகையவரே உமக்கு என் வணக்கம். (3)

மாயையின் பிரதிபிம்பமாக இருக்கிறனை மகந்து, அகங்காரம், தன்மாத்திரை ஆகியவற்றாலும், பூதங்கள், புலன்கள் ஆகியவற்றாலும் விருப்பத்திற்கேற்ப உலகங் களைப் படைக்கின்றனை. ஆமை தன் ஓட்டிற்குள் உடலை

இழுத்துச் சுருக்கிக் கொள்வதைப் போல, அந்த உலகங்களை உம்மிடத்தே அடக்கிக் கொள்கின்றீர். அவற்றின் தொடர்பின்றித் தனித்தன்மை வாய்ந்தவராக விளங்குபவரே உமக்கு என் வணக்கம். (4)

பகவானே! கண்ணா! யாவுமாகி நின்றாய். எல்லா வகையாகவும் கருதப்படுகின்றாய். ஞானிகள் உம்மை நாத பிரமம், கர்மம், அனு என்றும் காலம் என்றும் அழைக்கின்றனர். உலகில் யாவுக்கும் காரணம் எனக் கூறுகின்றனர். உபநிஷதங்கள் தத்துவரீதியாக புருஷன் என்றும் பரன் என்றும் சித்து என்றும் ஆத்மா என்றும் குறிப்பிடுகின்றன. அந்தத் தத்துவம் உமது பார்வையினாலேயே மூலப்ரக்ருதியையும் உலகுக்கு காரணமான மாயையும் அதன் விகாரங்களையும் உண்டாக்குகிறது அத்தகைய உமக்கு என் வணக்கம். (5)

மாயை, 'சத்' உளது அல்லது குரைவது அல்லது 'உளதிலது' என்று கூறமுடியாத வகையில் இருக்கிறது. காணும் பொருட்கள் அனைத்திலும் காணப்படுகின்றன. அருட்பிரவாகம் கிடைக்கும் மொழிகளும் மாயையாக இல்லாமல் தெளிவு பெறும் தன்மை உண்டாகிறது. சம்சாரம் என்ற காட்டை அழிப்பதால் கோடரியைப் போன்று விளங்குகின்றது. அத்தகைய உமக்கு என் வணக்கம். (6)

கண்ணா! கதிரவன், தீ, காற்று ஆகியவை உமக்குப் பயந்து செயல்படுகின்றன. பிரமனும், முனிவர்களும் அப்படியே காலம் தவறாது வழிபாடு நடத்துகின்றனர். படைப்பின் துவக்கத்தில் அவர்களை உம்மிடத்தில் ஏற்றி வைத்து அதற்கு பின் இறக்கி விட்டீர். யாவற்றையும் ஆட்சி செய்யும் உமக்கு செய்யும் என் வணக்கும். (7)

சத்துவம் ராஜஸம், தாமஸம் ஆகிய மூன்று குணங்களின் அடிப்படையில் மூன்று உலகங்கள் உம்மால்

உண்டாக்கப்பட்டுள்ளன. 'அ கரம், உ கரம் 'ம' கரம் ஆகிய மூன்று எழுத்துக்களால் ஆகிய பிரணவம் [ஓம்] எனும் சிறந்த பொருளாக இருக்கின்றீர். பிரமன், விஷ்ணு சிவன் என்ற மும்மூர்த்திகளின் ஒன்றுபட்ட வடிவாக இருக்கின்றீர். ரிக், யஜுர், சாமம் ஆகிய மூன்று வேதங்களும் போற்றுகின்ற தன்மையை உடையவர். விழிப்பு, கனவு, ஆழ்ந்த உறக்கம் ஆகிய மூன்று நிலைகளையும் அறிந்தவர் திரேதாயுகம், துவாபரயுகம், கலியுகம் ஆகிய மூன்று யுகங்களில் அவதரிக்கின்றீர். மூன்று அடிகளால் உலகங்கள் அனைத்தையும் அளந்தவர். இறந்தகாலம், நிகழ்காலம், எதிர்காலம் என்ற மூன்று காலங்களிலும் இருக்கின்றீர். அத்தகைய உம்மை நான் கர்ம, ஞான, பக்தி என்ற மூன்று யோகங்களாலும் வணங்குகின்றேன். (8)

உமது உருவம் மெய்யானது, தூய்மையானது ஞானத்தோடு இருப்பது; உலக பந்தங்களிலிருந்து விடுவிப்பது; விருப்பம் அற்றது; மாற்றம் இல்லாதது; ஒப்புவமை கூற முடியாதது. எல்லாக் குணங்களுக்கும் மூலமாக இருப்பது; பிறிதொன்றை அடிப்படையாகக் கொள்ளத்தக்கது. மாசற்றது. அளவிலாப் பெருமை உடையது. பற்றற்ற முனிவர்களின் உள்ளத்தில் ஊறாது. ஒப்பில்லாப் பேரின்பம் பிரகாசமும் உடையது. சிறந்து விளங்குவது. (9)

விஷ்ணுவே! கருணைக்கடலே! குருவாயூரில் குடி கொண்ட கோமானே! உமது காலச் சக்கரம் ஓடிக் கொண்டே இருப்பது; பன்னிரண்டு மாதங்கள் என்ற சகடக் கால்களை உடையது; முன்னூற்று அறுபத்தைந்து நாட்கள் என்ற முனைகளுடையது விரைந்து சுழல்வது; உலகத்தையும் கணம்தோறும் சுழலவைப்பது. அதனால் உமது பாதத்தில் சரணம் புகுந்துள்ள எனக்குத் துன்பம் வரக்கூடாது அடியவனைப் பிணிகளிலிருந்து காப்பாற்றி அருள்புரிய வேண்டுகிறேன். (10)

# தசகம் - 99

## வேதங்கள் துதிக்கின்றன

மூன்று உலகங்களையும் மூன்றடிகளால் அளந்தீர். அதனால் அந்த உலகங்கள் செல்வச் செழிப்போடு விளங்குகின்றன. உலகங்கள் யாவையும் தாங்குபவரே! உமது ஆற்றலை யாரால் அளவிட முடியும்? உமக்கு மிகவும் விருப்பமான வைகுண்டத்தில் உமது அடியார்கள் குடி இருக்கின்றனர். அங்கு முக்தி என்ற தேன் ஆறாக ஓடுகிறது. அந்த உலகத்தை இந்த உலகத்திலேயே பெற வேண்டும். (1)

விஷ்ணுவே யாவற்றிற்கும் முதலானவர்; யாவற்றையும் படைப்பவன்; நொடிக்கு நொடி புதிது புதிதாகத் தோற்றம் அளிப்பவன்; செல்வம் நிறைந்தவன் வேள்வியில் ஆவியை அளிப்பவர்களும், அவதாரங்களைப் புகழ்ந்து பாடுகின்றவர்களும், இவ்வுலகில் மகிழ்வோடு இருப்பர். புகழடைவர். இறுதியில் விரைந்து வைகுண்டம் அடைவர். (2)

போற்றுவோரில் சிறந்த கவி இந்திரன். விஷ்ணு விளக்கியுரைக்கப்பட்டவர்; வேதங்களின் முடிவாகவும் பயனாகவும் இருப்பவர்; நீங்கள் அறிந்துள்ளபடி அவதாரங்களைப் பற்றிய கதைகளால் போற்றுங்கள்; அறிஞர்களே! அவரது திருநாமம் பேரின்பத்தைத் தரவல்லது. அவற்றைப் புகழ்ந்து பாடுங்கள். விஷ்ணுவே! உமது நாமங்களைப் போற்றிப் பாடியே பெரியோனாகிய உம்மைப் பற்றிய மெய்ஞ்ஞானத்தைப் பெறுவேன். (3)

அறம்பல புரிந்தவன்; அரிய செயல் பல ஆற்றியவன்; உரியவர்க்கு உரியவை செய்பவன்; இந்திரனுக்கு ஏவலாளைப் போலவும் தோழனைப் போலவும் பல செயல்கள் புரிந்தவன். யோக சித்தி பெற்றவர். பெருமானின் பெருமைகளை அறிவதுடன் சிறப்பான இடத்தை

யும் பெறுகின்றனர். அந்த இடத்தை விழிப்போடு போற்றி துதிபாடி அந்தணர் விளக்கம் அளிக்கின்றனர். அத்தகைய திருமாலின் பெருமைகளை எப்பொழுதும் தியானம் செய்யுங்கள். (4)

தேவனே! திருமாலே! உமது பெருமையின் எல்லையை அறிந்தவன் பிறந்ததும் இல்லை. இனிப் பிறப்பதும் இல்லை; பேரின்பத்திற்குரிய வழிகளை அறிந்த யான் உமது திருநாமத்தை ஜபித்துக் கொண்டே இருக்கிறேன். புகழ்ந்து பாடுகிறேன். நீரோ மூன்றுலகங்களுக்கும் அப்பால் உள்ள வைகுண்டத்தில் வசிக்கின்றீர். உம்மைப் போற்றிப் புகழ் பாடித் துதிக்கின்றேன் (5)

பரமனே! பாற்கடலில் பள்ளி கொண்டவரே! ஹரியே! பிரபுவே! நீரில் நடுவில் பள்ளி கொண்ட உம்மிடத்தில உயிர்கள் யாவும் ஒன்றி விட்டன. பிறப்பற்ற உமது கொப்பூழில் தோன்றிய தாமரை மலரின் இதழ்களே திசைகள்; அதன் பித்தே மேருமலை, உலகின் உருவம் என்று ஞானிகள் உரைத்துள்ளனர். (6)

அன்பர்களே! உலகைப் படைத்த பெருமாளின் உருவத்தைச்சித்திரிக்க வார்த்தைகளே இல்லை.உள்ளத்தில் குடிகொண்டிருக்கின்றது. அந்த உண்மையை நீங்கள் உணரவில்லை. பல பெயர்களிலும் உருவங்களிலும் மயங்கி உயிரைப் பேணி வளர்ப்பதிலே மகிழ்ச்சி பூண்டு அலைகின்றீர்கள். முக்தியை அளிக்குப் பெருமானிடத்தில் உங்கள் நாட்டம் ஏன் செல்லவில்லை? (7)

புருஷோத்தமனே! நீவிர் பல்லாயிரம் தலைகளும் கண்களும் கரங்களும் கொண்டவர். உலகம் முழுவதிலும் வியாபித்திருப்பவர்; உலகங்கள் அனைத்தையும் கடந்திருப்பவர். சிறப்பும் பிறப்பும் மற்று யாவுமாகி நிற்பவர். உடல், புலன்கள் யாவும் உன் இருப்பிடம். ஆனால் அவற்றினின்றும் விடுபட்டிருப்பதால், அழியாத பேரின்பத்தில் திளைக்கின்றீர். (8)

முடிவற்றவரே! மூன்று உலகங்களின் வடிவமாக இருப்பினும் அவற்றினின்றும் வேறுபட்டுத் தூய ஞானமாகத் திகழ்கின்றீர். உமது பெருமை அளவிட முடியாதது. உன் பாதமே உலகங்களாக இருக்கின்றன. அவற்றின் மேற்பகுதி பேரின்ப வடிவாக இருப்பவரே உமக்கு என் வணக்கம். (9)

குருவாயூரப்பா! கண்ணா! புலன்களால் காண முடியாதவரே! பெருமுயற்சியால் உணரக் கூடியவரே! தூய சத்துவம் ஆன பொறிகளுக்கு புலப்படக்கூடியவரே! அதனால் எளிதில் அறியக் கூடியதாக இருப்பவரே! பேரின்ப ஆற்றில் அலைகளுக்கு ஒப்பாக இருப்பவரே! உம் வடிவம் இவ்வுலகிலுள்ள அனைத்திலும் சிறந்தது. விருப்பத்துக்குரியது. குணங்களின் சுவையால் மனதைக் கவர்வது; அந்த வடிவத்தை நான் வழிபடுகிறேன். ஆகவே அடியவனைப் பிணிகளிலிருந்து காப்பாற்றி அருள் புரிய வேண்டுகிறேன். (10)

## தசகம் - 100

### தலை முதல் பாதம் வரை வருணனை

காயாம் பூவின் அழகிய ஒளி; அதன் நடுவே தெய்வீக உருவம் உடையது; வாலிபத்தின் அழகில் சிறந்தது. பேரின்பச் சுவையை ஊட்டக்கூடியதும் மயிர் சிலிர்க்க வைக்கக் கூடியதும் ஆகிய அங்கங்களைக் கொண்டது நாரதர் முதலியோராலும், உபநிடதங்கள் போன்ற அழகியராலும் சூழப்பட்டது. நான் அதனைக் கண்டு அமுதச் சுவையில் மூழ்கியுள்ளேன். (1)

உமது தலைமுடி கருமை நிறங்கொண்டது. சுருண்டு காணப்படுவது; தூய்மையானது. அழகிய மடிப்புகள்

கொண்டது, இரத்தினம் பதித்த கிரீடம் பூண்டது, கண்கள் கொண்ட மயிற் தோகைகள் உடையது; மந்தார மாலை சுற்றப்பட்டது; பிறை நெற்றி மதியைப் போல் பிரகாசிப்பது; மிக்க அழகானது. அந்த முடியையும் நெற்றியையும் காண்கின்றேன். களிக்கின்றேன். (2)

பரமனே! உமது கண்கள் இரண்டும் அருட்கடலில் அலைகளால் அசைகின்ற புருவ வனப்பால் மனதைக் கவர்கின்றன. இமையின் மயிர்கள் கறுத்துப் பிரகாசிக்கின்றன. அகன்று சிவந்த தாமரை மலரை ஒத்திருக்கின்றன. கருவிழிகள் எவ்வளவு அழகானவை; அருட்பார்வையில் விளையாட்டு அகில உலகையும் குளிர்விக்கின்றது. அத்தகைய கண் பார்வையை, வேறு தலைவனை ஏற்காது என்னிடத்துச் செலுத்த வேண்டுகின்றேன். (3)

எடுப்பாக நாசி விளங்குகிறது; இந்திரனின் நீலக்கல்லால் ஆன கண்ணாடி போன்று கன்னக்கதுப்புகள் பிரகாசிக்கின்றன. காதுகளில் பூண்டுள்ள மகர குண்டலங்கள் அசைந்து சுடரொளி வீசுகின்றன. முத்துப் பற்கள் ஒளி வீசிப் பிரகாசிக்கின்றன. கோவைப் பழம் போல் உதடுகள் சிவந்து தோற்றம் அளிக்கின்றன. புன்முறுவல் பூத்த உதடுகள் அன்பைப் பெருகச்செய்கின்றது. இவ்வாறு உமது திருமுகம் மிக்க இனிமை ஊட்டுகின்றது. அது என் உள்ளத்தில் நன்றாகக் காட்சி தரவேண்டும். (4)

உமது இருகரங்களிலும் ரத்தினம் பதித்த கடகங்கள் அலங்கரிக்க உள்ளங்கைகள் சிவந்த தளிர்போல் காட்சி தருகின்றன. அவற்றில் புல்லாங்குழலை எடுத்தால், நகங்கள் பல்வகை ஒளிவீசுகின்றன. திருமுகத்தாமரையில் குழலைச் சேர்த்து அமுத மழை பொழிந்து அகில உலகங்களையும் அந்த சுக நாதத்தால் இன்பத்தில் சிலிர்க்கும்படி செய்கின்றீர். அதனால் என் செவிகளை நனைக்க வேண்டுகிறேன். (5)

கௌஸ்துப மணிமாலையின் பிரகாசத்தால் உமது கழுத்து செந்தூர வண்ணம் கொண்டு விளங்குகிறது. மார்பில் அழகிய ஸ்ரீவத்சம் என்று மறு விளங்குகின்றது, முத்துமாலை அசைந்தாடுகிறது. வண்ண மலர்களும், தளிர்களும் வண்டுகள் ரீங்கரிக்கும் வன மாலையும் இரத்தின மாலையும் அலங்கரிக்கின்றன. இவற்றை நான் தியானம் செய்கிறேன். (6)

ஐந்து வகை மணம் வீசும் பூச்சுக்கள் உமது திருமேனியில் நறுமணத்தால் மக்களைக் கவர்கின்றன. உலகங்கள் யாவும் உம்மிடத்து ஒன்றியிருந்தும் உமது இடை சிறுத்து மெலிந்து காணப்படுகின்றது. இந்திர நிலக்கல் பதிக்கப் பட்ட பட்டாடை அணிந்திருக்கிறீர் இடையில் ஒளிவீசும் மணிகள் பதித்த அரை நாண் அணிந்துள்ளீர். சலங்கைகள் கொஞ்சுகின்றன. அத்தகைய உம்மை நாம் தியானம் செய்கின்றோம். (7)

உமது தொடைகள் அழகியவை; பருத்தவை; உறுதியானவை; மென்மையுடன் ஒளி பொருந்தியவை; திருமகளின் மனம் கவர்பவை; மக்கள் மனம் கலங்காமல் இருக்க மஞ்சள் பட்டாடையால் மறைக்கப்பட்டவை; முழங்கால்கள் இரண்டும் செப்புச் சிமிழ்களைப் போல் இருக்கின்றன. கணுக்கால்கள் அகன்று பருத்து எழிலுடன் விளங்குகின்றன. அவற்றை நான் வணங்குகின்றேன். (8)

திருவடிகளை வணங்குவதே பேரின்பம் என்ற இனிய ஒலிகளால் உரைப்பதுபோல் உள்ளன. நுனிககால் உம்மைத் தொழுவோரையும், அஞ்ஞானத்தில் மூழ்கி இருப்பவர்களையும் மனமாகிய மந்தர மலையை உயரத் தூக்கும் ஆமையைப் போல் இருக்கின்றது. கால் விரல்களின் சிவந்த நகங்கள் பிறை நிலவின் ஒளி வீசி அடியவர்களின் துன்பம் போக்கி அறியாமை இருள் நீக்கி, நலம் அளிக்க வல்லது அவற்றை நான் தியானிக்கின்றேன். (9)

குருவாயூர்க்கோமகனே! கருணைக் கடலே! கண்ணா உன் அங்கங்களில் பக்தங்களே யோகிகளில் சிறந்தவர்களுக்கு இனிமையானவை. முக்தியைப் பெற்றவர்களின் உறைவிடமானவை; பக்தர்களில் வேண்டியவற்றைத் தருவதில் கற்பக மரத்தின் தளிர் போன்றவை. அவை என்றென்றும் என் உள்ளத்தில் குடிகொண்டு, சகல துன்பங்களையும் போக்கி பேரின்பமாகிய செல்வத்தை அளிக்க வேண்டும். (10)

லோக நாயகனே! உமது பெருமையை அறியாமல் உரைத்தவற்றை பொறுத்தருள வேண்டுகிறேன். ஆயிரத்துக்கும் மேற்பட்ட தோத்திரப்பாடல்களைக் கொண்ட இந்நூல் உம் அருளைப் பெறுவதற்காகவே இருக்க வேண்டும். இந்தப் போற்றிப் பாடல்கள் நாராயணனைப் பற்றி நாராயணன் என்ற கவிஞனால் பாடப்பட்டதால் நாராயணீயம் என்ற பெயரில் இருக்கிறது. வேதங்களை அடிப்படையாகக் கொண்டு எழுதப்பட்டுள்ளது. உமது அவதாரங்களையும் திருவிளையாடல்களையும் கொண்டு துதிக்கத்தக்கவற்றை விளக்குகின்றது. அதனால் பெரியதாக நீடித்துள்ளது. இதனால் உலகில் உள்ளவர்களுக்கு நீண்ட ஆயுளும் உடல் நலமும் இன்பமும் ஏற்பட வேண்டும். (11)

முற்றும்